

॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

[ ஸ்ரீஸூக்திமாலா மலர் 8 ]

பரமகாருணிகரான

நாயனாராச்சான் பிள்ளை அருளிச்செய்த

# சதுஃச்லோகி வ்யாக்யானம்

[ ப்ரமாணத்திரட்டுடன் கூடியது ]



பதிப்பாசிரியர்:-

ஸ்ரீ உ. வே. K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி



கிடைக்குமிடம்:-

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



[ நந்தன–ளூ ஆவணி–மீ ]

விலை ரூ. 1-50 ]    1952.    [ தபாற்கூலி 30.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## முகவுரை.

[ஆள]வந்தார் அருளிய ஸ்தோத்ரரத்நத்திற்குப் பெரியவாச்சான் [பிள்ளை] தமிழிலும், வேதாந்ததேசிகர் வடமொழியிலும் வியாக்கி[யானம்] செய்தருளியிருக்கிறார்கள் என்பது ஸுப்ரஸித்தம். பட்ட[ர்] சிஷ்யரான நலந்திகழ் நாராயணச்சீயரும் ஒரு ஸ்தோத்ர[வியாக்கியா]னம் செய்திருக்கிறார் என்பது தேசிக பாஷ்யத்திலிருந்து [தெரி]கிறது. ஆனால், அந்த வியாக்கியானம் இப்போது இல்லை. [சது]:ச்லோகிக்கும் பெரியவாச்சான்பிள்ளை ஸங்க்ரஹமாகத் [தமிழிலு]ம், வேதாந்ததேசிகர் விரிவாக வடமொழியிலும் வியாக்கி[யானம்] செய்தருளியிருக்கிறார்கள். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கி[யானத்]தை முன்பே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம். பெரியவாச்[சான்பிள்]ளை குமாரரான நாயனாராச்சான்பிள்ளை மிக விரிவாகச் [சது:ச்லோ]கிக்கு ஒரு பாஷ்யம் செய்தருளியிருக்கிறார் என்பது ஸுப்ர[ஸித்தம்.] அது தெலுங்கு லிபியிலேயே அச்சிடப்பட்டிருந்தது. [இப்போ]து அதைத் தமிழ் லிபியில், ப்ரமாணங்களுக்கு ஆகாமும் [...]ம் கொண்ட ப்ரமாணத்திரட்டுடன் அச்சிட்டு வெளியிட்[டிருக்கி]றோம். ஸ்ரீவைஷ்ணவர்கள் படித்துப் பயன்பெறவேண்டும்.

[சது]:ச்லோகிக்குள்ள இம்மூன்று வியாக்கியானங்களையும் [ஒப்பிட்டு]ப் படிப்பவர்கள் பெரியவாச்சான்பிள்ளையும், அவருடைய [குமாரரு]ம் அருளிய வியாக்கியானங்கள் முற்பட்டவை என்பதையும் [தேசிகர்] அருளிய பாஷ்யம், இவ்விரண்டு கிரந்தங்களுக்கும் பிற்பட்[டது என்]பதையும், இவற்றை—முக்கியமாக நாயனாராச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தை—பல விடங்களில் தழுவியும் சில விடங்களில் [அபி]ப்ராயபேதத்தைக் காட்டியும் இயற்றப்பட்டது என்பதையும் எளிதில் [அறியலாம்]. உதாஹரணமாக ஓரிடத்தைக் காட்டுவோம். "ஈஷத் த்வத்" [என்ற மூ]ன்றாவது சுலோக வியாக்கியானத்தின் முற்பகுதியில் பிராட்[டியின் ஜக]த்காரணத்வத்திலுள்ள அந்வயம் விவரிக்கப்படுகிறது என்று பெரியவாச்சான்பிள்ளையும், அவருடைய குமாரரும் நிர்வஹித்திருக்கிறார்கள். இதை ஸேவித்த தேசிகர் 'அத்ர ப்ரளயாதிகம் விவக்ஷிதமிதி கேசித்" [இங்கு ப்ரளயாதிகளில் பிராட்டிக்குள்ள அந்வயம் சொல்லப்படுகிறது என்று சிலர் வியாக்கியானம் செய்தார்கள்.] என்று

அருளிச்செய்தார். இம்மாதிரி மற்றும் பலவிடங்களுமுண்டு. மேலே தெளிவாகும்.

ஸ்தோத்ரவ்யாக்யானத்தில் தேசிகர், பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளைப் பலகால் பருகி, அவற்றைப் பெரும்பாலும் தழுவியும், சிலவிடங்களில் அபிப்ராயவர்ணனம் செய்தும், சிலவிடங்களில் அபிப்ராயபேதத்தைத் தெரிவித்தும் ஸ்ரீஸூக்திகளைப் பொழிந்திருக்கிறார் என்பது அறிஞர்கள் அனைவரும் கண்ட உண்மை. இவ்விரண்டு வியாக்கியானங்களையும் சேர்த்துப் படிப்பவர்களுக்கு இரண்டிலும் பாடசோதனம் செய்யவேண்டிய இடங்கள் பலவுள்ளன என்று புலப்படும். 45-வது சுலோகத்தில் "ஸாத்ம்யபோகப்ரதானே" என்பதே தேசிகபாஷ்யத்தில் சுத்தபாடம் என்று பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தைக்கொண்டு நிரூபகர்கள் நிர்ணயித்திருப்பதைக் காண்க.

இம்மாதிரியே நாயனாராச்சான்பிள்ளையின் சது:ச்லோகீ வ்யாக்யானத்தையும் தேசிகர் பேரானந்தத்துடன் ஸேவித்து, அதிலுள்ளது போலவே வாக்யங்களைப் பலவிடங்களில் அமைத்திருக்கிறார் என்பதையும், பெரும்பாலும் அதைத் தழுவியே தம் வியாக்கியானத்தை இயற்றியிருக்கிறார் என்பதையும், இரண்டோரிடங்களில் அபிப்ராய பேதத்தைத் தெரிவித்திருக்கிறார் என்பதையும் நிஷ்பக்ஷபாதிகள் நன்குணர்வர். இவ்விரண்டு பாஷ்யங்களையும் சேர்த்துப் படிப்பவர்களுக்கு தேசிகர் பெரியவாச்சான்பிள்ளையிடத்திற்போலவே, அவருடைய குமாரரான நாயனாராச்சான்பிள்ளையிடமும் விசேஷமான ப்ரதிபத்தியுடனிருந்தார் என்பது விளங்கும். இவ்விரண்டு பாஷ்யங்களையும் ஊன்றிப் படித்தால், சிலவிடங்களில் ஒன்றைக்கொண்டு மற்றொன்றின் பாடங்களைத் திருத்தவேண்டியது அவசியம் என்பதை நிரூபகர்கள் நன்கு உணரலாம். சிலவிடங்களை இனிக் காட்டுவோம்.

"ஸ்ரீஸாத்வதத்திலே தனக்கு மோக்ஷப்ரதத்வமும், தேவிக்கு ஐச்வர்யப்ரதத்வமும் விபஜித்து ஸ்வயமேவ ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே" என்று நாயனாராச்சான்பிள்ளை மூன்றாவது சுலோக வியாக்கியானத்தின் முடிவில் அருளிச்செய்திருக்கிறார். தேசிகர் இந்தப் பங்க்திகளையே மூன்றாவது சுலோக பாஷ்யத்தில் பூர்வபக்ஷமாக

எடுத்துத் தம் அபிப்ராயபேதத்தை அறிவித்திருக்கிறார். அவ்விடத்து அச்சுப் பிரதிகளில் "நநு, மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்| ஸ்ரீஸாத்வதே ச ஸ்வஸ்ய மோக்ஷப்ரதத்வம், தேவாநாம் ஐச்வர்யப்ரதத்வம் ச விபஜ்ய உக்தம்" என்று பாடம் காண்கிறது. இங்கு நாயனாராச்சான்பிள்ளை தமிழில் அருளியதை அப்படியே வடமொழியில் தேசிகர் மொழிபெயர்த்திருக்கிறார் என்பது தெளிவு. ஆகையால் அவர் 'தேவிக்கு' என்றருளியதை 'தேவ்யா:' என்றே மொழிபெயர்த்திருப்பார் என்பது திண்ணம். 'தேவாநாம்' என்றிருப்பது தவறான பாடம். மேலும், இந்த ச்லோகத்தில் ஸாக்ஷாத் மோக்ஷப்ரதத்வம் தேவிக்கு உண்டா இல்லையா என்பது விவாதாஸ்பதமான விஷயம். 'இல்லை' என்பது நாயனாரின் பக்ஷம். 'இருக்கலாம்' என்பது தேசிகருடைய பக்ஷம். ஆகையால் இங்கு 'தேவாநாம்' என்று தேவர்களைச் சொல்ல ப்ரஸக்தியில்லை. ஆகையால் 'தேவ்யா:' என்றே பாடமிருக்கவேண்டும்.

மற்றோரிடத்தைப் பார்ப்போம். "(பத்மயோநிரிதம் ப்ராப்ய படந் ஸ்தோத்ரம் தத: பரம்| திவ்யம் சாஷ்டகுணைச்வர்யம் தத்ப்ரஸாதாச்ச லப்தவாந்||) (ப்ரஹ்மாதீநாம் யதாயத்தம் வைபவம் யஸ்ய ஸா ஸ்வயம்| தஸ்ய கைமுத்யநிர்த்தார்யமீச்வரத்வம் ஸ்ரிய: பதே:||) என்று ப்ரஹ்மாத்யைச்வர்யத்தோடு ப்ரஹ்மஜனகனான ஈச்வரனுடைய ஐச்வர்யத்தோடு வாசியற தத்ப்ரஸாதாதீநமாயிருக்கும்படியை ப்ரதிபாதித்ததிறே" (பக்கம் 48) என்பது நாயனாரின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள். இங்கெடுக்கப்பட்ட சுலோகங்களிரண்டும் புராண சுலோகங்கள் என்பது தெளிவு. தேசிகபாஷ்யத்தில் "ஹிரண்யகர்ப்பஸ்யாபி ப்ராஹ்மேபுராணே தததீநைச்வர்யத்வமும்" என்று தொடங்கி "பத்மயோநிரிதம்" என்னும் முதல் சுலோகத்தைப் படித்து, "ப்ரஹ்மாதீநாம்" என்ற இரண்டாவது சுலோகத்தை தேசிகருடைய காரிகையாக அச்சிட்டிருக்கிறது. இதுவும் திருத்தப்படவேண்டிய விஷயம் என்பதை அறியலாம்.

மற்றோரிடம் காண்போம். நாயனார் இரண்டாவது சுலோகம் அவதாரிகையிலும், தேசிகர் முதல் சுலோக பாஷ்யத்திலும் பிராட்டி விஷயமாக மதாந்தரஸ்தர்கள் கொண்டுள்ள அபிப்ராயங்களைக்

கண்டிக்கிறார்கள். இவ்விடத்தில் தேசிகர் நாயனாருடைய பல வாக்யங்களை அப்படியே மொழி பெயர்த்திருப்பதைக் காணலாம். "இவ்விசேஷகடாக்ஷமில்லாதார்....ஸத்வாதி விஶிஷ்டபகவான் தானே ஸ்ரீயென்பது, ஸ்த்ரீரூப நித்ய விக்ரஹாந்தர விஶிஷ்டனை அவனே இவளென்பது...." என்பது நாயனாரின் ஸ்ரீஸூக்திகள். "யே து ஸத்தாதிவிஶிஷ்டோ பகவாநேவ ஸ்ரீரிதி வா, ஸ்ரீரூபநித்ய விக்ரஹாந்தாவிஶிஷ்டஸ் ஸ ஏவேயமிதி வா...." என்பது தேசிகருடைய அநுவாதம். இங்கு "ஸத்வாதி—ஸத்தாதி" என்றும், "ஸ்த்ரீரூப—ஸ்ரீரூப" என்றும் பாடபேதங்கள் காண்கின்றன. இரண்டு பாஷ்யங்களுள் ஒன்றில் பாடப்பிறழ்வு ஏற்பட்டிருக்கிறதென்பது ஸ்பஷ்டம். எதைக்கொண்டு எதைத் திருத்துவது என்பதில் அபிப்ராயபேதம் ஏற்படலாமாகையால் இதைக் காட்டினதோடு த்ருப்தராய் நிற்கிறோம்.

இப்படியே மற்றோரிடமும் உண்டு. மூன்றுவது சுலோகத்தில் "கர்ஹிசித்" என்னும் பதத்தை விவரிக்கும்போது "இவளுடைய ப்ரபாவமும் இந்த்ராதிகள் ப்ரபாவம்போலே காலபேதபேத்யமாயிருக்குமோவென்னில்: அங்ஙனன்றிக்கே ஏகரூபமாயிருக்குமென்கிறார்" என்பது நாயனாரின் ஸ்ரீஸூக்திகள். "ஈத்ருஶஸ்ய அஸ்யா: ப்ரஸாதஸ்ய இந்த்ராதீநாமிவ காலபேதபேத்யத்வம் ச நாஸ்தீதி வ்யஞ்ஜநாய கர்ஹிசிதித்யுக்தம்" என்பது தேசிகருடைய மொழிபெயர்ப்பு. இங்கும் "ப்ரபாவம்—ப்ரஸாதம்" என்னுமிரண்டுக்குள் ஒன்று பிறழ்ந்த பாடமென்பது தெளிவு.

இனி, தேசிக பாஷ்யத்தைக்கொண்டு நாயனாரின் பாஷ்யத்தில் திருத்தப்படவேண்டிய பாடங்கள் சிலவற்றைக் காட்டுவோம். மூன்றுவது சுலோகத்தில் "காந்தா ப்ரஸாதாத்" என்னுமிடத்தை விவரிக்கும்போது "ப்ரஸாதாத்—க்ருபாவிஶேஷாதிதி யாவத்। அஸ்யா: க்வசிதபி நிக்ரஹாஸம்பவேந தந்நிவ்ருத்திரூப ப்ரஸாதாயோகாத்॥" [(ப்ரஸாதாத்) தயாவிசேஷத்தாலேயென்கை; இவளுக்கு ஓரிடத்திலும் நிக்ரஹமில்லையாகையால், நிக்ரஹநிவ்ருத்திரூபமான ப்ரஸாதம் கூடாதாகையாலே.] என்பது தேசிகபாஷ்யம். இதற்கு மூலமான நாயனாரின் வியாக்கியானத்தில் "(ப்ரஸாதாத்) தயாவிசேஷத்தாலே; அநுக்ரஹைகஸ்வபாவையான இவளுக்கு ஓரிடத்திலும் நிக்ரஹம்

ஸம்பவியாமையாலே, தந்நிவ்ருத்திரூப் ப்ரஸாதயோகத்தாலொழிய வென்கை" என்று பாடம் காண்கிறது. இந்த வாக்யங்கள் உள்ளபடி கொண்டு பார்த்தால் பொருளற்றதாயிருக்கின்றன. தேசிகருடைய அநுவாதத்தைக் கூடக்கொண்டு பார்த்தால் "ப்ரஸாதாயோகத்தால்" என்பது "ப்ரஸாதயோகத்தால்" என்று பிறழ்ந்துள்ளது என்று தெளிவாகிறது. அப்போதும் வாக்யம் அநந்விதமாயுள்ளது. "அநுக்ர-ஹைகஸ்வரூபையான இவளுக்கு ஓரிடத்திலும் நிக்ரஹம் ஸம்பவியாமையாலே தந்நிருத்திரூபப்ரஸாதாயோகத்தால் 'தயாவிஶேஷரூபப்ரஸாதத்தால் ஒழிய' என்கை" என்றோ, அப் பொருளைத் தரும் வேறு பதங்களுடன் கூடியோ இருத்தல் வேண்டும். ஓலைச் சுவடிகளைப் பார்த்து உண்மைப் பாடம் யாது என்று பெரியோர்கள் வெளியிட்டால் நலம்.

மற்றோரிடம் காண்போம். நான்காவது சுலோகத்தில் "மூர்த்தம்" என்றவிடத்தை விவரிக்கும்போது "மூர்த்தம்-ஸ்பர்ஶரூபாதியுக்தம் பரமபத பர்யங்காதி தேஶபரிச்சிந்நம் ச இத்யர்த்த:" என்பது தேசிக பாஷ்யபங்திகள். இதற்கு மூலமான நாயனாரின் வியாக்கியானத்தில் "(மூர்த்தம்) ஸ்பர்ஶரூபாதிகுணங்களோடே கூடி பரமபத பர்யந்தாதி தேஶபரிச்சிந்ந விக்ரஹமாயிருக்கை" என்று பாடம் காண்கிறது. 'பர்யங்காதி' என்பதே 'பர்யந்தாதி' என்று மாறியிருக்கிறதென்பது தெளிவு.

இதைப்போலவே மற்றோரிடமுள்ளது. நான்காவது சுலோகத்திலேயே "யதாஸுகம்" என்னும் பதத்தை விவரிக்கும்போது "யதாஸுகம்-மநுஷ்யாதிஸஜாதீயாவதாரதஶாயாமபி அஸ்ய ஸ்வாபாவிக ஸுகாதிநிவ்ருத்திர் து:க்கம் வா நாஸ்தீதி பாவ:" என்று தேசிக பாஷ்யம் காண்கிறது. மூலமான நாயனாரின் பாஷ்யபங்க்திகள் "(யதாஸுகம்) மநுஷ்ய ஸஜாதீயனாய் அவதரித்த தஶையிலும், ஸ்வாபாவிக ஸுகாதிவ்ருத்தி (सुखातिवृत्ति) யென்ன, து:க்கபாக்த்வமென்ன இவையின்றிக்கே...." என்று மாறிக்கிடக்கின்றன. "ஸுகாதி (दि) நிவ்ருத்தி" என்பதே சரியான பாடம் என்பதை இருவருடைய வாக்யங்களையும் சேர்த்துப் பார்த்தால் உணரலாம்.

இப்படி லேககப்ரமாதத்தால் பற்பல தவறான பாடங்கள் ப்ராசீந க்ரந்தங்களில் வந்து புகுந்துவிடுகின்றன. இவற்றைத் தகுந்த யுக்தி

களையும் ப்ரமாணங்களையும் காட்டித் திருத்துவதால் தோஷமில்லை. மற்றும் இரு உதாஹரணம் காட்டுவோம். தேசிகபாஷ்யம் அச்சுப் பிரதிகளில் முதல் சுலோகத்திலுள்ள "தயாம் தேவிதந்" என்னும் பதங்களை விவரிக்குமிடத்தில் "அஷ்டோத்ர ஸஹஸ்ரநாமஸு ச பட்யதே * கருணம் வேதமாதரமிதி" என்று பாடம் காண்கிறது. 'கருணம் வேதமாதரம்' என்பது ஸ்ரீ ஸஹஸ்ரநாமத்திலில்லை; அஷ் டோத்தர சதநாமத்திலேயே உள்ளது. ஆகையால் இதுவும் திருத் தப்படவேண்டிய இடமே. இம்மாதிரியே நாயனாருடைய பாஷ் யத்திலும் மூன்றாவது சுலோகத்தில் "ச்ரேய:" என்றவிடத்தை விவரிக்கும்போது "(ச்ரேய:) ச்ரேஷ்டதமஸுகம்; தத்ஸாதநஸுக்ருத விசேஷமாகவுமாய்; (ச்ரேயஸீ ஸுக்ருதம் விஷய:) என்றதிறே" என்று பாடம் காண்கிறது. இங்கு 'விஷய:' என்பது தவறென்பது கண்டவுடன் விளங்குகிறது. இப் பங்திகளையே தேசிகன் தம் பாஷ் யத்தில் "ச்ரேய:-ச்ரேஷ்டம் ஸுகம் தத்ஸாதநம் வா | 'புண்ய ச்ரேயஸீ ஸுக்ருதம் வ்ருஷ:' இதிஹி படந்தி" என்று மொழி பெயர்த்திருக்கிறார். 'வ்ருஷ:' என்பதே நாயனாரின் பாஷ்யத்திலும் சரியான பாடமென்பதை அறிகிறோம்.

நிற்க; மேலே காட்டிய பலவிடங்களிலிருந்து ஸ்ரீ தேசிகர் நாயனா ராச்சான்பிள்ளையினிடத்தில் சிறந்த ப்ரதிபத்தியுள்ளவராயிருந்தா ரென்பதும் அவருடைய வாக்யங்களைப் பற்பலவிடங்களில் அப்படியே மொழிபெயர்த்தருளியிருக்கிறாரென்பதும் தெளிவாக விளங்கும். இவ்விருவர்க்குமிடையே சில விஷயங்களில் கிரந்தரூபமான விவாதம் நேர்ந்ததுண்டு. சதுஃச்லோகீ பாஷ்யத்திலேயே இரண்டிடங்களில் இதைக் காண்கிறோம். ஆனால், அவர்கள் நண்பர்களாயிருந்தே விவாதம் செய்தார்கள் என்பது மேலே நாம் காட்டிய விஷயங்களி லிருந்து விளங்கும்.

"தேசிகருடைய பாஷ்யத்திற்குப் பின்பே நாயனாருடைய பாஷ்யம் தோன்றியதாக ஏன் கொள்ளக்கூடாது?" என்று சிலர் வாதிக்கக் கூடும். மூன்றாவது சுலோக வ்யாக்கியானத்தின் கடைசியில் "ஸ்ரீஸாத் வதத்திலே அவனுக்கு மோக்ஷப்ரதத்வமும் தேவிக்கு ஐச்வர்யப்ர தத்வமும் விபஜித்து ஸ்வயமேவ ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே" என்று நாயனார் அருளியதை அப்படியே அநுவதித்துத் தம் அபிப்

ராயபேதத்தை தேசிகர் தெரிவித்திருக்கிறாராகையால் தேசிகருடைய பாஷ்யமே பிற்பட்டது என்பதில் ஐயமில்லை. இதற்குமேல் மற்றோரிடமும் காட்டுகிறோம். நான்காவது சுலோகவ்யாக்யானத்தின் கடைசியில் அதிசயிதஸ்தோத்ரஸித்திக்காகப் பிராட்டிக்கு ஸ்வரூப விபுத்வத்தை அங்கீகரிக்கவேணும் என்று ஒரு பூர்வபக்ஷத்தைச் செய்து, "அகடிதகடநா சக்திவசத்தால் பிராட்டிக்கு ஸ்வரூபவிபுத்வத்தை ஒப்புக்கொண்டால் போதும்; அத்தாலேயே அதிசயித ஸ்தோத்ரம் ஸித்திக்கும்" என்று நாயனார் ஸமாதானமருளியிருக்கிறார். "காடோபகூடாநி" என்றவிடத்தில் சொல்லப்படும் ஸ்வரூப ஸம்பந்தம் பிராட்டிக்கு ஔபாதிகமாகவாவது விபுத்வத்தை ஒப்புக்கொண்டாலொழிய இதர ஜீவவைலக்ஷண்யத்தைக்காட்டும் ஸ்தோத்ரமாகாது என்பது நாயனாரின் திருவுள்ளம். தேசிகர் இவ்வர்த்தத்தை அப்படியே அநுவதித்து, "இதர வைலக்ஷண்யத்தைக் காட்டும்படியாகவே ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்று அவசியமில்லை; ஸர்வேச்வரனும் நித்யமுக்த ஸாதாரணமான ஸர்வஜ்ஞத்வாதிகளாலே துதிக்கப்படுகிறானன்றோ" என்று கூறுகிறார். இதிலிருந்து தேசிகபாஷ்யமே பிற்பட்டதென்று தெளிவாக விளங்குகிறது. நாயனாருடைய பாஷ்யம் பிற்பட்டதாயிருந்தால் இதையெடுத்து "இதர வைலக்ஷண்யத்தைக் காட்டுவதாக ஸ்தோத்ரத்தை நிர்வஹித்தால் ஸ்வாரஸ்யாதிசயம் உண்டன்றோ" என்று ஸமாதானமருளியிருப்பார். அவருடைய பாஷ்யம் முற்பட்டதாகையாலே இந்த ஸமாதாநம் அதிலில்லை. இரண்டு பாஷ்யங்களையும் ஊன்றிப் படிப்பவர்களுக்கு தேசிகருடைய பாஷ்யமே பிற்பட்டது என்பது மற்றும் பல ஹேதுக்களாலும் தெளிவாகும்.

பிராட்டி அணுஸ்வரூபையாயிருந்தபோதிலும், அகடிதகடநா சக்திவசத்தால் பகவத்ஸ்வரூபமுள்ளவிடமெல்லாம் வியாபித்திருக்கிறாள் என்னும் பக்ஷத்தைத் தம்முடைய பாஷ்யத்தில் ஆதரித்திருக்கிறார் நாயனார். இப்பக்ஷத்தைக் கண்டிக்கிறார் தேசிகன். இதைப் பூர்வாசார்யர்கள் எவராவது ஆதரித்திருக்கிறார்களா என்னும் கேள்வி எழுகிறது. பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்திலும் ப்ராசீநமான அஷ்டச்லோகீவ்யாக்யானத்தில் எடுக்கப்பட்டுள்ள அஷ்டாக்ஷர தீபிகா ஸ்ரீஸூக்திகளில் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் இதை ஆதரித்

திருக்கிருர்கள். ஸ்ரீராமாநுஜருடைய ப்ரியசிஷ்யர்களில் ஒருவரான எங்களாழ்வானும், தம்முடைய விஷ்ணுபுராணவ்யாக்யானத்தில் "யதா ஸர்வகதோ விஷ்ணு:" என்னும் சுலோகத்தை வியாக்கியானம் செய்யும்போது "பகவாந் விபுத்வேந ஸர்வகத: அஸ்யாஸ்து (தச்) சக்திவஶாத் அணுத்வேऽபி தத்ர தத்ரஸந்நிதாநாத் ஸர்வகதத்வமுக்தம்" [பகவான்விபுவாயிருந்துகொண்டு ஸர்வகதன்; இவளுக்கோவெனில் அணுவாயிருந்தபோதிலும் (அகடிதகடநா) சக்திவசத்தால் ஆங்காங்கு வியாபித்திருப்பதால் ஸர்வவ்யாபித்வம் சொல்லப்பட்டது] என்று அருளிச்செய்வதன் மூலம் இப்பக்ஷத்தை ஆதரித்தருளியிருக்கிறர். இப்பங்க்திகள் நிஷ்பக்ஷபாதிகளான வடநாட்டார் அச்சிட்ட ஸ்ரீகோசங்களிலுள்ளன. ப்ராசீநமான ஈட்டின் அரும்பதவுரைகளிலும், கீர்த்திமூர்த்தியான அயோத்யா ராமனுஜஜீயர் ஸ்வாமியின் ஸ்ரீதத்வப்ரகாசிகையிலும் எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் இவ்வர்த்தம் ஸ்ரீபாஷ்யகாரர் உகந்ததாகவே இருந்திருக்கும்.

நிற்க; இந்தச் சது:ச்லோகீ பாஷ்யகர்த்தாவின் திருநாமம் அழகியமணவாளப்பெருமாள் நாயனரென்பது. இவருடைய சிஷ்யரான பரகாலதாஸர் தம்முடைய பரகாலநல்லான் ரஹஸ்யத்தில் "அபயப்ரத குருஸூநுவான ஸுந்தரவரராஜாசார்யர்" என்று எடுத்துள்ளதைக் காண்க. இவருடைய மற்ருெரு சிஷ்யரான வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயரும் இவரை ஓரிடத்தில் இப்பெயரையிட்டு நிர்த்தேசித்துள்ளார். இவருடைய ப்ரஸித்தமான திருநாமம் நாயனராச்சான் பிள்ளை என்பது. ஸகலத்ராவிடாம்நாயஸாரவ்யாக்யானகர்த்தாவான பெரியவாச்சான்பிள்ளை இவருடைய தந்தையார். ஜ்ஞாநார்ணவம், அணுத்வபுருஷகாரத்வஸமர்த்தநம், சரமரஹஸ்யத்ரயம், முக்தபோகாவளி, சது:ச்லோகீவ்யாக்யாநம், சரமோபாயநிர்ணயம், தத்வஸங்க்ரஹம், கைவல்யநிர்ணயம் முதலானவை இவரருளிய கிரந்தங்கள். முதல் மூன்று நூல்களைத் தவிர மற்றவை இப்போதுமுள்ளன; (தெலுங்கு லிபியில்) அச்சிடப்பட்டுமிருக்கின்றன. இவற்றை க்ரமேண தமிழில் அச்சிடுவோம்.

நந்தன-ஆவணியில் - ரோகிணி.

இங்ஙனம்,
கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை குமாரர்
அழகியமணவாளப்பெருமாள் நாயனாராச்சான்பிள்ளை அருளிச்செய்த

# சது:ச்லோகீ வ்யாக்யாநம்

நாயனாராச்சான்பிள்ளை தனியன்

ச்ருத்யர்த்த ஸார ஜநகம் ஸ்ம்ருதிபாலமித்ரம்
பத்மோல்லஸத் பகவதங்க்ரி புராணபந்தும் ।
ஜ்ஞாநாதிராஜமபயப்ரதராஜபுத்ரம்
அஸ்மத்குரும் பரமகாருணிகம் நமாமி ॥

## அவதாரிகை

* அபிஷ்டௌதி ஶ்ரியம் தேவீம் அகிலாத்மைகமாதரம் ।
விஷ்ணுபத்நீம் விஶாலாக்ஷீம் யாமுநார்யோ மஹாமதி: ॥

(1) (மாத்ருதேவோ பவ, பித்ருதேவோ பவ, ஆசார்யதேவோ பவ, அதிதிதேவோ பவ) என்று கொண்டு, "இச் சேதனனுக்கு ஸ்வரூபாநுரூபமாக உபகாரகராகிறார், அகிலஜகன்மாதாவான பிராட்டியும், 'அவ்வயய: பிதா' வான ஈச்வரனும், 'அறியாதன அறிவித்த' ஆசார்யனும், அதிதிஶப்தவாச்யரான அவனடியாரும்" என்று இந்நால்வர் பக்கலிலும் உபகாரஸ்ம்ருத்யதிஶயத்தாலே உத்தேச்யப்ரதிபத்தி பண்ணி உஜ்ஜீவிக்கக்கடவனென்று, வேதாந்தங்களிலே வ்யாக்யாதமாக விதிக்கையாலே, விசேஷஜ்ஞரெல்லாரும் விரும்பி அநுஷ்டிக்க வேண்டும்படி, விசேஷார்த்தங்களாயிறே இவ்வர்த்தங்கள்தான் இருப்பது. இந்நால்வர் பண்ணும் உபகாரமும் நவரத்னமாலையிலே நன்றாகக் காணலாமிறே. இப்படிப்பட்ட உபகாரங்களை அநுஸந்தித்து * "சீதையெனப்பதோர் தெய்வம்" § "திருமங்கை நின்றருளும் தெய்வமே நாவாழ்த்தும்" † "தேவுமற்றறியேன்" ‡ "குலதெய்வம்" என்று இந்

---

* இதன் பொருள்:-எல்லா ஆத்மாக்களுக்கும் ஒரே தாயாய், விஷ்ணு பத்னியாய், பரந்த திருக்கண்களை உடையவளான ஸ்ரீதேவியை மஹா புத்திமானான யாமுநாசார்யர் துதிக்கிறார்.

---

* பெரிய திரு (10-2-5) § இரா திருவ (57) † கண்ணி-2 ‡ திருவாய் (2-6-4)

நால்வர் பக்கலிலும் தேவதாப்ரதிபத்தியைப் பண்ணுநின்றார்களிறே ஆகையாலே, ஸகலவேதாந்தவிதக்ரகண்யராய், ஆஸ்திகாக்ரேஸராய், பரபக்ஷ ப்ரதிக்ஷேப ஸ்வபக்ஷஸ்தாபகத்வத்தாலே "ஆளவந்தார்" என்று அகிலலோகப்ரஸித்தமான அபிதானத்தையுடையரான யாமுநாசார்யர், தாம் ஸதாசார்யச்ரேஷ்டரானமை தோற்ற (2) (ஆசரதீத்யாசார்ய:) (3) (ஸ்வயமாசரதே யஸ்து ஸ ஆசார்ய இதி ஸ்ம்ருத:) என்கிறபடியே "இவ்வர்த்தங்களை நாம் ஆசரிக்கவேணும்" என்கிற ஆதராதிசயத்தாலும், 'ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரான அஸ்மதாதிகளெல்லாரும் இவ்வர்த்தங்களை அநுஷ்டித்து, ஆத்மோஜ்ஜீவநத்திலே அத்யபிநிவிஷ்டராகவேணும்' என்கிற தம்முடைய ஆகஸ்மிகக்ருபையாலும், உபகாரகரான இந்நால்வர் பக்கலிலும் தமக்குண்டான ப்ரதிபத்திவிசேஷத்தை க்ரந்தஸ்தமாக ப்ரகாசிப்பிப்போமென்று திருவுள்ளம்பற்றி, ப்ரதமத்திலே (1) (மாத்ருதேவோ பவ) என்று, மஹோபகாரகையாகச் சொல்லப்பட்ட பெரியபிராட்டியாருடைய ஸ்வரூபகுணவிபூதிகளை அநுஸந்தித்து, அவ்வநுபவ ஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே, தத்விஷய ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தராகிறார்,— "காந்தஸ்தே" இத்யாதியாலே.

(1) (பித்ருதேவோ பவ) என்று தொடங்கிச் சொல்லப்படும் மூவரிடத்திலுண்டான விசேஷப்ரதிபத்தியை ஸ்தோத்ரரத்னத்திலே வெளியிட்டருளினர். எங்ஙனேயென்னில்: ப்ரதமத்திலே (1) (ஆசார்ய தேவா பவ) என்று மஹோபகாரகராகச் சொல்லப்பட்ட ஆசார்ய விஷயத்தில் தமக்குண்டான பாவபந்தவிசேஷங்களை (4) (நமோऽசிந்த்யாத்புத) என்றும், (5) (தஸ்மை நம:) என்றும், (6) (பூயோ நம:) என்றும், (7) (ப்ரணமாமி) என்றும் ப்ரகாசிப்பித்தார். நிருபாதிக பிதாவான ஈச்வரவிஷயத்தில் தமக்குண்டான ப்ரதிபத்திவிசேஷத்தை (8) (யங் மூர்த்நி மே) என்று தொடங்கி பஹுப்ரகாரமாக ப்ரகாசிப்பித்தார். *"வருவிருந்தை" †"விருந்தாகும் பெருந்தக்கோர்" என்கையாலே அதிதிஸப்தவாச்யரான ததீயவிஷயத்தில் தமக்குண்டான விசேஷப்ரதிபத்தியை (9) (த்வதாச்ரிதாநாம்) என்றும் (10) (தவதாஸ்ய ஸுகைகஸங்கிநாம்) என்றும் (11) (ஸக்ருத் த்வதாகார) என்றும் வெளியிட்டாரிறே.

* பெரியாழ்-திரு (4-8-2) † பெரியதிரு (6-6-10)

ஆகில், (1) (மாத்ருதேவோ பவ) என்கிற பிராட்டி வைபவம் அங்கு ப்ரதிபாதிக்கவில்லையோவென்னில்: (12) (க: ஸ்ரீ: ஸ்ரிய:) என்றும், (13) (தயா ஸஹாஸீநம்) என்றும் ஸூசிப்பித்த மாத்ரமிறே ஸ்தோத்ரத்திலுள்ளது. 'அப்படியாகில் இவ்வளவு போராதோ? இதுக்காக ஒருப்ரபந்தம் நேரவேண்டுவானென்?' என்னில் * "பேராளன் பேரோதும்" § "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்கிற பாகவதாநுவர்த்தனமாகிற பரமப்ராப்ய லாபம் ஆசார்யனாலேயாய், ஆசார்யலாபம் ஈச்வரனாலேயாய், ஈச்வரலாபம் பெரிய பிராட்டியாராலே யாகையாலே, இந்நால்வரிலும் மஹோபகாரகையாயிறே இவள் தான் இருப்பது. ஆகையிறே (1) (மாத்ருதேவோ பவ) என்று ப்ரதமோபாத்தையாயிற்று. இப்படி ஸர்வவ்யாவ்ருத்தோபகாரசீலையாகையாலே, ஸாமாந்யமான ஆகாரேண ப்ரதிபாதித்த வளவன்றிக்கே, தத்விசேஷமாக ஒரு ப்ரபந்தம் நேரவேணுமென்று நிர்ணயித்து, விஷயத்திலே தமக்குண்டான பாவபந்தமெல்லாம் தோன்றச் சது: ச்லோகியாலே உபச்லோகிக்கிறார்.

கர்மபரதந்த்ரனான ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே (14) (சோக: ச்லோகத்வமாகத:) என்கிறபடியே, சோகவேகஜநிதமான ச்லோகங்கள்போலன்றிக்கே, ஸுமங்களாகாரையான இவள் ப்ரஸாதமடியாக வந்ததாகையாலே ஸுச்லோகங்களாயிறே இச்லோகங்கள்தான் இருப்பது. இனி, அங்கு போனாலும் (15) (அஹம் ச்லோகக்ருத்) என்று உத்தமராஜகந்யையான இவள்விஷயமாக உத்தமச்லோகரசனை பண்ணி உஜ்ஜீவிக்கையிறே உள்ளது. (16) (க்ருத்ஸ்நம் ஸீதாயாம் சரிதம் மஹத்) என்று எல்லாம் ஸீதாசரிதமாயிருக்கவும், (17) (ரகுவர சரிதம்) என்று சொல்லப்படுவதாய், கங்கா ஸம்பவாத்யஸக்கதா வர்ணன முகத்தாலே அதிவிஸ்தரமாய், துர்ஜ்ஞேயமான ஸ்ரீராமாயணம்போலின்றிக்கே, விசேஷண விசேஷ்யோபயப்ரதாநமான 'திருமாலவன்கவி' போலுமின்றிக்கே, விசேஷணபாமேயாயிருக்கவும் அதிஸங்க்ரஹமாகையாலே துரவகாஹமான ஸ்ரீஸூக்தம்போலுமின்றிக்கே, அநாக்ராதாவத்யமாய், வைதக்த்ய வர்ணகுண கும்பந கௌரவங்களாலே கண்டூலகர்ண குஹரராய்க் கொண்டு கர்ணம்ருதமாகப் பானம் பண்ணலாம்படி பரமபோக்யமாய், ப்ரேமயுக்தர்க்கு ஸ்வார்த்த

---

* பெரியதிரு (7-4-4) § திருவாய் (10-9-11)

ப்ரகாசக சாதுர்யத்தையுமுடைத்தான சது:ச்லோகீ ஸூக்ஷ்மமா யிருக்கையாலே, அகிலப்ரபந்த விலக்ஷணமாயிருக்கும்.

பகவத் ஸ்தோத்ரம் பண்ணுவார்க்கெல்லாம் ஸ்தோத்ரரத்நம் முதலானுப்போலே, பிராட்டி விஷயத்தில் ஸ்தோத்ரம் பண்ணுவார்க் கெல்லாம் இப்ரபந்தம் மூலக்ரந்தமாகையாலே முக்யமாயிருக்கும். இவள்மூலமாகவிறே எல்லாம் உண்டாவது. ஆகையிறே ஸ்தோத்ர சது: ச்லோகிகளை அடியொற்றி, கத்யத்ரயமும், ஸ்ரீஸ்துதி முதலான பஞ்சஸ்தவமும், ஸ்ரீகுணரத்நகோசமும், ஸ்ரீரங்கராஜஸ்தவம் முதலான திவ்யப்ரபந்தங்களும் அவதரித்தது.

ஆக, இத்தால் (1) (மாத்ருதேவோ பவ) என்கிற வாக்யார்த்த விவரணமான ஸ்ரீஸூக்தார்த்தத்தை இச்லோகரூபேண வெளியிடு கிறார். அதில், ப்ரதமச்லோகத்தால் (18) (ஶ்ரியம் தேவீமுபஹ்வயே ஸ்ரீர்மா) என்கிற வாக்யங்களாலும், (19) (விஷ்ணோ: ஸ்ரீ:) என்கிற வாக்யங்களாலும், (20) (ஸ்ரீவத்ஸவக்ஷா:) என்கிற ததுபப்ரும்ஹணங் களாலும் ப்ரதிபாதிக்கிற ததஸாதாரணமான திருநாமத்தை ஸார்த்த மாக அநுஸந்திக்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.

முதல் ச்லோகம் அவதாரிகை:—(காந்தஸ்தே இத்யாதி) "ஸ்ரீஞ்- ஸேவாயாம்" என்கிற தாதுவிலே நிஷ்பந்நமாகையாலே ஸேவாவாசி யான ஸ்ரீஶப்தத்தில் "ச்ரயத இதி ஸ்ரீ:" "ஸ்ரீயத இதி ஸ்ரீ:" என்கிற கர்த்தரிகர்மணி வ்யுத்பதி த்வய ஸித்தங்களான பகவதாச்ரயணத்தை யும், தத்தேதுகமான உபயவிபூதி ஶேஷத்வத்தையும் உடையையாய், அத்தாலே "ஸ்ரீ:" என்று ஸர்வோத்கர்ஷ ஹேதுவான திருநாமத் தையும் உடையையாய், ஜ்ஞாந ஶக்த்யாதி கல்யாணகுண பரிபூர்ணையு மான உன்னைப் பரிமிதஜ்ஞாநஶக்திகரான நாங்கள் பரிச்சேதித்துப் பேசுவது எங்ஙனே என்கிறார்.

வ்யாக்யானம்:—(காந்தஸ்தே புருஷோத்தம:) (21) (ஸஹஸ்ர ஶீர்ஷா புருஷ:) (22) (பூர்ணம் புருஷேண) (23) (புருஷம் மஹாந்தம்) (24) (புருஷ ஏவேதம் ஸர்வம்) (25) (ஸ யஶ்சாயம் புருஷே) (26) (ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே) (27) (மஹாபுருஷ பூர்வஜ) (28) (ஜாநாதி புருஷோத்தமம்) (29) (புருஷ: புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞக:)

பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த

## சதுஃ்ச்லோகீ

### ஆளவந்தார் தனியன்

யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தாசேஷ கல்மஷ:।
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம்॥

1. காந்தஸ் தே புருஷோத்தம: பணிபதிச் சய்யாऽऽஸநம் வாஹநம்
வேதாத்மா விஹகேச்வரோ யவநிகா மாயா ஜகந்மோஹிநீ।
ப்ரஹ்மேசாதிஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:
ஶ்ரீரித்யேவ ச நாம தே பகவதி ப்ரூம: கதம் த்வாம் வயம்॥

1. பதவுரை:—பகவதி—*கல்யாணகுணங்களால் நிறைந்தவளே!*, புருஷோத்தம:—*புருஷோத்தமனான பகவான்*, தே—*உனக்கு*, காந்த:—*பிரியனான கணவன்*; பணிபதி:—*நாகங்களுக்கு அரசனான ஆதிசேஷன்*, சய்யா—*படுக்கை*; வேதாத்மா—*வேதத்தை சரீரமாக உடையவனும்*, விஹகேச்வர:—*புள்ளரையனுமான பெரியதிருவடி*, ஆஸநம் வாஹநம்—*ஆஸனமாகவும், வாஹனமாகவுமிருப்பவன்*; ஜகந்மோஹிநீ—*உலகத்தை மோஹிக்கச்செய்வதான*, மாயா—*ப்ரக்ருதி*, யவநிகா—*(உனக்கு) முகத்திரையாயிருக்கிறது*; ஸதயித:—*தங்களுடைய மனைவிமாருடன் கூடிய*, ப்ரஹ்மேசாதிஸுரவ்ரஜ:—*பிரமன், சிவன் முதலிய தேவஸமூஹம்*, த்வத்தாஸதாஸீகண:—*உன்னுடைய தாஸகணமாகவும், தாஸீகணமாகவும் இருக்கிறது*; தே நாம ச—*உன்னுடைய திருநாமமும்*, ஶ்ரீ: இதி ஏவ—'ஶ்ரீ:' *என்பதேயாயிருக்கிறது*; த்வாம்—*(இப்படிப்பட்ட பெருமைகள் பொருந்திய) உன்னை*, வயம்—*(அறிவிலிகளான) நாங்கள்*, கதம் ப்ரூம:—*எப்படிச் சொல்லுவோம்?*

---

(30) (தம் விநா புருஷோத்தமம்) (31) (உத்தம: புருஷஸ்த்வந்ய:) (32) (க்ஷமஸ்வ புருஷோத்தம) * "*புருடோத்தமனடி*" § "*புருடோத்தமன்*" † "*புருடோத்தமமே*" *என்னும் இத்யாதிப்ரமாண சதங்களாலே ஸகல சேதநாசேதந விலக்ஷணனான* ‡ '*பறவையேறு பரம்புருடன்*' *என்றவாறு. இத்திருநாமந்தான் த்ரிவிதசிதசித்ப்ருந்த வைலக்ஷண்யத்தை சப்தமாகக் காட்டக்கடவதிறே.* "*புருஷ:*" *என்று அசித்*

---

*பெரியாழ்-திரு (4-7-11) § பெரியாழ்-திரு (4-7-2) † பெரியதிரு (4-2-1)
‡ பெரியாழ்-திரு (5-4-2)

வ்யாவ்ருத்தரான பத்தரையும், “உத்புருஷ:” என்று தத்வ்யாவ்-ருத்தரான முக்தரையும், “உத்தர: புருஷ:” என்று அவர்களில் வ்யாவ்ருத்தரான நித்யரையும் சொல்லி, “உத்தம: புருஷ:” என்று தத்வ்யாவ்ருத்தனான ஈச்வரனைச் சொல்லிற்றிறே. ஹேயமூலமான அசித்தும், ஹேயஸஹிதரான பத்தரும், ஹேயரஹிதரான முக்தரும், ஹேயப்ராகபாவரான நித்யரும், ஹேயநிவர்த்தகனுக்கு ஸத்ருசரன்றிறே. ஸ்வரூபஸ்வபாவாந்யதாபாவயுக்தங்களான சேதநாசேதநங்களைப்பற்ற, ததுபயாநந்யதாபாவரூப வைலக்ஷண்யத்தாலே, ததுபயவிலக்ஷணன் என்று கொண்டு புருஷோத்தமன் என்கிறார். 33. (யஸ்மாத் க்ஷரமதீதோऽஹம் அக்ஷராதபி சோத்தம: । அதோऽஸ்மி வேதே லோகே ச ப்ரதித: புருஷோத்தம: ॥) என்னக்கடவதிறே. 33. (த்வாவிமௌ) இத்யாதி.

ஆக, இப்படி ஸர்வோத்க்ருஷ்டனாக ப்ரதிபாதிக்கப்படுகிற பரமபுருஷன் ஸர்வாதிகையாக ப்ரமாணப்ரஸித்தையாயிருக்கிற உனக்கு அநுரூபனான பதி. அதவா; (புருஷோத்தம: தே காந்த:) “ஷணு-தாநே” என்று தாநவாசியாய், “புரு-ஸநோதீதி-புருஷ:” என்று அதிகதாதாவைச் சொல்லி, அவர்களில் உத்தமனென்று மோக்ஷாதிஸகலபலப்ரதன், (34) (ஐச்வர்யம்) இத்யாதிப்படியே “பரமோதாரை” என்று ப்ரஸித்தையான உனக்குப் பதியென்னவுமாம்.

(புருஷோத்தமஸ் தே காந்த:) (35) (மங்களாநாஞ்ச மங்களம்) என்று சொல்லப்படுகிறவன், ஸகலமங்களாஸ்பதத்வேந ப்ரஸித்தையான உனக்குப் பதி. (புருஷோத்தமஸ் தே காந்த:) *நாரீணாமுத்தமைக்குப் பதியாம்போது புருஷோத்தமனாகவேணுமிறே. விச்வபதியானாலாயிற்று இவளுக்குப் பதியென்னலாவது. இவள்தான் லோகபர்த்தாவையிறே (36) (மம பர்த்தா) என்று வரிப்பது. அல்லாதாரை (37) (நீசஶஶவத்) என்று ஒரு நரியாகவிறே எண்ணுவது. “புருஷோத்தமஸ் தே” என்கையாலே, (38) (ராகவ:—துல்யஶீல வயோவ்ருத்தாமர்ஹதி) என்னும் அர்த்தமும், ஏதத்ப்ரதிகோட்யர்த்தம் “புருஷோத்தமஸ்ய த்வம்” என்று (38) (அஸிதேக்ஷணா தமர்ஹதி) என்னுமர்த்தமும் தோற்றுகிறது. § “உனக்கேற்கும்” என்று இவள்

§ திருவாய் (10-10-6.)

அவனுக்கு ஸத்ருஸ்யாயிருக்குமாபோலே, அவனும் * திருத்தக்க செல்வனுயிறே இருப்பது.

(புருஷோத்தமஸ் தே காந்த:) (39) (லக்ஷ்மீஸ்ச பத்நயௌ) என்று பத்நீ ஸம்பந்தத்தாலே அவனுக்கு உத்கர்ஷம் சொன்னப் போலே, "புருஷோத்தமஸ் தே காந்த:" என்று பதிஸம்பந்தத்தாலே இவளுக்கு உத்கர்ஷம் சொல்லுகிறுர். "ஶ்ரிய: பதி:" என்று அவனுக்கு உத்கர்ஷம்; "வரதவல்லபா" என்றிறே இவளுக்கு உத்கர்ஷம்.

(தே காந்த: புருஷோத்தம:) உனக்குக் காந்தனுன பின்பிறே அவன் புருஷோத்தமனுயிற்று. (12) (க: ஶ்ரீ: ஶ்ரிய:) என்ற பின்பிறே (12) (புருஷோத்தம: க:) என்றது. (42) (ஜகந்நாதோऽபி நாராயணோ தந்யம் மந்யத ஈக்ஷணுத்) என்று வேதாந்தங்கள் பரதத்வமென்று நிர்ணயித்ததும் உன்னுடைய பாதசிஹ்நங்களை அவன் மார்பிலே கண்டபின்பிறே. ஸஹதர்மசாரிணியான இவளைப் பாணிக்ரஹணம் பண்ணின பின்பாயிற்று, அவன் ஶ்ரீமானுமாய், ஸர்வாதிகனுமாய், அநுரூபாக்ஷனுமாய், முமுக்ஷூபாஸ்யனுமாய்த்து. ஆகையிறே † "திருநின்ற பக்கம் திறவிது" என்று ஸத்துக்கள் பரிக்ரஹித்தது. அல்லாதார் திருவில்லாத் தேவராகையாலே, நி:ஶ்ரீகராய், புருஷாதமராய், விரூபாக்ஷராய், அநுபாஸ்யராயிற்று. ஆகையிறே (43) (ஶ்ரீநிவாஸபத்தேந பாதபதாதிவ்யுதாஸ:) என்று அருளிச்செய்ததும், §§ "காணிலும் உருப்பொலார்" †† "திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு" என்று ஸத்துக்கள் பரித்யஜித்ததும்.

(தே காந்த: புருஷோத்தம:) ‡‡ "திருமகளார் தனிக்கேள்வன் பெருமையுடைய பிரானுர்" என்று இவளுக்குக் கேள்வனுன வாசியிறே பெருமையுடைய பிரானுராயிற்று. 44. (ஶ்ரியா விஷ்ணுரதீவ பபௌ) என்று இவள் தனக்கென்ன இட்டுப் பிறந்த தத்வமாகையாலேயிறே அப்ரமேய தேஜஸ்ஸை உடையவனுய், அதீவ விளங்கிற்று. (45) (ச்ரத்தயா தேவோ தேவத்வமச்நுதே) || "திருமங்கை தன்னேடும் திகழ்கின்ற" என்னக்கடவதிறே. (புருஷோத்தம:) "புருஷாணுமுத்தம:" என்று ஷஷ்டீஸமாஸமாகப் பிரியாதல்; "புருஷேஷூத்தம:"

---

† 4-திருவ 62. §§ திருச்சந் 69. †† 4-திருவ 54. ‡‡ திருவாய் 1-6-9.
|| திருவாய் 10-6-9.

என்று ஸப்தமீவிபக்தியாதல். "புருஷோத்தம:" என்று ஸர்வேச்வ ராபேக்ஷயா ப்ரஹ்மாதிகளுடைய அதமத்வம் ப்ரதிபாதிக்கையாலே, தத்பத்னிகளிற்காட்டில் இவளுடைய வ்யாவ்ருத்தியும் தோற்றுகிறது. * மலைமங்கையும், * நாமங்கையும் * பூமங்கைக்குப் போலியாகமாட்டார் களிறே. * நாபதியும், * உமாபதியும் * மாபதிக்கு உபமானமானவன் றிறே இவளுக்கு அவர்கள் ஒப்பாவது. ஆக, இத்தால் "தத்பத்நீத் வத்தாலும், நாரகோடிகடிதையாகையாலும், அவனை ஆச்சரயித்துத் தச்சேஷபூதையாய், ஸத்தைபெற்றிருக்கும்" என்கிற கர்த்தர்யர்த்தம் சொல்லப்பட்டது. § "மலர்மகள் பிடிக்கும் மெல்லடி" † "திருமக ளும் செம்பொற்றிருவடியினிணை வருட" என்கிறபடியே அகிஞ்சித் கரனுக்கு சேஷத்வமில்லாமையாலே, இவள்தான் கிஞ்சித்கரித்து ஸ்வரூபலாபமாயிருப்பாள் ஒருத்தியிறே. அவதாரதசையிலும் ‡ "திருமங்கை போத்தந்தாள்" என்று கிஞ்சித்கரித்தாளிறே.

இனிமேல், "ஸர்வலோகமாதாவாகையாலும், ஸர்வஸ்வாமிநி யாகையாலும், ஸகலசேதநர்க்கும் ஆச்ரயிக்கப்படாநின்றுள்" என்கிற கர்மணிவ்யுத்பத்தியில் ஸித்தமான உபயவிபூதிசேஷத்வத்தை அருளிச் செய்கிறுர், (பணிபதி:) இத்யாதியால். 19. (நித்யைவைஷா ஜகந் மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ) 46. (ஸ்ரீயதே சாகிலோர் நித்யம் ஶ்ரயதேச பரம் பதம்) என்னும் இத்யாதிப்ரமாண ஸித்தங்களாயிறே இவ்யுத் பத்தித்வயமுமிருப்பது.

ஆகில், உபஜீவ்யப்ரமாணாநுஸாரேண வ்யுத்பத்தி த்வயத்தை அருளிச்செய்யாதே,வ்யுத்க்ரமமாக அருளிச்செய்வானென்? என்னில்: கடகையான இவளுக்குச் சேதநேச்வரர் பக்கல் ஸம்பந்தம் அவிசிஷ்ட மாயிருந்ததேயாகிலும், பித்ருத்வ ப்ரயுக்தமான ஹிதஸ்ரோதோ வ்ருத்தியாலே கலங்கி, ஸாபராதரான இச்சேதனரை நிக்ரஹிக்கத் தேடுமன்று 47. (கிமேதந்நிர்த்தோஷ: க:) என்று உசிதோபாயங்க ளாலே அவனை வசீகரித்து அநுக்ரஹைகபரனும்படி திருத்தும்போது தத்ஸம்பந்தம் அவச்யாபேக்ஷிதமாகையாலும்,இனித்தான் பிராட்டியை ஆச்ரயிக்கிறது, தத்ஸம்பந்த விசிஷ்டையென்றுகையாலும், "புருஷோத்தமஸ் தே காந்த:" என்று ப்ராதாந்யேந கர்த்தர்யர்த்

§ திருவாய் (9-2-10) † பெரியதிரு (7-8-1) ‡ பெரியாழ்-திரு (11-3-7)

தத்தை அருளிச்செய்து, அநந்தரம் தத்ஸம்பந்த ஸ்தாப்யமான கர்மண்யர்த்தத்தை அருளிச்செய்கிறார். 48. (மச்சேஷபூதா ஸர்வேஷாமீச்வரீ) என்று இவ்வர்த்தக்ரமத்தை ஸ்வயமேவ அருளிச்செய்தானிறே. 49. (தேவ தேவ திவ்யமஹிஷீமகிலஜகந் மாதரம்) என்று பாஷ்யகாரரும் இவருடைய திவ்யஸூக்தியை உட்கொண்டு, பகவத் ஸமாச்ரயணத்தை ப்ரதானமாக அருளிச்செய்தாரிறே. இனித்தான் பகவத்விஷயத்தைப் பற்றுகை * பவதீஸம்பந்த த்ருஷ்டியாலேயிறே. பிராட்டியைப் பற்றுமது பகவத்ஸம்பந்தவிஶிஷ்டையென்றிறே. இங்ஙனன்றிக்கே தத்ஸம்பந்தரஹிதமாகப் பற்றுமன்று, தலையும், செவியும் தரியுண்டு வைரூப்யவிநாஶங்களே பலித்துவிடுமிறே. ஆகையால் இவ்வாகாரத்தைப் பற்ற இங்ஙனே அருளிச் செய்யக் குறையில்லை.

ஆகில், 48. (மச்சேஷபூதா) என்று அருளிச்செய்தபடியே பிராட்டியும் பகவச்சேஷபூதையானல், சேஷபூதர்களெல்லாரும் ஸர்வஶேஷிக்கு ஶேஷமாயிருக்கையொழிய, உபயவிபூதியும் பிராட்டிக்கு ஶேஷமாயிருக்கும் என்கைக்கு ப்ரமாணமென்? என்னில்: 48. (ஸர்வேஷ்யாத்மாந:—தாஸபூதா:) என்று உபயவிபூதியும் பரமாத்மஶேஷமானல், தத்பத்னியான இவளுக்கும் அகிலசேதனரும் சேஷபூதரென்னுமிடத்தில் ப்ரமாணாந்வேஷணம் வேண்டாவிறே. பர்த்தாவுக்கு ஶேஷமான க்ருஹக்ஷேத்ரபுத்ராதிகள் பார்யைக்கும் ஶேஷமென்னுமிடம் லோகஸித்தமிறே. அவன்றான் உபயவிபூதியையும் இவளுக்குப் படுக்கைப்பற்றாக்கியிறே வைப்பது. 50. (ஈஶாநா தேவீ புவநஸ்யாதிபத்நீ) 51. (ஈச்வரீம் ஸர்வபூதாநாம்) 52. (மகாரஸ்து தயோர் தாஸ:) என்று இவ்வர்த்தத்தில் ப்ரமாணங்களும் உண்டிறே. 53. (அஸ்யா மம ச ஶேஷா ஹா விபூதிருபயாத்மிகா) 48. (ஸர்வேஷாமீச்வரீ மம வல்லபா) என்று இவ்வர்த்தத்தை ஸ்வயமேவ அருளிச்செய்தானிறே. § "திருநாரணன் தொண்டர்" † "திருமாலுக்குரிய தொண்டர்" ‡ "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" || "திருமாற்கரவு" என்று, மிதுநஶேஷத்வம் ஸர்வஸாதாரணமென்னுமிடத்தை, தத்வவித்துக்களான நம் ஆழ்வார்களும் அருளிச்செய்தார்களிறே.

---

§ திருவாய்(3-7 4) † திருவாய்(6-9-11) ‡ திருப்பல்-11. || முத-திருவ-53.

ஆக, இப்படி வேதங்களாலும், வேதாந்தவேத்யனாலும் * மிக்க வேதியராலும் ப்ரதிபாதிக்கப்பட்ட உபயவிபூதிஶேஷித்வத்துக்கு ப்ரதிஸம்பந்தி வக்தவ்யமாகையாலே உபவிபூதியிலுள்ளாரும் இவளுக்குக் கிஞ்சித்கரித்து ஶேஷபூதராயிருக்கும்படியை ப்ரயோகிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, அதில் ப்ரதமத்திலே நித்யஸூரிகளில் தலைவரான திருவனந்தாழ்வான் இவள் விஷயத்திலே கிஞ்சித்கரித்து, ஸ்வரூபம் பெற்றிருக்கும்படியை அருளிச்செய்கிறார்,—(பணிபதி:) இத்யாதியாலே.

அதாவது—§ "இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி இனத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த" என்றும், † "வாயோராறைஞ்ஞூறு" ‡ "மன்னிய பல்பொறிசேர் ஆயிரவாய் வாளரவின் சென்னிமணிக் குடுமி" என்றும் சொல்லுகிறபடியே, || "மதுரவாறு" என்றும், // "இன்பவாறு" என்றும் சொல்லும்படி நிரதிசயபோக்யமான பகவதநுபவத்துக்கு அநுபவபரீவாஹரூபமாக வாயாரப் புகழுகைக்கிடாகப் பலவாய்த்தலைகளை உடையனாய், 54. (அநந்ததா பவதி) என்கிறபடியே அநேகதேஹங்களைப் பரிக்ரஹித்து, அஶேஷஶேஷவ்ருத்தியிலும் அந்வயித்து, ஶேஷவ்ருத்திபரரான அஶேஷர்க்கும் உபமான பூமியாய், †/ ஆங்காரவாரத்திற்படியே அஸ்தாநேபயஶங்கை பண்ணி அழலுமிழ்ந்து அநவரத மங்களாஶாஸநபரனாயிருக்கையாலே § "அரவரசப் பெருஞ்சோதி அனந்தன்" என்றும், 55. (யதோசிதம் ஶேஷ:) என்றும் திருநாமங்களை உடையனாய், * ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைகதாமாவாய், உனக்குப் படுக்கையான முறையாலே :: "நாகணைமிசை நம்பிரான்" என்று எல்லார்க்கும் புருஷகாரபூதனாய், 56. (ஏவம்வித்பாதேநாத்யாரோஹதி) என்று, பர்யங்கவித்யையிற்படியே தன் மடியிலே அடியிட்டேறலாம்படி ஆஸனமாய், அந்தரங்கனாய், பகவத் ஸ்வரூப நிரூபகபூதையான உன்னைப்போலே ‡‡ "நாகணைமிசை நம்பிரான்" என்று அவனுக்கு ஸர்வஸ்மாத்பரத்வஸூசகனாய், 57. (ஆஸ்தே பாதாளமூலஸ்த: ஶேஷோऽஶேஷ ஸுரார்ச்சித:। தஸ்ய வீர்யம் ப்ரபாவஞ்ச ஸ்வரூபம் ரூபமேவ ச। ந ஹி வர்ணயிதும் ஶக்யம் ஜ்ஞாதும் வா த்ரிதஶைரபி॥) என்கிறபடியே, அபரிச்சேத்ய ஸ்வரூப ரூபகுண விப

§ பெரு-திரு (1-1) † பெரு-திரு (1-2) ‡ பெரியதிரும-1. || திருமாலை-36 // திருக்குறு-2†/நான்-திருவ-10.§திருவாய்(5-10-11)::திருவாய்(5-10-11)

வாதிகளை உடையவனுமான திருவனந்தாழ்வான், பள்ளிகொண்டருளினால் படுக்கையாய், * இருந்தால் சிங்காசனமாய், இப்படி உனக்கு பஹுமுகமாக அடிமைசெய்து லப்தஸ்வரூபனாயிருக்கும். * பணிபதிஶப்தத்தாலே, ஶைத்யமார்த்தவ ஸௌரப்ய விஶாலோந்நத்வாதியான பர்யங்ககுணங்கள் ப்ரகடிதங்களாகிறன. || "பஞ்சசயனம்" என்னக்கடவதிறே.

"ஶய்யா, ஆஸநம்" என்று த்வயத்தைச் சொன்னது, த்வயத்திற்படியே † "திருமாற்கரவு—சென்றால் குடையாம்" 55. (நிவாஸ ஶய்யாஸந) என்று தொடங்கி, இருவருமான சேர்த்தியிலே, 58. (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று பண்ணும் ஸர்வவித கைங்கர்யங்களுக்கும் உபலக்ஷணம். 59. (யதா யதா ஹி கௌஸல்யா) என்று ஓர பலை அப்ராப்தவிஷயத்திலே பலபடியாகப் பரிசர்யை பண்ணினாள் என்றால் ப்ரக்ருஷ்டஜ்ஞாநஶக்திகளை உடைய இவன், ப்ராப்த விஷயத்தில் பல வடிமைகளும் செய்கை ப்ரசிபந்நமிறே. இப்படிப் பரத்வத்திலே பல அடிமைகள் செய்யுமளவன்றிக்கே, 60. (தேவத்வே தேவதேஹேயம்) என்று அநுவர்த்தித்த இவளைப்போலே அவதாரந்தோறும் அடுத்த வடிவுகொண்டு, இதுக்கென்று * ஸ்ருஷ்டனாய், 61. (ஸீதாமுவாச) என்று இவள் புருஷகாரமாக, இவள் ஸமக்ஷத்திலே ஸ்வாபேக்ஷிதங்களைப் பேசி, 58 (வைதேஹ்யா ஸஹ) என்று இவள் சேர்த்தியிலேயிறே பாவஜ்ஞனாய், 58. (அஹம் ஸர்வம்) என்று ஸர்வவித கைங்கர்யங்களையும் ப்ரார்த்தித்து அடிமைசெய்யப்பெற்று, 61(a). (ப்ரஹர்ஷயிஷ்யாமி)யிற்படியே உகப்பித்து ‡ "உகந்து பணிசெய்து" என்னும்படி ரமித்து லப்தஸ்வரூபனாய் இருப்பானொருவனிறே. § "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" † "நீவாய் நாகணையில் துயில்வானே திருமாலே" ‡ "சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை" என்று இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்து வாழும்படியை ஆழ்வார்கள் அநுஸந்தித்தார்களிறே. இவர் தாமும் 62. (ஶ்ரியாஸஹாஸீநமநந்தபோகிநி) என்று அருளிச்செய்தாரிறே. 63. (ஶேஷபோகே ஶ்ரியா ஸஹாஸீநம்) என்று பாஷ்யகாரர். 64. (ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ:—உத்ஸங்கேऽநந்தபோகிந:) என்று பட்டர்.

---

|| திருப்பாவை-19. † முத-திருவ-53. ‡ திருவாய் (10-8-10) § திருவாய் † (2-8-1) பெரியதிரு (7-7-9) ‡ திருவாய் (8-7-11)

(பணிபதி: ஶய்யாஸநம்) 65. (போகப்ரியா போகவதீ போகீந்த்ரஶயாநாஸநா) என்று இவளுக்கு அஸாதாரணமாக ஆஸநஶயநாதியான அடிமை செய்யும்படியை, ஸ்ரீஸஹஸ்ரநாமத்திலே சொல்லிற்றிறே. "ஸ்ரீமதே" [த்வயம்] என்கிறபடியே, கைங்கர்யம் ஸித்திப்பதும், ரஸிப்பதும், கைங்கர்யவர்த்தகையாய், பரமப்ராப்யையான இவள் சேர்த்தியிலேயாகையாலே, இவள் சேர்த்தியிலே அடிமை செய்கையிறே ஸ்வரூபப்ராப்தம். ஆகையிறே ||"திருமாலே நின்றே ஆட்செய்ய நீ கொண்டருள நினைப்பதுதான் என்றே" என்று ப்ரபந்நஜந கூடஸ்தர் ப்ரார்த்தித்தருளிற்று. 66. (ஸ்ரீநிவாஸே—பக்திரூபா பவது), 67. (ஶ்ரிய: காந்தோ யஸ் தத் பதாப்ஜே பரிசரணஸக்தம் பவது மே) என்று கைங்கர்யோபகரணமான பக்தியையும், கைங்கர்யத்தையும், இவள் ஸந்நிதியிலே ப்ரார்த்தித்தருளினாரிறே.

//"அனந்தன்பாலும் கருடன்பாலும்" என்று, இவனுக்கு அனந்தரம் வ்யாமோஹ விஷயமான பெரியதிருவடி இவள் விஷயத்திலே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம்பெறும்படியை அருளிச்செய்கிறார் மேல் (வேதாத்மா) என்று தொடங்கி. ஆஸநபதம் காகாக்ஷிந்யாயத்தாலே மேலோடும் அந்வயித்து, "வேதாத்மா விஹகேச்வர: ஆஸநம் வாஹநம்" என்று யோஜித்துக்கொள்வது. (வேதாத்மா) 68. (ஸுபர்ணோஸி கருத்மாந் த்ரிவ்ருத் தே ஶிரோ காயத்ரம் சக்ஷு: ஸ்தோம ஆத்மா ஸாம தே தநூர் வாமதேவ்யம் ப்ருஹத்ரதந்தரே பக்ஷௌ யஜ்ஞா யஜ்ஞியம் புச்சம் சந்தாம்ஸ்யங்காநி திஷ்ணியா: ஶபா யஜூம்ஷி நாம) என்கிற ஸௌபர்ண ச்ருத்யர்த்தத்தை விவக்ஷித்து, 'வேதாத்மா' என்கிறார். 69. (த்ரயீமய:) என்றாரிறே இவர்தாமே. (வேதாத்மா) [வேதாதிஷ்டாத்ருதயா வேதாநாமாத்மா] "வேதாதிஷ்டாத்ருதையினாலே வேதாநாம் ஆத்மா" என்று தத்புருஷனாதல். § தத்விஶிஷ்டத்வேந தத்ஸாமாநாதிகரண்யத்தாலே "வேத ஆத்மா யஸ்யேதி" என்று பஹுவ்ரீஹியாதல். இத்தால் இவனுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸூசிதமாயிற்று. அம்ருதாஹரணாதிகளிலே இவனுடைய ஶக்திமத்த்வம் ஸித்தமிறே.

(விஹகேச்வர:) †"புள்ளரையன் புகழ்குழறும்" என்கிறபடியே பக்ஷிராஜனென்று ப்ரஸித்தனாயிருப்பானொருவனிறே. இத்தால்

---

|| திருவாய் (8-3-8) // பெரியாழ்திரு (5-4-8) § (பா) ததாவிஷ்டத்வேந. † பெரியாழ்-திரு (4-9-5)

70. (ஸத்யஸ் [ப்ருத்யஸ்] ஸுபர்ணோ கருடஸ் தார்க்ஷ்யஸ்து விஹகேச்வர:) என்று ஸ்ரீஸாத்வதாதிகளிலே ப்ராணாதிபஞ்சகாதிபதித்வேந அவஸ்திதனான இவனுடைய வ்யூஹவிசேஷத்தைச் சொல்லுகிறது. இவன்றான் நித்யவிபூதியிலே ‡ "ஓடும்புள்ளேறி" என்று அடிமை செய்யுமளவன்றிக்கே, லீலாவிபூதியிலுங்கூடத் தொடர்ந்து நாகபாச விமோசனம் பண்ணுவது; அம்ருத ப்ரதாநம் பண்ணுவது. || "அருளாழிப்புட்கடவீர் அவர்வீதியொருநாள்" என்றும், // "அசுரருயிரெல்லாம் தகர்த்துண்டுழலும் புட்பாகன்" என்றும் சொல்லுகிறபடி ஆச்ரிதரக்ஷணத்துக்கும், தத் விரோதிநிரஸனத்துக்கும் அநுகூலனாம்படி க்ருபாஸமுத்ரமாயிருப்பானொருவனிறே. ஏவம்விதவைபவனான பெரியதிருவடி, எழுந்தருளியிருந்தால் ஸிம்ஹாஸனமுமாய் உலாவியருளும்போது வாஹனமுமாய், கிஞ்சித்கரித்து லப்தஸ்வரூபனுமாயிருக்கும்.

(வாஹநம்) விச்லேஷதசையில் †† "வெஞ்சிறைப்புள்" என்று வெறுக்கும்படியும், ‡/ "அஞ்சிறைப்புள்" என்று ஸம்ச்லேஷதசையிலே ச்லாகிக்கும்படியும் அந்தலைக்கு அந்தரங்க வாஹனமாய், 71. (த்வதங்க்ரி ஸம்மர்த்த கிணாங்கசோபி)யாய், விஜயத்வஜமாயிருக்கிற விநதாதநயன் § "ஊரும் புட்கொடியுமஃதே", 69. (தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜ:) என்றும் சொல்லுகிற ஸர்வவித கைங்கர்யங்களிலும் அந்விதனாய், ஸத்தை பெற்றிருக்கும் என்கிற அர்த்தத்தை "ஆஸநம் வாஹநம்" என்கிற பதத்வயமும் ப்ரகாசிப்பிக்கிறது. † "பொருசிறைப் புள்ளுவந்தேறும் பூமகளார்" :: "திருவிருந்த மார்வன்" ||† "கருடன் மேற்கொண்ட" என்று சொல்லுகிறபடியே இவள் சேர்த்தியிலே இவர்கள் அடிமைசெய்யும்படியை தர்சிப்பித்து அநுபவித்தார்களிறே. இத்தால் 72. (கருடா கருடாஸநா) என்கிற ப்ரமாணார்த்தம் சொல்லப்பட்டது.

"வேதாத்மா வாஹநம்" என்கையாலே, ஸ்வகுணாநுகுணமாக ஸ்வஸ்வ (தாமஸ) வாஹனங்களையுடைய அதமதேவதாபார்யைகளில் இவளுக்குண்டான உத்கர்ஷம் தோற்றுகிறது. §/ "பறவையேறு

‡ திருவாய்(1-8-1) || திருவாய்(1-4-6) // திருவாய்(8-10-6) †† திருவாய் (1-4-1) ‡/பெரியதிரு(9-2-8) §திருவாய்(10-2-3) †திருவாய்(1-9-3) :: நான்-திருவ-92. ||† மூன்-திருவ-57. §/ பெரியாழ்-திரு (5-4-2)

பரம் புருடா" என்கிறபடியே, "கருடவாஹனன்" என்கை அவனுக்கு ஸர்வாதிகத்வத்யோதகமானாப்போலே, இவளுக்கும் ஸர்வோத்கர்ஷ ஹேதுவாயிருக்குமிறே. "பணிபதி: ஶய்யாऽऽஸநம் வாஹநம் வேதாத்மா" என்கையாலே, அந்யோந்யம் விருத்தஜாதீயரையும் யுகபத் அவிருத்தமாக அடிமைகொள்ளுகிற அகடித கடநாஸாமர்த்யம் தோற்றுகிறது. / "புட்கொடியாய்! தீவாய் நாகணையில் துயில்வானே! திருமாலே!" என்று, ஸர்வாதிகத்வ லக்ஷணங்கள் மூன்றையும் சேர்த்து அநுபவித்தாப்போலே, இவரும் "காந்தஸ்தே" இத்யாதியாலே விஷ்ணுபத்நீத்வ ஶேஷஶாயித்வ கருடவாஹனத்வங்களை யுகபதேவ அருளிச்செய்தாராயிற்று.

ஆக, இப்படி அகிலஸூரிபரிப்ருடரான ஶேஷ ஶேஷாஶநருடைய ஶேஷத்வம் சொன்னபோதே, ஶேஷாஶநர் முதலான அஶேஷ ஶேஷவர்க்கத்தினுடைய ஶேஷத்வமும் கைமுதிகந்யாயஸித்தமிறே. 73. (த்வதீய புக்தோஜ்ஜித ஶேஷ போஜிநா) 74. (ஹதாகிலக்லேஶமலை:) என்கிற ச்லோகத்வயத்தாலும் அகிலஸூரிவர்க்கங்களும் அகிலஜகந்மாதாவான இவள் திறத்தில் அடிமை செய்யும்படியை, இவர்தாமே அருளிச் செய்தாரிறே. 62. (ஶ்ரியா ஸஹாஸீநம்) என்று இவளோட்டைச் சேர்த்தியிலேயிறே அஶேஷபரிஜனமும் அடிமைசெய்வது. இவருடைய திவ்யஸூக்தியிற்படியே, பாஷ்யகாரரும் 75. (ஸ்ரீவல்லப) என்று தொடங்கி 75. (ஶேஷஶேஷாஶநப்ரமுக நாநாவிதாநந்தபரிஜநபரிசாரிகா பரிசரிதசரணயுகள) என்று அனுஸந்தித்தருளினாரிறே. 76. (தந்யாஸ்தே பரிசாரகர்மணி ஸதா பஶ்யந்தி யே ஸூரய:) என்று பட்டர் அருளிச்செய்தாரிறே. இனித்தான் திருமகள் என்றிறே குற்றேவல் செய்வது. 77. (ஶேஷஶேஷாஶநாதிஸர்வம் பரிஜநம் பகவதஸ் தத்ததவஸ்தோசிதபரிசர்யாயாமாஜ்ஞாபயந்த்யா) என்று இவருடைய ஆஜ்ஞானுவர்த்தனபராயிறே அஶேஷபரிஜனமுமிருப்பது.

அவன்றான், 78. (ஸஹ பத்ந்யா) என்று பத்நீஸஹிதனைப் ப்ராப்தவிஷய பரிசர்யை பண்ணுமென்கையாலும் ப்ரஹ்மாதிகள் ஸதயிதராய்க்கொண்டு தாஸதாவஸீகணமாயிருப்பர்களென்று மேலே

---

/ பெரியதிரு (7-7-9)

சொல்லுகையாலும், இவர்களும் ஸபத்நீகராய்க்கொண்டு விஷ்ணு பத்னிக்கடிமையாயிருப்பர்களென்னுமிடம் ஸித்தமிறே. இவர்கள் தான் அஞ்ஜலிவிசோகைகளோடும், காந்திவாருணிகளோடும், ருத்ராநுகீர்த்திகளோடும், ஸௌத்ரவதியோடும், ஸுதர்சனபத்னி விஜய பத்னியோடுக்கூட ஸகுடும்பமாகவிறே ஜகத்குடும்பியான ஸ்ரிய:பதிக்கு அடிமைசெய்வது. ஆகையிறே, 75. (பரிஜநபரிசாரிகா பரிசரிதசரண யுகள) என்று அருளிச்செய்தது. இவர்கள்தான் பாகவதஸத்கார தசையிலும் * பதியினிற்பாங்கினில் பாதங்கள் கழுவி, * பூசித்து நல்குவது தம் தேவியரோடே சேறவிறே.

இனி, இவர்களிலும் இவர்கள் மஹிஷிகள் * தேவதேவதிவ்ய மஹிஷிக்கு அந்தரங்க பரிசாரகைகளாயிருக்கும்படியை 79. (ஸைந்ய துரீணப்ராணஸஹாயாம் ஸௌத்ரவதீமாசிஸ்ரயமம்பாம் । ஸ்ரீபதலாக்ஷாலாஞ்சிதஸேவாப்ரோதலஸத்தோர்வல்லிவிலாஸாம் ॥) 80. (தார்க்ஷ்யபக்ஷதிவதஸ்ய வல்லபாம் ருத்ரயா ஸஹ ஸுகீர்த்திமர்ச்சயே। ஹர்ஷபாஷ்பமபி கீர்த்திமர்த்திநாம் யந்முகேந கமலா கடாக்ஷயேத் ॥) என்று பட்டர் அருளிச்செய்தாரிறே.

இனி, பூமிநீளைகளும் இவளுக்கு சேஷபூதராய் ஸேவித்திருப்பர்கள். 81. (ஸ்ரீஸஹாய:—உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித:) என்றதிறே. 82. (மாதவ! த்வயி—அஹம் சிஷ்யா ச தாஸீ ச பக்தா ச) என்று தான் அருளிச்செய்தாளிறே. 83. (உத்புல்லபங்கஜதடாகமிவோபயாநி ஸ்ரீரங்கராஜமிஹ தக்ஷிணஸவ்யஸீம்நோ:। லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம் சாயாமிவாப்யுதயிநீமவநீஞ்ச தஸ்யா:।) என்று இவளுக்குப் பாதச்சாயைபோலே பாதந்த்ரர்களாயிருப்பர்களென்றும், * புஷ்பாங்கராகங்களோபாதி போகோபகரணங்களாய் * ஸ்தனபாஹுத்ருஷ்டிகள்போலே அவயவபூதராயிறே, அல்லாத மஹிஷீவர்க்கங்களிருப்பது என்றும் பட்டர் அருளிச்செய்தருளினரிறே. / "குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழல்போல்வனர்" என்னக்கடவதிறே.

ஆக, பூமிநீளைகள் முதலான மஹிஷிகளும், திருவடி திருவனந்தாழ்வான் முதலான ஸூரிவர்க்கமும், † "கரைகண்டோர்" என்கிற

/ திருவிரு-3. † திருவாய் (8-3-10)

முக்தரும் இவளுக்கு ஶேஷபூதரென்று சொல்லுகையாலே, நித்ய விபூதியடங்க இவளுக்கு ஶேஷமாயிருக்கும் என்னுமிடம் தர்ஶிப்பிக்கப்பட்டது. அனந்தரம், லீலாவிபூதியடங்க இவளுக்கு ஶேஷமாயிருக்குமென்னுமிடத்தை அருளிச்செய்ய உபக்ரமித்து, அதில் ப்ரதமம் லீலாவிபூதிகாரணமான மூலப்ரக்ருதி இவளுக்கு ஶேஷமாயிருக்கும்படியை தர்ஶிப்பித்தருளுகிறார்: (யவநிகா மாயா ஜகந்மோஹிநீ) என்று. (ஜகந்மோஹிநீ மாயா தே யவநிகா) அநாத்யஜ்ஞாநத்தாலே ஜகத்தை மோஹிப்பிக்கக்கடவதாய் விசித்ரகார்யகரணோபகரணமாகையாலே மாயாஶப்தவாச்யையாயிருக்கிற மூலப்ரக்ருதி, ஸௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்தகுணகண விஶிஷ்டமான உன்னுடைய திவ்யமங்களவிக்ரஹமும் ததாதாரமான திவ்யாத்மஸ்வரூபமும் ப்ரதிகூலர் த்ருஷ்டிகோசரமாகாமல் மறைக்கைக்குத் திரையாயிருக்கும். திரையாவது,— அந்தர்வர்த்தி பதார்த்தங்களை பஹிச்சரர்க்குத் தெரியாதபடி திரோதானம்பண்ணுவதாய், ஶுக்ல க்ருஷ்ண ரக்ததந்துக்களால் சமைக்கப்பட்டு நாநாவர்ணங்களாலே விசித்ரையாய், அத்யாச்சர்யவிஶிஷ்டையாய் இருப்பதொன்று. இதுவும் திவ்யதம்பதிகளுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும் திவ்ய மங்களவிக்ரஹத்தையும், திவ்யாவயவங்களையும் அநாஶ்ரிதர்க்கு கோசரியாதபடி அஜ்ஞானத்தை விளைத்துத் திரோதாயகமான திரஸ்கரிணியாயிருக்கையாலும் 84. (லோஹிதஶுக்லக்ருஷ்ணாம்) என்கிறபடியே குணத்ரயவிஶிஷ்ட விசித்ரா கர்மஸூத்ரத்தாலே கட்டப்பட்டு விசித்ரஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே ஆஶ்சர்யதமையாயிருக்கையாலும், திரையாக நிரூபிக்கிறார்.

(ஜகந்மோஹிநீ) பரமாத்மவிஷயமாகவும், ப்ரத்யகாத்மவிஷயமாகவும், ஸ்வவிஷயமாகவும் அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களைப் பிறப்பித்து, அத்தாலே ஜகத்தை மோஹிப்பிக்கையாலே "ஜகந்மோஹிநீ" என்கிறார். பரமாத்மாவினிடத்தில் அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களைப் பிறப்பிக்கையாவது,—ஸ்ரிய:பதியாய், நிகில ஹேயப்ரத்யநீக கல்யாணகுணவிஶிஷ்டனாய், உபயவிபூதிநிர்வாஹகனாயிருக்கிற புருஷோத்தமனை "நிர்விஶேஷசிந்மாத்ரவஸ்து" என்று மாயாவாதம் சொல்லுதல்; "சிதசிதீச்வரர்கள் மூன்றும் ஏகத்ரவ்ய பரிணாமம்" என்று பேதாபேதம் சொல்லுதல்; "கர்மானுஷ்டானத்

துக்குச் சேதனனுண்டாகில், பலப்ரதானத்துக்குக் கர்மமுண்டாகில், இனி ஈச்வரன் ஏதுக்கு'' என்று தத்ஸத்பாவத்தை இசையாதொழிதல்; ஏவமாதிகளான புத்திகளைப் பிறப்பிக்கை. ப்ரத்யகாத்மாவினிடத்தில் அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களைப் பிறப்பிக்கையாவது,—85. (அநாத்மந்யாத்மபுத்திர்யா) என்கிறபடியே "தேஹமே ஆத்மா" என்னுதல், இந்த்ரியாதிகளை ஆத்மா என்னுதல், தேஹபரிமாணமென்னுதல், அந்யசேஷமென்னுதல், ஸ்வதந்த்ரமென்னுதல், ஏவமாதியான விப்ரதிபத்திகளை விளைக்கை. ஸ்வவிஷயமாக விபரீததீயை விளைக்கையாவது,—ஸ்வகார்யமான ஶப்தாதிகளிலே போக்யத்வ புத்தியைப் பிறப்பிக்கை. இவ்வர்த்தத்ரயத்தையும் பாஷ்யகாரர், 86. (பகவத் ஸ்வரூபதிரோதாநகரீம் விபரீதஜ்ஞாநஜநநீம் ஸ்வவிஷயாயாஶ்ச போக்ய புத்தேர் ஜநநீம்) என்றருளிச்செய்தாரிறே.

'மாயா'ஶப்தத்தாலே 87. (மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்) என்கிறபடியே மூலப்ராக்ருதியைச் சொல்லுகிறது. இதுதான் மாயையாகையாலேயிறே ஜகந்மோஹினியாயிற்று. 88. (அநாதிமாயயா ஸுப்த:) என்னக்கடவதிறே. அஜ்ஞாநஹேதுவாயிறே இதுதானிருப்பது. ஆக, இப்படி மாயாஶப்தவாச்யையாய், ஜகன்மோஹினியான மூலப்ரக்ருதி யவனிகாரூபேண கிஞ்சித்கரித்து சேஷமாயிருக்குமென்றதாயிற்று. யவனிகையாகில், அந்தர்வர்த்திகளோடு பஹிச்சரரோடு வாசியற த்ருஷ்டி ப்ரஸரண விரோதத்தாலே அந்யோந்யாவலோகநரோதினியாயிறே இருப்பது. அப்படியே ப்ரக்ருதியை யவனிகையாக நிரூபிக்கும்போது பிராட்டிக்கும் கர்மவச்யத்வமும், அத்தாலே பகவந்மாயா திரோஹிதஜ்ஞானத்வமும் அங்கீகரித்ததாய் விடுமிறே. ஆகையால் இது சேரும்படி என்னென்னில்: தச்சேஷபூதையாய், தந்நியாம்யையாய், தததீநவ்யாபாரத்தையுமுடைத்தான ப்ரக்ருதி, ஸ்வாமினியாய், நியாமகையுமாயிருக்கிற இவளுடைய ஸர்வவிஷயத்ருஷ்டி திரோதானம் பண்ணமாட்டாதிறே. 89. (மாயயா ஸந்நிருத்த:) என்று கொண்டு கர்மவச்யையாகிலிறே மாயா திரோஹிதஸ்வப்ரகாஶையாயிருப்பது. ஈஶ்வரனைப்போலே அகர்மவஶ்யையான இவளுக்குத் திரோதானம் கூடாதிறே. ஆகையாலே ப்ரதிகூலர்க்கும் தத்ஸ்வரூபரூபாதிகள் யதாவாகத் தோற்றுதபடி

திரோதானம் பண்ணுமத்தைப் பற்றத் திரஸ்கரணியாக ரூபித்தவித்தால் ஒரு விரோதமில்லை.

ஆகக் கீழ் நித்யவிபூதியிலுள்ளார் இவளுக்கு ஶேஷபூதராயிருக்கும்படியை தர்ஶிப்பித்தருளி, லீலாவிபூதி காரணமான மூலப்ரக்ருதியினுடைய ஶேஷத்வத்தை அருளிச்செய்து, ததாரப்தாண்டாந்தர்வர்த்திகளாய், தாத்ருஶப்ரக்ருதிமோஹிதராய், கர்மவஶ்யருமான ப்ரஹ்மாதிகள் ஸபத்நீகராய்க்கொண்டு இவளுக்கு அடிமையாயிருக்கும்படியை அருளிச்செய்கிறார் மேல், (ப்ரஹ்மேஶாதீத்யாதியால்). திரைவளைத்திருக்கவேண்டும்படி லோகவிலக்ஷணரான திவ்யதம்பதிகளைச் சொல்லி, 58. (ஜாக்ரதஸ் ஸ்வபதச்ச) என்று கொண்டு திரைக்குள்ளோடு புறம்போடு வாசியற * உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்து வாழும் அந்தரங்கரைச் சொல்லி, திரைதன்னைச் சொல்லி திரைக்குப் புறம்பு நின்று ஸேவித்திருக்குமவர்களைச் சொல்லுகிறது. § கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலானிறே. ‡ "நீருடி தான் காணமாட்டாத" || "கார் செரிந்த கண்டத்தான் எண்கண்ணான் காணான், அவன் வைத்த பண்டைத் தானத்தின் பதி" என்றருளிச்செய்தார்களிறே ஸர்வஜ்ஞரான ஆழ்வார்கள். §§ நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும், நாட்டமாயிரத்தானும் தாந்தாம் கற்ற பெற்றியால் வணங்குமத்தனை போக்கி, கரையருகே நின்று கூப்பிடுகிறவர்கள் கரைகாணமாட்டார்களிறே. †† "சிவற்கும் திசைமுகற்கும் தரமறியலாமோ" என்னக்கடவதிறே.

(ப்ரஹ்மேஶாதீத்யாதி) 90. (யோ ப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்) என்கிறபடியே திருநாபீகமலத்திலே அவ்யவதாநேந பிறக்கையாலே உனக்குப் புத்ரனான ப்ரஹ்மா, தஜ்ஜ்யேஷ்ட புத்ரனாகையாலே உனக்குப் பௌத்ரனான ருத்ரன், ஆதிஶப்தத்தாலே 91. (ஸேந்த்ர:) † "தளிரொளி இமையவர் தலைவன்" // "நின்ற சசிபதியை" §§ "வெண்பகட்டிலொருவன்" என்று இவர்களோடே ஸஹபடிக்கும்படியான நிலைமையுடைய இந்த்ரனையும், * இந்திரனுள்ளிட்ட தேவர் குழாத்தையும் சொல்லுகிறது. ஆக, இப்படி விபுதஶ்ரேஷ்டரான

§ முத-திருவ 56. ‡ நான்-திருவ 27. || நான்-திருவ 73. §§ பெரியதிரு (11-6-3)
†† திருவாய் (2-8-12) † திருவாசிரி 7. // திருவாய் (7-6-7)

ப்ரஹ்மருத்ரர்கள் முதலான தேவதாஸஸமூஹம் உனக்கு தாஸகணமாய், தத்பத்னிகளான ஸரஸ்வதீ ருத்ராணீ இந்த்ராணீ ப்ரப்ருதிகளும் தத்தாஸீபூதரான அப்ஸரஸ்ஸங்கங்களும், உனக்கு தாஸீகணமாய் தாஸக்ருத்யத்திலே அநவரதாந்வயத்தை உடையராய்க் கொண்டு ஸத்தை பெற்றிருப்பாகள். இத்தால் § நீலார் கண்டத்தம்மானும் நிறை நான்முகனும் இந்திரனும்—சேலேய் கண்ணார் பலர் சூழஸேவித்திருக்கும்படியைச் சொல்லிற்றாயிற்று.

† "திருமாலைக் கைதொழுவர்" 92. (ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே பூதஸ்யஜாத: பதிரேக ஆஸீத்) என்றும், 93. (யோ தேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத் விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: ஹிரண்யகர்ப்பம் பஶ்யதி ஜாயமாநம் ஸ நோ தேவஶ் ஶுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து) என்றும் சொல்லுகிறபடியே காரணத்வ நிபந்தநோத்கர்ஷ தர்ஶனத்தாலே ஈச்வரத்வஶங்காஸ்பதரான ப்ரஹ்மருத்ராதிகளோடு தச்சங்காऽநாஸ்பதரான இந்த்ராதிகளோடு வாசியற ஸர்வரும் இவளுக்கு தாஸபூதர் என்று தோற்றுகைக்காக (ஸாரவ்ரஜ:) என்கிறார். இங்ஙனேயாகில், ஜகத்காரணபூதராக ப்ரமாணப்ரஸித்தராயிருக்கிற இவர்கள் இம்மிதுனத்துக்கு இனமினமாக வழிபாடு செய்வார்களென்று சொல்லுகை கீழ்ச் சொல்லுகிற ப்ரமாணங்களுக்கு விருத்தமன்றோ? என்னில்: கீழ்ச் சொன்ன ஹிரண்யகர்ப்பருத்ரஶப்தங்கள் யோகத்தாலும் அபர்யவஸாநவ்ருத்தியாலும் நாராயணனை ப்ரதிபாதிக்கிறனவாகையாலே விரோதமில்லை.

ஆகையிறே 94. (ந ப்ரஹ்மா நேஶாந:) என்று இவர்களை ஸம்ஹார்யராகச்சொல்லி 94. (அத புருஷோ ஹ வை நாராயணோऽகாமயத ப்ரஜாஸ் ஸ்ருஜேயேதி। நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்ரோ ஜாயதே। நாராயணாதிந்த்ரோ ஜாயதே। நாராயணாத் த்வாதஶாதித்யா ருத்ரா வஸவஸ் ஸர்வாணி சந்தாம்ஸி॥) 95. (தத்ர ப்ரஹ்மா சதுர்முகோऽஜாயத) (த்ர்யக்ஷஶ் ஶூலபாணி: புருஷோऽஜாயத) என்று இவர்களை ஸ்ருஜ்யராகச் சொல்லிற்று. ஆகையிறே 94. (ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்) என்று, "நாராயணனே ஸகலஜகத்காரணபூதன்" என்று உபனிஷத்துக்கள் ஓதிற்று. †† "நான்முகக்

---

§ திருவாய்(6-10-8) † முத-திருவ 52. †† திருவாசிரி 4.

கொழுமுளை யீன்று, முக்கணீசனொடு தேவு பல நுதலி மூவுலகும் படைத்த உந்தி மாயக்கடவுள் மாமுதலடியே'' என்றும், ‡‡ "நான் முகன் தன்னொடு தேவருலகொடு உயிர் படைத்தான்'' என்றும் இவ்வர்த்தத்தை த்ரமிடோபனிஷத்து தர்ஶிப்பித்ததிறே. 96. (கஸ்யோதரே ஹரவிரிஞ்சிமுக: ப்ரபஞ்ச: ) என்றும், 97. (விபோர் நாபீபத்மோ விதிஶிவநிதாநம்) என்றும் ஆழ்வார்களை அடியொற்றின ஆசார்யர்களும் இப்படி தர்ஶிப்பித்தார்களிறே.

இப்படி உபயோபனிஷத்ப்ரஸித்தமான ஜகத்காரணத்வத்திலே * ஸ்திரசராசநாதாரதம்யத்திலே ப்ரமாணமான ப்ரூபங்கத்தையுடையளாய், * ஸ்வர்க்கதுர்க்கத்யாதிகளைப்பண்ணும்போது ஸ்வேங்கிதபராதீனனுய்க்கொண்டு ஸர்வத்தையும் பண்ணும்படி தத் வல்லபையாய், அவனுடைய * சிதசித்விதாநவ்யஸனத்தை ஸார்த்தமாக்குமவளாய் தத்பத்னியாகையாலே ஸர்வலோகத்துக்கும் மாதாவாய், அவன் பிதாவாகையாலே ஸர்வர்க்கும் பிதா மாதாக்கள் 98. (மாதவ:) என்னும்படி திருமாலிறே. ஆகையிறே ‡ "திசைமுகனர் தங்களப்பன்'' § "நான்முகற்குத் தந்தைகாண்'' என்று ப்ரஹ்மாதிகளுக்கும் பிதாவென்றும் 1. (பித்ருதேவோ பவ) என்கிறபடியே, || "ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்'' என்னும் பாதேவதையாகவும் அருளிச் செய்தது. இவர்கள் தாங்களும் :: "எந்தையெமக்கருளெனநின்று'' என்று பித்ருத்வத்தை அநுஸந்தித்து, // "எம்மை—நின்னுள்ளே தோற்றிய இறைவா'' என்று பித்ருத்வப்ரயுக்தமான ஶேஷஶேஷிபாவஸம்பந்தத்தை உணர்ந்து * இறையாதலறிந்தேத்திக் * கந்தமலர் கொண்டு தொழுது * மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய் * அந்தியம் போதிலே திருவந்திக்காப்பிட்டு * சிற்றஞ்சிறுகாலையிலே வந்து திருப்பள்ளியுணர்த்தி * அலங்கலம் தொடையல்கொண்டு, * மாநிதி கபிலை முதலான /§ "படிமெய்க்கலம் காண்டற்கு ஏற்பனவாயின கொண்டு'' என்று சொல்லும்படி ஆராதநோபகரணங்களெல்லாம் ஏந்திக் கொண்டு அடியிணை பணிந்து * வண்ணச்சிறுத் தொட்டில் வரக்காட்டுவது; * இடைவிம்விக்கோத்த உடையார் கணமணியோடொண் மாதுளம்பூ விடுதருவது; * எழிலுடைக் கிண்கிணி தந்துவனுய்

‡‡ திருவாய் (4-10-1) ‡ பெரியதிரு (2-2-7) § பெரியதிரு (11-5-2) || நான்-திருவ-96. :: பெரியதிரு (4-1-4) // திருவாய் (2-2-10) /§ திருப்பள் 8

நிற்பது; * சங்கின் வலம்புரியும் அங்கைச் சரிவளையும் போத்தருவது; * அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு தொழுவது; * ஓதக் கடலின் ஒளிமுத்தினாரமும் சாதிப்பவளமும் சந்தச்சரிவளையும் விடு தருவது; ஆக, இப்படி †"நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான் முகனும் முறையால் சீரேறு வாசகம் செய்ய நின்ற திருமால்" என்கிறபடியே, இவர்களெல்லாரும் ஶேஷஶேஷிபாவமுறையாலே ஶ்ரிய:பதிக்கு அடிமை செய்து ‡"என் திருமார்வன் தன்னை" என்று தொடங்கி அருளிச்செய்தபடியே இவர்கள் தங்கள் மஹிஷிகளோடே விஶிஷ்டத்துக்கு ப்ரகாரமாயிருக்கையாலே இருவர்க்கும் ஶேஷபூதரா யிருக்கும்படியைத் திருவுள்ளம்பற்றி (ப்ரஹ்மேஶாதிஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:) என்கிறார்.

(தாஸீகண:) லோகத்திலே * வநஸ்பதி ப்ருஹஸ்பதி தாரதம்ய ஹேதுவான பரிபூர்த்தியையுடைய பாரதியைப் பாதசேடியாயுடைய வளாயிறே இவளிருப்பது. மலைமகளுக்குத் தலைமகளான கலைமகள் மலர்களுக்கு மனையடிமையென்றபோதே மற்றுள்ளார் அடிமையென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. 99. (த்ரய ஏவாதநா ராஜந் பார்யா) என்கிற ந்யாயத்தாலே ப்ரஹ்மாதிகள் ஶேஷபூதரென்றபோதே தத்பத்னிகளுக்கும் ஶேஷத்வம் ஸித்தமாயிருக்க "ஸதயித:" என்று விஶேஷித்தருளுவானென்னென்னில்: ப்ரஹ்மாதிகள் பக்கல் சிலர்க்கு ஈஶ்வரத்வஶங்கா ப்ராந்தியாலே தத்பத்னிகள் பக்கலிலேயும் லக்ஷ்ம்யம்ஶப்ராந்தி உண்டாயிருக்குமிறே. தந்நிராகரணார்த்தம் "ஸதயித:" என்று விஶேஷித்து அருளுகிறார். அவர்கள் பக்கல் ஈஶ்வரத்வ ஶங்காநிராகரணச்ருத்யாதிகளாலே தத்பத்னிகள் பக்கல் லக்ஷ்ம்யம்ஶ வாதமும் நிராக்ருதமிறேயென்னில் தாத்பர்யத்தாலே ஸித்திப்பதிலும் ஶப்தத: சொல்லுகை மிகவும் ஸ்பஷ்டமாயிருக்குமிறே. அது தோன்ற இப்படி அருளிச்செய்யக் குறையில்லை. ஆக, இப்படி ப்ரதானரான ப்ரஹ்மாதிகள் இவளுக்கு ஶேஷபூதரானால், இவ்வருகுள்ளார் ஶேஷபூதரென்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தமிறே. ஆக, உபய விபூதியும் இவளுக்கு ஶேஷமென்று தர்ஶிப்பித்தாராயிற்று.

இப்படி, "காந்தஸ்தே புருஷோத்தம:" என்று கர்த்தர்யர்த்தத்தையும், "பணிபதி: ....தாஸீகண:" என்று கர்மண்யர்த்தத்தையும்

† பெரியாழ்-திரு (4-1-5) ‡ திருவாய் (7-6-7)

உடையளாகையாலே "ஸ்ரீ:" என்று உனக்குத் திருநாமமென்கிறார்: (ஸ்ரீரித்யேவ ச நாம தே) இத்யாதியாலே. "ஸ்ரீயத இதி ஸ்ரீ:" என்றும், "ச்ரயத இதி ஸ்ரீ:" என்றும் சொல்லுகிற வ்யுத்பத்த்வயார்த்தமும் உண்டாளுலிறே ஸ்ரீஶப்தம் ஸார்த்தமாவது. அன்றிக்கே கீழ்ச்சொன்ன விஷ்ணுபத்னீத்வத்துக்கும் உபயவிபூதிஶேஷித்வத்துக்கும் ச்ருதிஸ்ம்ருதிகள் தேடவேணுமோ? ஸர்வஶேஷித்வவாசகமாய் உனக்கு அஸாதாரணமான திருநாமமே போராதோ? என்கிறாராகவுமாம். (ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி) 100. (அந்தர்பஹிச்சதத் ஸர்வம் வ்யாப்ய நாராயண:) என்றும், "எண்பெருக்கந்நலத்தொண்பொருள்" என்றும், § "பொங்கு புணரி" என்றும் அர்த்தத்தைச் சொல்லிப் பின்பு ஶப்தத்தைச் சொன்னாப்போலே, இங்கும் ஸ்ரீஶப்தார்த்தத்தை முந்துற அருளிச்செய்து, அநந்தரம் ஸ்ரீஶப்தத்தை அருளிச்செய்கிறார்: (ஸ்ரீரிதி) என்று. 101. (தேவோ நாமஸஹஸ்ரவாந்) என்று * பேராயிரம் கொண்டதோர் பீடுடையனனுலும் "நாராயணன்" என்று அவனுக்கு நிரூபகமானாப்போலே "லக்ஷ்மீ:" என்று தொடங்கி, அநேகம் திருநாமங்களுண்டேயாகிலும் இவளுக்கு அஸாதாரண நிரூபகம் "ஸ்ரீ:" என்கிற திருநாமமாகையாலே (ஸ்ரீரித்யேவ ச நாம தே) என்கிறார். ஸர்வாதிகவஸ்துவுக்கு வாசகஶப்தம் இது வல்லதில்லாமையாலே (ஸ்ரீரித்யேவ) என்று அவதரிக்கிறார்.

"ஸ்ரீங்–ஸேவாயாம்", "ச்ரு–விஸ்தாரே", "ச்ரூ–ஹிம்ஸாயாம்", "ச்ரு–ச்ரவணே" இத்யாதிதாதுபேதத்தாலே ஸ்ரீஶப்தத்துக்கு அநேகார்த்தங்களுண்டாயிறே இருப்பது. அவ்வர்த்தபேதங்களைப் பற்ற நிருக்திபேதங்கள் உண்டாயிருக்குமிறே. ஆகையாலே, "ஸ்ரீயத இதி–ஸ்ரீ:" "ச்ருணாதீதி–ஸ்ரீ:" "ச்ருணோதீதி–ஸ்ரீ:" "ச்ராவயதீதி–ஸ்ரீ:" இத்யாதிநிருக்திகள் இவ்விடத்திலே விவக்ஷிதங்கள். 46. (ச்ருணாதி நிகிலாந் தோஷாந் ச்ரூணாதி ச குணைர்ஜகத்। ஸ்ரீயதே சாகிலைர்நித்யம் ச்ரயதே ச பரம் பதம்॥ ச்ரயந்தீம் ஸ்ரீயமாணாஞ்ச ச்ருண்வதீம் ச்ருணதீமபி॥) என்று இவைகள்தான் ப்ரமாண ப்ரஸித்தங்களாயிறே இருப்பது. அகிலசேதனருக்கும் ஆச்ரயணீயையாய், தான் அவனை ஆச்ரயித்து லப்தஸ்வரூபையாய், ஆச்ரிததோஷங்களை ஹிம்ஸித்து,

§ பெரியதிருமொழி (6-10-9)

அத்வேஷாதிகுணங்களை விஸ்தரிப்பித்து, ஆஸ்ரிததைந்யோக்திகளை ச்ரவித்து, இவர்களை அங்கீகரிக்கைக்கு அநுகுணமான வசனங்களை அவனை ச்ரவிப்பிக்கை முதலான ஆகாரங்கள் புருஷகாரபூதையான பிராட்டிக்கு அவச்யாபேக்ஷிதங்களாகையாலே இந்நிருக்திகள் எல்லாவற்றையும் ஸ்ரீஶப்தத்துக்கு அர்த்தமாக ஆசார்யர்கள் அநுஸந்திப்பார்கள்.

இப்படிக் கீழ்ச்சொன்ன ஆகாரங்களாலே அவனுக்கும் பூஜ்யையாயிருக்கும்படியை அருளிச்செய்கிறார் (பகவதி) என்று. 102. (தத்ர பூஜ்யபதார்த்தோக்தி பரிபாஷாஸமந்வித:) என்று பகவச்சப்தம் பூஜ்யவாசியாய் அகிலசேதனர்க்கும் பூஜ்யனான அவன் தனக்கும் பூஜ்யையாயிருக்குமென்றபடி. * பகவந்நாராயணனுக்குப் பூஜ்யையாகையாலேயிறே 49. (பகவதீம்) என்று அருளிச்செய்தது. ஆகையிறே † "நன் மார்பின்மேலும்" என்று அர்ச்சிக்கிறது. இப்படி ஸ்வரூபத்தாலும் குணத்தாலுமாயிருக்கும் ஜ்ஞானஶக்த்யாதி கல்யாணகுணங்களை உடையளாய் ஹேயகுணரஹிதையுமாயிருக்கையாலே (பகவதி) என்கிறார். 102. (மைத்ரேய பகவச்சப்த: ஸர்வகாரணகாரணே। ஸம்பர்த்தேதி ததா பர்த்தாபகாரோऽர்த்தத்வயாந்வித:। நேதா கமயிதா ஸ்ரஷ்டா ககாரார்த்தஸ்தா முநே। ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸ் ஶ்ரிய:। ஜ்ஞாநவைராக்யயோச்சைவ ஷண்ணாம் பக இதீரணா। வஸந்தி தத்ர பூதாநி பூதாத்மந்யகிலாத்மநி। ஸ ச பூதேஷ்வஶேஷேஷு வகாரார்த்தஸ்ததோऽவ்யய:। ஏவமேஷ மஹாஶப்த: மைத்ரேய பகவாநிதி। பரமப்ரஹ்மபூதஸ்ய வாஸுதேவஸ்ய நாந்யக:। ஜ்ஞாநஶக்திபலைச்வர்ய வீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர்குணாதிபி:॥) என்கிறபடியே ஹேயகுணராஹித்ய ஸத்குணஸாஹித்யங்களிரண்டும் பகவச்சப்தவாச்யங்களாயிறே இருப்பது. ஆகையிறே 103. (ஷண்ணாம் பக இதீரணா) என்று பகவச்சப்தத்துக்கு ஜ்ஞானாதிகுணங்கள் அர்த்தமாகவும், "அந்" என்கிற பதத்துக்கு ஹேயராஹித்யம் அர்த்தமாகவும் பட்டர் வ்யாக்யானம் செய்தருளிற்று. "அந்" என்கிறது, நஞர்த்தமாயிருக்கிறது எங்ஙனேயென்னில்; "ந" என்கிறவிடத்தில், "ந்", "அ" என்று பிரிவுண்டாய், அதிலே "ந்" என்றது ப்ரக்ருதியாய் "அ" என்கிறது, ஸுகமுகோச்சாரணமாயிறே இருப்பது. இவ்விடத்தில்

† திருவாய் (1-9-7)

"அங்" என்று முன் பின்னாய், பின் முன்னாயிருக்கிறது; சாந்தஸப்ரயோக மிருக்கும்படி. இவ்விடத்தில், "103. (பச்யக: கச்யபோ பவதி) என்றுப்போலே" என்றிறே அருளிச்செய்வது. ஆகையாலே, ஹேயகுண ராஹித்ய ஸத்குண ஸாஹித்யங்கள் பகவச்சப்தவாச்யங்களென்னத் தட்டில்லை.

இவ்விடத்தில் ஹேயமாவது—ஆச்ரிததோஷ குணஹானிகள் பார்த்து அவர்களை உபேக்ஷிக்கை. தத்ராஹித்யமாவது—அவையிரண்டும் அடுகுவளமாக அங்கீகரிக்கை. * ஆர்த்ராபராதைகளான ராக்ஷஸிகளை அபராதமே பற்றாசாக அங்கீகரித்து ரக்ஷித்தாளிறே. 104. (த்ராஹி த்ராஹி) என்ற † அண்டஜாதமனையும் அங்கீகரித்துத் திருவடிகளிலே தலையாக ரக்ஷித்ததும் உண்டிறே. குணங்களாவன—ஜ்ஞானஶக்த்யாதிகள். தத்ஸாஹித்யமாவது—அவை ஸ்வரக்ஷண ஹேதுவாய் தன் பக்கலிலே சுவறிவிடுகையன்றிக்கே, பரரக்ஷணத்துக்கு உறுப்பாகப் புறவெள்ளமிடும்படி ஸம்பந்நமாயிருக்கை. இவற்றை ஸ்வரக்ஷணத்துக்கு உறுப்பாக்காமல் 105. (தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்) என்றிருந்து 106. (ஶீதோ பவ) 107. (பவேயம் ஶரணம் ஹி வ:) என்று பரரக்ஷணத்துக்கு உறுப்பாக்கினளிறே. இவற்றை குணமென்னலாவது—பரார்த்தமானபோதிறே. ஆகையிறே 108. (குணகணைச்ச ஜ்ஞாநஶக்த்யாதயஸ்தே....ஸகலம் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த) என்று அருளிச்செய்தது. இவன் குணங்களுக்கு வ்யாவர்த்யர் தத்வ்யதிரிக்தர். இவள் குணங்களுக்கு வ்யாவர்த்யன் அவன். அவன் குணங்கள் பும்ஸ்த்வ ப்ரயுக்தமான ஸ்வாதந்த்ர்ய விஶிஷ்டமாய் பித்ருத்வப்ரயுக்தமான * ஹிதஸ்ரோதோ வ்ருத்தியாலே கலங்கினபோதுண்டான ப்ரதாபத்தாலே துராஸதமாய், அத ஏவ புருஷகாரஸாபேக்ஷமாயிருக்கும். ஆகையிறே இவள் குணங்களாலே தத்கோஷ்டி * லகுதரையாயிற்று.

ஆக, இப்படிப் பாபமே பச்சையாக அங்கீகரிக்கைக்கு ஹேதுவாய், பரார்த்தைகவேஷமான ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுண பூர்த்தியை பகவச்சப்தம் சொல்லுகிறது. 100. (ஜ்ஞாநாதிஷட்குணமயா), 110. (ஜ்ஞாநஶக்திபலைச்வர்ய வீர்யஶக்திப்ரபாவிநீம்) எனைக்

† அண்டஜ அதமன்—பக்ஷிகளில் தாழ்ந்த காகாஸுரன்.

கடவதிறே. 111. (ஸ தி³ஸோ பகவாநஶேஷபும்ஸாம்), 112. (ஸ்மர்த்தவ்யோ பகவாந்), 113. (மோததே பகவாந்), 49. (பகவந் நாராயண) என்று அவனை நிர்தேஶித்தாப்போலே தத்துல்யஶீலையான இவளை வ்யவஹரிப்பதும் "பகவதீ" என்றிறே. இந்தப் பூர்த்திதான், கீழ் "புருஷோத்தமன்" என்று சொன்ன பூர்த்திக்கு அடியாயிறே இருப்பது. 49. (பகவந் நாராயண) என்று இவள் பூர்த்திக்கு அடியுடைமை. "ஶ்ரீமந் நாராயண" (த்வயம்) என்றிறே அவன் பூர்த்திக்கு அடியுடைமை. 114. (ஸ்வத: ஶ்ரீ:) இத்யாதி.

இப்படிப்பட்ட அதிஶயஶாலினியான உன்னை யதாவத்தாக ஸ்தோத்ரம்பண்ணப்போமோ? என்கிறார் (த்வாம் வயம் கதம் ப்ரூம:) என்று. (த்வாம்) உக்தப்ரக்ரியையாலே விஷ்ணுபத்னியாய், ததிதரஸர்வஸ்வாமினியாய், ததநுரூபாऽஸாதாரணமான நாமநிர்திஷ்டையாய், பகவத்விலக்ஷணஜ்ஞானஶக்த்யாதி கல்யாணகுணபூஷிதையாய், இவ்வாகாரங்களிலே ஸகலோபனிஷத்ப்ரஸித்தையான உன்னை. (த்வாம் வயம் கதம் ப்ரூம:) ப்ரஹ்மபாவனைகநிஷ்டரான ஸநகாதிகளுக்கும், உபயபாவநாநிஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரஹ்மப்ரதிபாதகங்களான வேதங்களுக்கும் பரிச்சேதிக்கவொண்ணாத ப்ரபாவத்தை உடைய உன்னைப் பரிமிதஜ்ஞாநஶக்திகரான நாங்கள் பரிச்சேதித்துப் பேசுவது எங்ஙனே? என்கிறார். 115. (ந தே வர்ணயிதும் ஶக்தா குணாந் ஜிஹ்வாऽபி வேதஸ:) 116. (ப்ரஹ்மாத்யாஸ் ஸகலா தேவா முநயச்ச தபோதநா:। த்வாம் ஸ்தோதுமபி நேஶாநா:) 117. (உத்பாஹுஸ்த்வாமுபநிஷதஸாவாஹு நைகா நியந்த்ரீம்) என்னக் கடவதிறே. † "நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள்—திருமால் தன்மையை யாரறிகிற்பார்" என்றும், ‡ "மாமலரான் வார் சடையான் என்றிவர்கட்கு எண்ணத்தானாமோ" என்றும், 'ப்ரஹ்மாதிகளும் இவளுடைய வைபவத்தை ஸ்தோத்ரம்பண்ண அஸமர்த்தர்' என்று அருளிச்செய்தார்களிறே; மேலே மேலே புருஷர்களைக் கல்பித்து உத்ப்ரேக்ஷித்தவளவிலும் ஒரொரு குணங்களை அவதி காணவொண்ணாமையாலே 118. (யதோ வாசே நிவர்த்தந்தே) என்று வேதங்களும் நிவ்ருத்தமாம்படி நிரவதிகமான ஆநந்தத்துக்கும் ஹேதுபூதையாய்

† திருவாய்-(8-3-9). ‡ மூன்-திருவ-97.

* சுலகித பகவத்வைச்வரூப்யானுபாவையுமான இவளுடைய ப்ரபாவம் பரிச்சேதிக்கவொண்ணாதென்னுமிடம் சொல்லவேண்டாவிறே.

(வயம்) என்று ஆத்மநி பஹுவசநம். § "என்னுடையாருயிரார்" என்னுமாப்போலே க்ஷேபோக்தியாகவுமாம். 119. (மஹ்யம் நமோऽஸ்து கவயே) என்று தம்மை கர்ஹித்துக்கொண்டாரிறே. 120. (ஸ்தோதும் கே வயமித்யதச்ச ஜக்ருஹு: ப்ராஞ்சோ விரிஞ்சாதய:) என்னக்கடவதிறே. அதவா, (வயம்) 121. (மஹார்ணவாந்தர் நிமஜ்ஜதோரணுகுலாசலயோ: கோ விசேஷ:) என்கிறபடியே வேதங்களுக்கும் சதுர்முகப்ரமுகர்க்கும் 122. (அபி மே ஜந்ம சதுர்முகாத்மநா) என்று அவர்களை த்ருணீகரித்திருக்கிற தமக்கும் அந்யோந்யம் தாரதம்யமுண்டேயாகிலும் இவளுடைய மஹிமார்ணவத்திலே மக்னராமிடத்தில் ஒரு வைஷம்யமில்லாமையாலே எல்லாரையும் கூட்டிக்கொண்டு "வயம்" என்கிறாராகவுமாம். 122. (மாதங்கச்ச மஹாந்) இத்யாதி. கீழ் உக்தரானவர்களோடு ஒருவராய்ப் பரிச்சேதிக்கமாட்டாமையேயன்றிக்கே எல்லாரும் கூடி ஏககண்டராய்ப்பேசினாலும் மேலெல்லை காணவொண்ணாது என்று "வயம்" என்கிறதாதல். (த்வாம் வயம்) † "அவனெவ்விடத்தான் யானார்" என்னுமாப்போலே ஸ்தோத்ரஸ்தோதவ்ய கதோத்கர்ஷாऽபகர்ஷங்களுடைய எல்லை நிலத்தை ஸூசிப்பிக்கைக்காக (த்வாம் வயம்) என்கிறார். :: "அவரை நாம்—அவ்வண்ணத்தவர்" என்னுமத்தனை யென்றாப்போலே, (த்வாம் வயம் கதம் ப்ரூம:) என்கிறார்.

ஆக, இத்தால் "பகவத்விலக்ஷணஜ்ஞாநசக்த்யாதி கல்யாணகுணபூர்ணையாய், குணங்களுக்கு வாசகமாய் ஸர்வோத்கர்ஷப்ரகாசகமான திருநாமத்தை உடையையாய், ஸதயிதரான ப்ரஹ்மாதிகளை தாஸதாஸீகணமாக உடையையாய், அண்டகாரணமான மூலப்ரக்ருதிநிர்வாஹகையாய், 'விஷ்ணுபத்நீ' என்கிற மேன்மையை உடையையாய் இவ்வாகாரங்களாலே ச்ருதிஸ்ம்ருத்யாதிப்ரமாணப்ரஸித்தையாயிருக்கிற உன்னைப் பரிமிதஜ்ஞானசக்திகரான நாங்கள் பரிச்சேதித்துப் பேசுவது எங்ஙனே? என்று பிராட்டியுடைய பெருமையை தர்சிப்பியாநின்றுகொண்டு 123. (ஸ்துமஹே வயம் கிமிதி தம் ந சக்நும:) என்றாப்போலே ஸ்தோத்ராக்ஷேபபுரஸ்ஸரமாக ஸ்தோத்ராந்நிவ்ருத்தராகிறார். இச்லோகத்தால் கடவல்யுபனிஷத்ஸித்தமான த்வயத்தில் ஸ்ரீசப்தத்தை ஸார்த்தமாக அநுஸந்தித்தருளினாராயிற்று.

§ திருவாய் (7-6-5) † திருவாய் (5-1-7) :: திருநெடு-21.

2. யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்வல்லபோऽபி ப்ரபு:
நாலம் மாதுமியத்தயா நிரவதிம் நித்யாநுகூலம் ஸ்வத:।
தாம் த்வாம் தாஸ இதி ப்ரபந்ந இதி ச ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்பயோ
லோகைகேச்வரி! லோகநாததயிதே! தாந்தே! தயாந்தே விதந்॥

2. பதவுரை:—லோகைகேச்வரி—லோகத்திற்கு ஒரே ஈச்வரியா யிருப்பவளே!, லோகநாததயிதே—லோகங்களுக்கெல்லாம் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ப்ரியமஹிஷியாயிருப்பவளே! தாந்தே—கருணைகல்பவல்லியே! யஸ்யா: தே—எந்த உன்னுடைய, நிரவதிம்—அளவற்றதும், ஸ்வத: நித்யாநுகூலம்—இயற்கையாகவே (பகவானுக்கு) எப்போதும் அநுகூலமாயிருப்பதுமான, மஹிமாநம்—பெருமையை, ப்ரபு: த்வதவல்லப: அபி—ஈச்வரனை உன்னுடைய வல்லபனும், ஆத்மந இவ—தன்னுடைய பெருமையைப்போல், இயத்தயா—இவ்வளவென்று, மாதும் ந அலம்—அளவிட்டறியமாட்டானே, தாம் த்வாம்—அப்படிப்பட்ட உன்னை, தாஸ இதி—'தாஸன்' என்றும், ப்ரபந்ந இதி ச—'சரணமடைந்தவன்' என்றும், தே தயாம் விதந் அஹம்—உன்னுடைய கருணையை அறியும் நான், நிர்ப்பய:—பயமற்றவனாய், ஸ்தோஷ்யாமி—துதிக்கிறேன்.

---

ஶ்லோகம் 2. அவ:—(யஸ்யாஸ்த இத்யாதி) ஜ்யேஷ்டனுகையாலே ராஜ்யதாரங்களைப் பறிகொடுத்துச் சுரமடைந்த ஸுக்ரீவனைப் போலே, ஜ்யேஷ்டபுத்ரன் கையிலே அவையிரண்டையும் * பொய்ச் சூதில் தோற்கையாலே * பொறையுடை மன்னரான * பாண்டவர் தம்முடைய பாஞ்சாலியை * மறுக்கி வல்லலைப்படுத்துகைக்கு * அரசர் தமரசற்கிளையவனை துஶ்ஶாஸனன் அவ்வணியிழையைச் சென்று "என்றமக்கு உரிமைசெய்" என்று சுரிகுழலையும் துகிலையும் பற்றி வரவீர்க்க, க்ருஷ்ணையும் * கேஶக்ரஹணப்ராப்தையாய்க்கொண்டு, "அஶுத்தையாய் ஏகவஸ்த்ரையான என்னை, குருக்களுடைய முன்னே நயிப்பிக்கை அந்யாயங்காண்" என்று கூப்பிடச்செய்தேயும் கலைதலைகளைக் கைவிடாமையாலே, கைவிடும்படி ஸம்ப்ராப்தமான மஹாபத்திலே 124. (ஹா க்ருஷ்ண த்வாரகாவாஸிந் இத்யாதி) "* எங்குற்றாயெம்பெருமான்!, இவ்வவஸ்தையை ஆபன்னையாய், அநாதையான என்னை ஏதுக்காக உபேக்ஷிக்கிறாய்? உன்னுடைய

ஆச்ரிதரக்ஷணத்வரை எங்கேபோயிற்று? 124. (ஶங்கசக்ரகதீ பாணே) இத்யாதி. ரக்ஷணபரிகரங்களான ஶங்கசக்ராதிகளை தரித்துக்கொண்டு, இங்கே அடுத்தணித்தாக வந்துநின்று ஆச்ரிதரை நழுவ விடாதவனுமாய், இடக்கை வலக்கை அறியாத அஜ்ஞர்க்கும் ஆச்ரயிக்கலாம்படி ஸர்வஸுலபனாய், ஆபந்நரானவருடைய ஆர்த்தியை ஹரிக்கும்படி அலர்ந்த செந்தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களை உடையையாயிருக்கிறவனே! ஶரணாகதையான என்னை ரக்ஷிக்கவேணும்" என்று ஆக்ரந்திக்கும்படி அபிமானபங்கமாகப் பரிபவிக்க;

அதற்காக அவர்கள் தங்குழாராகப் புக்கைந்து வேண்டிப் பெறக் கொடாமையாலே, ஊரொன்று வேண்டிலும் * கத்தக் கதித்துக் கிடந்த பெருஞ்செல்வமொத்துப் பொருந்திக்கொண்டு உண்ணாதே தன் குடி கெடும்படி தானே மண்ணாள்வானான கொத்துத் தலைவன்— "ஸூச்யக்ரமும் கொடேன்" என்று தள்ளிவிடுகையாலே, ஒன்றும் பெறாத உரோடத்தாலே * பாரொன்றிப் பாரதம் கைசெய்தும், ஸ்தானப்ரஷ்டராய்த் தளர்ந்து பறிகொடுத்த ராஜ்யத்தை ப்ராபிக்கைக்கு * பற்றலர் வீயக்கோல் கையில் கொண்டு பார்த்தன் செல்வத்தேரேறு சாரதியாய், * கழல்கள் சலங்கைக் கலந்தெங்கும் ஆரவாரிப்ப, கையும் மாக்கோலும், பிடித்த கடிவாளக் கயிறும், விரித்த தலையுமாய்க்கொண்டு விஜயம் தோற்ற முன்னின்றானை, அர்ஜுனனும், "ஹே க்ருஷ்ண" என்றழைத்து, "உபயஸேநாமத்யத்திலே ரதத்தை ஸ்தாபி" என்று பாரித்துக்கொண்டு தர்மக்ஷேத்ரத்திலே * சினப்போரிலே 125. (யுயுத்ஸவ:) என்னும்படி உத்யுக்தனாக, இத்தைக் கண்டு * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலருமாய்க் கொண்டு * பாரித்தெழுந்த படைமன்னனை * அந்தகன் சிறுவனைக் கண்ட * இந்திரன் சிறுவனும் * அஸ்தானஸ்நேஹகாருண்ய தர்மாதர்மபியாகுலனாய், பந்துக்கள் பக்கல் வதபீதியாலே 126. (கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர் ஜீவிதேந வா। யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகாஸ் ஸுகாநி ச॥ த இமேऽவஸ்திதா யுத்தே) என்று "ராஜ்யபோக ஸுகங்களும் ஸ்வஜனரக்ஷணார்த்தமாயன்றோ இருப்பது. அவர்கள் தாங்களே யுத்தத்திலே அவஸ்திதரான பின்பு அவர்களை ஹிம்ஸித்து ராஜ்யபோகங்களால் என்ன ப்ரயோஜன

மூண்டு? 127. (ந ஹி மே ஜீவிதேநார்த்த:) 128. (ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண) என்று கொண்டு 129. (விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்) என்னும்படி போர்ப்படைகளையும் விட்டு, 130. (ந யோத்ஸ்யாமி) என்று யுத்தாந்நிவ்ருத்தனானபடியைக் கண்டு, 131. (மாம்) என்று தன் ஸௌலப்யத்தைக் காட்டி, 132. (கரிஷ்யே வசநம் தவ) என்னப்பண்ணி யுத்தே ப்ரவர்த்திப்பித்த க்ருஷ்ணனைப்போலே;

133. (விஸ்மார்ய தாஸ்யாத்மகம்) என்கிறபடியே பிராட்டி விஷயத்திலே அநாதிகாலம் இழந்த அநுபவஜநிதப்ரீதிகார்யமான வாசிககைங்கர்யமாகிற ஸ்தோத்ரத்திலே பாரித்துக்கொண்டு உத்யுக்தராய், விஷய வைலக்ஷண்யத்தைப் பார்த்தவாறே வேதங்களாலும் வைதிகபுருஷர்களாலும் எல்லை காணவொண்ணாதபடி அபரிச்சேத்யமாயிருக்கையாலும் தத்வைலக்ஷண்யாநுரூபஸ்தோத்ரகரணஹேதுவான ஜ்ஞானஶக்திகள் தமக்கு இல்லாமையாலும், ஸ்தோத்ரஸ்தோதவ்யகதோத்கர்ஷாபகர்ஷங்களுடைய ஸீமாபூமியை அநுஸந்தித்து, இப்படிப் பூர்ண விஷயத்தைப் புல்லியரான நாம் பேசில் † "மாசூணாதே" † "மழுங்காதே" என்கிறபடியே, "அவத்யத்தை விளைப்பதில் கைங்கர்யஸாம்ராஜ்யத்தை இழந்து கடக்க நிற்கையே கர்த்தவ்யம்" என்று கருதி, § "அழுக்குடம்பெச்சில்வாயால் தூய்மையில் தொண்டனேன் நான் சொல்லினேன் தொல்லை நாமம் பாவியேன் பிழைத்தவாறென்றஞ்சினேற்கு" என்கிறபடியே பீதபீதராய்த் தம்மை கர்ஹித்துக்கொண்டு "த்வாம் வயம் கதம் ப்ரூம:" என்று கொண்டு ஸ்தோத்ராந்நிவ்ருத்தரான இவரை;

பெரிய பிராட்டியார் "நமக்கு மேன்மை ஸ்வரூபமானவோபாதி நீர்மையும் ஸ்வரூபம் காணும்; ஆனபின்பு, ‖ பேசுவாரெவ்வளவு பேசுவர், அவ்வளவாய்க்காணும் நாமிருப்பது; விஶேஷித்து மாத்ருத்வ ப்ரயுக்தமான வாத்ஸல்யத்தாலும் 134. (கிம் ம்ருஷ்டம் ஸுதவசநம்) என்கிற ந்யாயத்தாலும் உம்முடைய மழலைச்சொல் போக்யமாகக் காணுமிருப்பது" என்று இவருடைய வாக்வ்ருத்திரூபஸ்தோத்ரத்தாலே ஸ்தோத்ரகரண விரோதியான அவித்யாதிகள் நசித்து ஸ்தோத்ரகரணஹேதுவான ஜ்ஞானஶக்த்யாதிகளுண்டாய், நிர்ப்பயராய் ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தராம்படி § "அஞ்சலென்று காவி

† திருவாய் (3-1) § திருக்குற-12. ‖ மூன்-திருவ-21.

போல் வண்ணர் வந்தென் கண்ணுளே தோன்றினர்" என்கிறபடியே அபயப்ரதானபூர்வகமாக // "மயர்வறமதிநலமருளினன்" என்கிற படியே இவர் பக்கலிலே கருணாகடாக்ஷத்தைப் பண்ண, * பூவளரும் திருமகளால் அருள்பெற்று நிவ்ருத்தவிரோதிகராய் ப்ராப்தமான பரபக்த்யாதிகளை உடையராய்க்கொண்டு, தத்ஸ்வரூபரூபகுண விஶேஷங்களை விஶதமாக ஸாக்ஷாத்கரித்து, அனுபவபரீவாஹரூபமான வாசிககைங்கர்யத்திலே ப்ரவ்ருத்தராகிறார்.

கீழ், பரத்வானுஸந்தானத்தாலே பயப்பட்டு நிவ்ருத்தரானர்; இங்கு, கீழ் ஸ்தோத்ராரம்பாக்ஷேபஸம்பந்தஜ்ஞானபூர்வகமாக ஶரணம் புகுந்து, ஹேதுவாகச்சொன்ன ஸ்தோதவ்யகுணோத்கர்ஷத்தை த்ருடீகரியாநின்றுகொண்டு, ததுபசித ஸௌலப்ய விஶேஷானுஸந்தானத்தாலே பயம் சமித்து ஸமாஹிதராய், ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தராகிறார். † "என்னினைவாயென்றிட்டஞ்சுவனே" என்கிறபடியே விஷயவைலக்ஷண்யானுஸந்தானத்தாலும், ஸ்வதோஷானுஸந்தானத்தாலும் ஸ்தோதாக்களுக்கு ஒரு பயம் ஜனிக்கும்; அந்த பயம் ஸௌலப்யாதிகுணாநுஸந்தானத்தாலே சமிக்கவும் கண்டோமிறே. 134. (துரந்தஸ்யாநாதே:) என்று தொடங்கி ஸ்வதோஷானுஸந்தானத்தாலே பயப்பட்டு, 135. (தவ ஸ்மாரம் ஸ்மாரம் குணகணமிதீச்சாமி கதபீ:) என்று பகவத்குணானுஸந்தானத்தாலே அபயங்கதரானரிறே. 135. * (ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந) என்னக்கடவதிறே.

இனித்தான் ஸ்தோத்ரேச்சையுண்டானலும் 136. (ஸ்தோதுமீஹாமஹே யுக்தாம் பாவய பாரதீம்)என்றும், 137. (ஸ ஏத்திம் ஸமக்ரயது ந:) என்றும் சொல்லுகிறபடியே விஷயவைலக்ஷண்யானுகுணமாக * அநாக்ராதாவத்யமாய் அநிமிஷநிஷேவ்யமான ஶப்தஸந்தர்ப்ப ஹேதுவான ஸம்யக்ஜ்ஞானபக்திகள் பெரியபிராட்டியாருடைய கருணாகடாக்ஷத்தாலேயல்லது ஸித்தியாதிறே. 138. (யம் த்வம் தேவிநிரீக்ஷஸே—ஸ புத்திமாந்) என்னக்கடவதிறே. ஆகையாலே ஸ்வவிஷய ஸ்தோத்ரத்திலே பாரித்துக்கொண்டு ப்ரவ்ருத்தரானபடியையும் விஷய வைலக்ஷண்யாநுரூபஸ்தோத்ரகரணஹேதுவான ஜ்ஞானஶக்திகள்

---

// திருவாய் (1-1-1). † இராமா-89.

மாய் தேவஸம்பந்தினியான த்யோதமாநத்வாதிகுணங்களையுடைய ஸம்பத்துண்டு; O "திருவுக்கும் திருவாகிய" என்றும் 12. "ஸ்ரீ: ஸ்ரிய:" என்றும், Z "அகலகில்லேன்" என்றும், நீ 'தண்ணீர், தண்ணீர்' என்னும்படியான அந்த பகவத்விக்ரஹமாகிறஐஶ்வர்யத்தை அபி-ஸாக்ஷாத்கரித்து; அபிஜாதா நநு-அனுபவிக்க இட்டுப் பிறந்தவர்களன்றோ? (அபிமுகீக்ருத்ய ஜாதா:—உத்பந்நா பவந்தீதிஶேஷ:) என்னக்கடவதிறே.

"தே" என்று யுஷ்மச்சப்தஸம்போதநைகளாலே சேதனத்வமும், "ப்ரஹ்மேஶாதி" இத்யாதியாலே, கர்மவஶ்யதாத$_3$ாத்ம்யாப$_4$ாவமும், "மாயா தேயவநிகா" என்று ப்ரக்ருதேரந்யத்வமும். "காந்தஸ்தே புருஷோத்தம:" என்ற வ்யதி$_4$கரணத்தாலே, பகவத்ஸ்வரூபபின்னத்வமும், "ஸர்வாணிரூபாணிக$_3$ாடே$_4$ாபகூ$_3$ட$_4$ாநி" என்று நித்யத்வமும், "லோகநாத$_2$த$_3$யிதே" என்று பகவதபிமதத்வமும், "லோகைகேஶ்வரி" என்று ஸர்வோத்க்ருஷ்டதையும், "ப்ரபு$_4$ர் மாதும் நாலம்" என்று அபரிச்சேத்யத்வமும், இவராலே ப்ரதிபாதிக்கப்பட்டதிறே. 39. (ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ), 144. (விஷ்ணுபத்நீ) என்று, பர்த்ருபத்னிகளுடைய ஸ்வரூபபே$_4$த$_3$மும் 145. (பத்ம$_3$ப்ரியா) என்று தொடங்கிப் பரமசேதனத்வமும், 146. (பும்ப்ரத$_4$ாநேஶ்வரேஶ்வரீ) என்று ப்ரக்ருதேரந்யத்வ அகர்மவஶ்யத்வ பகவதபிமதத்வாதிகளும், 19. (நித்யைவைஷா) என்று நித்யத்வமும், 147. (ஸர்வோத்க்ருஷ்டா ஸர்வமயீ) என்று உத்க்ருஷ்டதையும், 148. (வாச: பரம் ப்ரார்த்த$_2$யிதா ப்ரபத்$_3$யேந்நியத:ஶ்ரியம்) என்று அபரிச்சே$_2$த்$_3$யத்வமும் ஶ்ருதிஸ்ம்ருதிஸித்தங்களாயிறே இருப்பது. 149. (தே$_3$வீ ஶ்ருதிம் பு$_4$க$_3$வதீம்) என்று பட்டரும் அருளிச் செய்தாரிறே. ஏதாத்ருஶப்ரமாணப்ரஸித்தி தோற்ற (யஸ்யாஸ்தே) என்கிறார்.

---

O பெரியதிரு (7-7-1), Z திருவாய் (6-10-10).

இவர் அங்ஙனன்றிக்கே திவ்யசக்ஷுஸ்ஸைப் பெற்றவராகையாலே தத்ஸ்வரூப ஸ்வபாவங்களை உள்ளபடி அறிந்து, பரமசேதனையென்றும், ஆகர்மவஶ்யையென்றும், ப்ரக்ருதிவ்யாவ்ருத்தையென்றும், பகவத்ஸ்வரூபபிந்நையென்றும், நித்யையென்றும், ததத்யந்தாபிமதையென்றும். ஸர்வோத்க்ருஷ்டையென்றும், ஸர்வேச்வரனாலும் பரிச்சேதிக்கவொண்ணாத மஹிமாவை உடையவளென்றும் நிர்ணயித்து அனுபவிக்கிறார்.

143.(மநஸி விலஸதாக்ஷ்ணா ப$_4$க்திஸித்$_3$த$_4$ாஞ்ஜநேந ஶ்ருதிஶிரஸி நிகூ$_3$ட$_4$ம் லக்ஷ்மி தே வீக்ஷமாணா:। நிதி$_4$மிவ மஹிமாநம் பு$_4$ஞ்ஜதே யேऽபி த$_4$ந்யா நநு ப$_4$க$_3$வதி தை$_3$வீம் ஸம்பத$_3$ம் தேऽபி$_4$ஜாதா:) பகவதி–ஸகல கல்யாணகுண ஸம்பந்நையாயிருக்கிற, ஹேலக்ஷ்மி–வாரீர் பெரிய பிராட்டியாரே, தந்யா:–"தநம் ப்ராப்தா:-தந்யா:" என்கிறபடியே தேவரீர் கடாக்ஷவிஷயத்வரூபபாக்யத்தை உடையவர்களாயிருக்கிற, யேऽபி–யாதொரு புருஷர்கள்; "யேऽபி" என்கிறவித்தால் அவர்களுடைய அதிஶயம் வாசாமகோசரம் என்று ஸூசிதம்; பக்திஸித்தாஞ்ஜநேந–உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளில் அநிதரஸாதாரணப்ராவண்யமாகிற கூ$_3$ட$_4$ார்த்த ப்ரகாஶக ஸித்தாஞ்ஜன விஶேஷம் போலேயிராநின்றும், மநஸி விலஸதா-அத ஏவ ஹ்ருதயத்திலே ப்ரகாஶியாநின்றுமுள்ள, அக்ஷ்ணா–த்ருஷ்டியாலே, ஞானக்கண்ணாலே யென்றபடி. ஶ்ருதிஶிரஸி–உபனிஷத்துக்களிலே; ஜாத்யேகவசனம்; "ஶ்ருதிஶிரஸ்ஸு" என்றபடி; நிகூடம்–அத்யந்தம வேதரஹஸ்யமாகையாலே மறைக்கப்பட்டாநின்றுள்ள; தே மஹிமாநம்–உன்னுடைய ஸ்வரூபாத்யைஶ்வர்யத்தை, நிதிமிவ வீக்ஷமாணாஸ்ஸந்த:–ஆபத்துக்கு உறுதுணையாம் சேமவைப்புப்போலே ஸாக்ஷாத்கரியாநின்றுகொண்டு; புஞ்ஜதே–அனுபவிக்கிறார்களோ; தே புருஷா: தைவீம் ஸம்பதம்–அவர்கள் மோக்ஷஹேதுபூத

தமக்கு இல்லாமையாலே, ஸ்தோத்ராந்நிவ்ருத்தரானபடியையும் கண்டு, இவர் பண்ணுகிற ஸ்தோத்ரச்ரவணகௌதுகத்தாலே யதாஸ்தோத்ரம் பண்ணவல்லராம்படி இவர் பக்கலிலே விசேஷகடாக்ஷத்தைப் பண்ணியருள, அத்தையறிந்து, * காருண்யரூபையான இவள் கருணைக்கு இலக்காய், 139. (தாது: ப்ரஸாதாந்மஹிமாநமீசம்–தமக்ரதும் பச்யதி வீதசோக:) என்றாப்போலே, "தாந்தே மயி தே தயாம் விதந்தே மஹிமாநம் நிர்ப்பய: ஸ்தோஷ்யாமி" என்று கொண்டு விஷயத்தை மறுபாடுருவப் பேசுகிறேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார்.

இப்படிப் பெரியபிராட்டியாருடைய ப்ரஸாதம் பெற்றாராகில், இவர் இப்போது விசேஷமாக அறிந்து பேசுகிறதென்னென்னில்: கீழ் வேதங்களும், ப்ரஹ்மாதிகளும் பேச நிலமல்ல என்றார். இங்கு எங்களுக்கும் மணாளனாய், ப்ரஹ்மாதிகளுக்கும் ஜனகனாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கும் பரிச்சேதித்துப் பேசவொண்ணாது என்கிறார்: (யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்வல்லபோऽபி ப்ரபுர் நாலம் மாதுமியத்தயா நிரவதிம் நித்யாநுகூலம் ஸ்வத:) என்று. இதுவாய்த்து இவர் பிராட்டி ப்ரஸாதத்தாலே பெற்ற விசேஷம். இவ்விசேஷகடாக்ஷமில்லாதார், இவள் ஸ்வரூபஸ்வபாவங்களை உள்ளபடி அறியாமல் பகவதந்தரங்க விசேஷணத்வத்யோதநார்த்தமாக, "பகவத்ஸத்தை", "அஹந்தை", "ப்ரபை", "இச்சை", "சக்தி", "வித்யை" என்றும், வித்யாப்ரவர்த்தகத்வத்தாலே "வித்யை" என்றும், 140. (ப்ரக்ருதே: புருஷாச்சாந்யஸ் த்ருதீயோ நைவ வித்யதே) என்கிறபடியே ஸ்ரீ ஸ்ரீசர்களுடைய ருதிபுருஷரூப விபக்தவிபூதிவிசேஷாபிமானித்வ த்யோதநமாக (மூலப்ரக்ருதிரீசாநீ) என்றும் சொல்லுகிறவற்றைக்கொண்(டு) ஸ்வரூபத்தை அசேதனமாக ப்ரமிப்பது, கர்மவச்யையென்பது, எவாதிவிசிஷ்டபகவான்தானே ஸ்ரீயென்பது, ஸ்த்ரீரூப நித்யவிக்ரஹாந்தர விசிஷ்டனை அவனே இவளென்பது, தைத்யமோஹனார்த்தமாகப் பெண்ணாக அமுதூட்டின வடிவுபோலே ஸ்வயமேவ போகார்த்தமாகப் பரிக்ரஹித்த காதாசித்ககாந்தாவிக்ரஹவிசிஷ்டனனவனே ஸ்ரீயென்பதாய்க்கொண்டு இப்புடைகளிலே பகவதைக்யம் சொல்லுவது, அநித்யையென்பதாய்க் கொண்டு அநர்த்தப்படுவர்கள், 142. (ஆஹுர் வேதா ந மாநம்) இத்யாதி.

(தே) என்று, கீழ்ச்சொன்ன ஆகாரங்களெல்லாம் நிறம்பெறும்படி அதிவிலக்ஷணமாய், ததாஶ்ரயமான அஸாதாரணஸ்வரூபத்தை அருளிச்செய்கிறார். † (உணர் முழு நலம்) என்கிறபடியே கட்டடங்க *விஜ்ஞாநகநமாய் *ப்ரஜ்ஞாநகநமுமான பகவத்ஸ்வரூபம்போலே, 150. (ஜ்ஞாநாநந்தமய:) என்கிறபடியே ஜ்ஞாநாநந்தப்ராசுர்யத்தையுடைய திவ்யாத்மஸ்வரூபத்தை அநுபவிக்கிறார். ஆழ்வார் † "யவன்–அவன்" என்று பகவத்ஸ்வரூபத்தை யத்தச்சப்தங்களாலே அநுபவித்தாப்போலே, இவரும் பிராட்டியுடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தை (யஸ்யாஸ்தே) என்று யத்தச்சப்தங்களாலே நிர்த்தேஶித்து அநுபவிக்கிறார். (தே) படர்க்கையாகவன்றிக்கே முன்னிலையாக அருளிச்செய்கையாலே, இவர் பண்ணுகிற ஸ்தோத்ரஶ்ரவணத்திலே தனக்குண்டான கௌதுகம் தோன்ற முன்னே வந்து முகங்காட்டி, ஸாக்ஷாத்கரிப்பித்தபடியும் தோற்றுகிறது. குருகைக்காவலப்பன் யோகத்திலே § எங்கும் பக்கம் நோக்கறியாதே அநுபவிக்கிற ஸர்வேஶ்வரன் அவ்வநுபவத்தை விட்டு இவர் பக்கலிலே வ்யாமோஹம் பண்ணினபடி கண்டால் மாத்ருத்வப்ரயுக்தவாத்ஸல்யவிஶிஷ்டையாய், ஸர்வஸுலபையான இவள் இவரை இப்படி விஷயீகரிக்கச் சொல்ல வேணுமோ? இவர் தான் || "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு" என்கிறபடியே இருவருடையவும் * அருள் கொண்டாடும் அடியவராய்த்து. அவ்விஷயீகாரம் இவரளவிலின்றிக்கே இவ்வம்ஶஸ்தரெல்லார்க்கும் நைஸர்க்கிகமிறே. (மஹிமாநம்) கீழ் "காந்தஸ்தே" என்று தொடங்கிச்சொன்ன உபயவிபூதிஶேஷித்வரூபமான மஹிமாவை. (மஹிமாநம்) ஸர்வேஶ்வரனுக்கு அத்யந்தாபிமதங்களாய், அத்யந்தாநுரூபங்களுமாயிருக்கிற ஸ்வரூபவைலக்ஷண்யத்தையும், குணாதிவைலக்ஷண்யத்தையும் அநுஸந்தித்துத் திரள (மஹிமாநம்) என்கிறார். (தே மஹிமாநம்) என்கையாலே, 139. (மஹிமாநமீஶம்) என்கிற மஹிமாவில் வ்யாவ்ருத்தி தோற்றுகிறது. இது அவனையும் 'தண்ணீர், தண்ணீர்' என்னப்பண்ணுமதிறே. (த்வத்வல்லப:) 151. (ந ஜீவேயம் க்ஷணமபி) என்று * இறையும் அகலகில்லாத உன்னுடைய உள்மானம் புறமானமாய் அநுபவித்து அந்தரங்கனாய், அத்யந்தாபிமதனாயிருக்கிறவன். (ப்ரபு:) 152. (யோ வேத்தி யுகபத்

† திருவாய் (1-1). § திருவாய் (2-6-2) || திருவாய் (9-2-1).

ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்று ஸர்வத்தையும் ஏககாலத்திலே ஸாக்ஷாத்கரிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடையவன். அதவா, உபயவிபூத்யைச்வர்யத்தையுடையவன் என்னவுமாம்.

(இயத்தயா மாதும் நாலம்) இப்படி உனக்கு வல்லபனாய், ப்ரபுவாயிருக்கிறவனும் இவ்வளவென்று பரிச்சேதிக்கமாட்டான். (த்வத் வல்லபஸ்தே மஹிமாநம் மாதும் நாலம்) † "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" ‡ "தான் முயங்கும்" என்கிறபடியே குமிழ்நீருண்டு கண்ணுஞ்சுழலையிடுமதொழிய, பரிச்சேதிக்க ஶக்தனோ? (தே மஹிமாநம் இயத்தயா மாதும்) 153. (ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித்) என்று அதிஸமர்த்தனென்னு அபரிச்சேத்யவஸ்துவைப் பரிச்சேதிக்கலாமோ? பரிச்சேதிக்கிறேமென்று இத்தைப் பரிச்சேதிக்க இழிந்தானாகில் அஸமர்த்தனாய்விடுமித்தனை. (தே மஹிமாநம் மாதும் நாலம்) தன் மஹிமாவைத் தான் அளவிட்டறிய மாட்டாதவன், தன் ஸ்வரூபவைலக்ஷண்ய யுக்தமான உன்னுடைய மஹிமாவை அறியவல்லனோ? (மஹிமாநம் மாதும் நாலம்) ஸ்வஸ்வரூபவைலக்ஷண்யத்தைப் பரிச்சேதித்து அறியாதவன், உன்னுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தைப் பரிச்சேதிக்கவோ? ரூபவைலக்ஷண்யத்தைப் பரிச்சேதிக்கவோ? குணாதிவைலக்ஷண்யத்தைப் பரிச்சேதிக்கவோ? எத்தைத்தான் இவன் பரிச்சேதிப்பது? தர்மியான ஸ்வரூப வைலக்ஷண்யம் ஸத்தயாதாரகமாகையாலே 151. (நஜீவேயம் க்ஷணமபி) என்னப் பண்ணும். ரூபவைலக்ஷண்யம் 154. (தஞ்சேயமஸிதேக்ஷணா) என்கிறபடியே ததோऽப்யதிகமாயிருக்கும். குணவைலக்ஷண்யம் தத்குணங்களை * லக்ஷ்கரிக்கும்படியாயிருக்கும். (இயத்தயா மாதும் நாலம்) "அபரிச்சேத்யமித்தனை" என்று அளவிடுமல்லது, இவ்வளவென்று பரிச்சேதிக்கமாட்டான்.

இவ்வர்த்தத்தை த்ருஷ்டாந்தமுகேந த்ருடீகரிக்கிறார் (ஆத்மந இவ) என்று. (ஆத்மநோ மஹிமாநமிவ தே மஹிமாநமியத்தயா மாதும் நாலம்) § "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" என்கிறபடியே || தாம் தம் பெருமை அறியாதாப்போலே உன்னுடைய மஹிமாவை இவ்வளவு என்று அறியமாட்டான். அவனுடைய

† திருநெடு-18. ‡ மூன்-திருவ-100. § திருவாய் (8-4-6)
|| பெரியதிரு (5-2-1)

ஸ்வரூபரூபகுணவிபூதிகள் ஒரொன்றே அபரிச்சேத்யமிறே. ஆனந்த குணத்தைப் பரிச்சேதிக்க இழிந்த வேதங்கள் பட்டது படுமத்தனை, உன்னுடைய பெருமையைப் பேச இழிந்த இவனும். அவனுடைய 155. (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்கிறதுக்கு விஷயம் இது வாய்த்து. "ஆத்மந இவ" என்றும், "தே மஹிமாநம்" என்றும் அருளிச்செய்கையாலே, பிராட்டிக்கு அநுரூபங்களான அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும், இவனுக்கு அநுரூபங்களான பிராட்டியுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும் சேர்த்து அநுபவித்தமை தோற்றுகிறது. பாஷ்யகாரரும் 49. (பகவந் நாராயண) என்றும், 49. (அபிமதாநுரூபஸ்வரூபரூபகுண) என்றும், இருவருடையவும் ஸ்வரூபாதிகளைச்சேர்த்து அநுபவித்தருளினாரிறே. (த்வத்வல்லபோऽபி) என்கிற அபிஶப்தம் ஸமுச்சயார்த்தமாய், கீழ்ச்சொன்ன ப்ரஹ்மாதிகளோடே இவனையும் ஸமுச்சயித்து, † "நுண்ணுணர்வில் நீலார்கண்டத்தம்மானும் நிறை நான்முகனும்" ‡ "எல்லையில் ஞானத்தன்" என்கிறபடியே அதிஸூக்ஷ்மஜ்ஞானிகளான ப்ரஹ்மருத்ராதிகளும், ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான ஈச்வரனும் க்ருதஸங்கேதராய்ப் பேசிலும், உன்னுடைய மஹிமாவைப் பரிச்சேதிக்கமாட்டார்களென்கை. அல்பஜ்ஞானஶக்திகரான ப்ரஹ்மாதிகளோடே, அதிஶயிதஜ்ஞானஶக்திகனான ஈச்வரனை ஸமுச்சயிக்கலாமோ? என்னில்: இவர்களுக்கு அந்யோந்யம் ஜ்ஞானதாரதம்யம் உண்டேயாகிலும், இவளுடைய மஹிமார்ணவத்திலே மக்நராமிடத்தில் ஒரு விஶேஷமில்லாமையாலே இங்ஙனே யோஜிக்கத் தட்டில்லை. பர்வதபரமாணுக்களுக்கு அணுத்வமஹத்த்வரூபேண அந்யோந்யம் வாசியுண்டேயாகிலும், மஹார்ணவத்திலே மக்நங்களாமிடத்தில் தன்னில் ஒரு வாசியில்லையிறே. அதவா, அபிஶப்தம் அதிஶயத்திலேயாய், 156. (யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்) 157. (பராஸ்ய ஶக்திர் விவிதைவ ச்ரூயதே) § (என்கிற குணங்களை ஸமுச்சயித்து, "ஆத்மந இவ தே") என்கிறபடியே ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்திகனுமாயிருக்கிறவனும் என்னவுமாம். அங்ஙனுமன்றிக்கே "த்வத்வல்லபச்ச ந ப்ரபு: த்வஞ்ச" என்று ஸமுச்சயித்து உனக்கு வல்லபனான அவனும், அவனுக்கு வல்லபையான நீயும் க்ருதஸங்கேதராய்ப் பரிச்சேதிக்கப்பார்த்தாலும் பரிச்சேதிக்கப்போகாது என்கை.

---

† திருவாய் (6-10-8) ‡ திருவாய் (3-10-8) § குண்டலிதம் அதிகம்.

இப்படி லோகவிலக்ஷணஜ்ஞாநஶக்திகரான இருவரும் பரிசே திக்கமாட்டார்களென்கை, இவர்களுடைய ஸர்வஜ்ஞதைக்குச் சேருமோ? என்னில்: அபரிச்சேத்ய வஸ்துவை அளவிடுகிறேனென்கை அஜ்ஞதைக்கு எல்லைநிலமாயிருக்கும். ஆகையால், இப்படிச்சொல்லக் குறையில்லை. இவ்வர்த்தத்தைத் தத்வவிதக்ரேஸரரான ஆழ்வான், 158. (தேவி த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா நாபி த்வயா ஜ்ஞாயதே) என்று தொடங்கி ஸ்பஷ்டமாக ப்ரதிபாதித்தருளினாரிறே.

இப்படி ஸர்வஜ்ஞராய், ஸர்வஶக்திகராயிருக்கிற இருவருக்கும் பரிச்சேதிக்கவொண்ணாமைக்கு ஹேதுவென்? என்ன அருளிச் செய்கிறார், (நிரவதிம்) என்று. இதுதான் ஹேதுகர்ப்பவிஶேஷண மாய், அவதிரஹிதமாகையாலே ஒருவர்க்கும் பரிச்சேதிக்கப்போகா தென்கை. இத்தால், அபரிச்சின்னவஸ்துவைப் பரிச்சேதிக்கமாட் டாமை ஸர்வஜ்ஞத்வத்துக்கு பஞ்ஜகமன்றென்றதாயிற்று. இப்படி அவளுடைய மஹிமாவானது ஆஶ்ரிதர்க்கு அநுபவயோக்யமாய், ப்ராப்யாந்தர்க்கதத்வஜ்ஞாபகமாய், ஶேஷிஶேஷபூதர் இருவருக்கும் அநுகூலமாய், § எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதைக்கு ஆராவமுதமாய் இருக்குமென்கிறார். (நித்யாநுகூலம் ஸ்வத:) என்று ஸ்வத: நித்யாநுகூலமாயிருக்கை யாவது,—தன்னதொரு ஸ்வபாவத்தாலே, நிலா, தென்றல், சந்தனம் போலே எப்போதும் சேதநேச்வரரிருவர்களுக்கும் அநுகூலமா யிருக்கை. (த்வாம்) கீழ் ப்ரதிபாதிக்கப்பட்ட பரத்வத்தால் வந்த ப்ரஸித்தியை உடைய உன்னை. இப்படி ஸ்தோத்ரந்தான் † இரு வர்க்கும் ஸ்வரூப ப்ரயுக்தமாகையாலே, அத்தலையில் நிறைவையும், இத்தலையில் குறைவையும் பார்த்துப் பிற்காலிக்கவேண்டாதபடியான ஸம்பந்தமுண்டாகையாலே (தாஸ இத்யஹம் நிர்ப்பய: ஸ்தோஷ்யாமி) என்கிறார். ‡ அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தார், குறைவொன்று மில்லாத கோவிந்தனைப் * பாடிப் பறைகொள்ளுகைக்காக, ‡ "உன் றன்னோடு உறவேல் நமக்கிங்கு ஒழிக்கவொழியாது" என்று ஸம்பந் தத்தை முன்னிட்டாப்போலே, இவரும் பிராட்டியுடைய உத்கர் ஷத்தையும், தம்முடைய நிகர்ஷத்தையும் பார்த்து "கதம் ப்ரூம:" என்று பிற்காலித்தவர் ததவிநாபாவஸம்பந்தாநுஸந்தானத்தாலே

§ திருவாய் (2-5-4) † (பா) இவர்க்கு. ‡ திருப்பாவை-28.

ஸமாஹிதராய் ஸ்தோத்ரத்திலே ப்ரவர்த்திக்கக் குறையில்லை, "பணிபதி:" என்று தொடங்கி, "த்வத்தாஸதாஸீகண:" என்று உபய விபூதியிலுள்ளாரும் இவளுக்கு ஶேஷபூதரென்று சொல்லுகையாலே தம்முடைய ஶேஷத்வமும் அர்த்தாத்ஸித்தமாயிருக்க, இங்கு விஶேஷித்து அருளிச்செய்வானென்? என்னில்: * ஆக்ஷேபத: ப்ராப்தமாகையைப் பற்ற ஆபிதாநிகம் முக்யமாகையாலே "தாஸோ஽ஹம்" என்கிறார். / "அரங்கமாளி என்னாளி விண்ணாளி" என்றும், 159. (ஸ்ரீரங்கநாத மம நாத) என்றும் விஶேஷித்து அநுஸந்தித்தார்கள். அங்கு ஸ்வரூபம் சொல்லிற்று. இங்கு ஸ்தோத்ரகரண யோக்யதைக்காகச் சொல்லுகிறது என்னவுமாம்.

த்விதீயஹேதுவை அருளிச்செய்கிறார் (ப்ரபந்ந:) என்று. (த்வாம் ப்ரபந்நோ஽ஹம் நிர்ப்பய: ஸ்தோஷ்யாமி) அஶரண்யஶரண்யையான உன்னை அநந்யஶரணனான நான் ஶரணம் புகுந்தேன்; என்னுடைய § பூர்வாபராதங்களையும், உன்னுடைய பூர்த்தியையும் அநுஸந்தித்து அப்பூர்த்திக்கு அநுரூபஸ்தோத்ரகரண காரணஜ்ஞாநஶக்த்யாத்யநுஸந்தானத்தாலே நிர்ப்பயனாய் ஸ்தோத்ரம் பண்ணுகிறேன். :: "பூமேவிருப்பாள் வினைதீர்க்கும்" என்கிறபடியே உன்னுடைய ஆஶ்ரித விரோதிநிரஸநாநுஸந்தானத்தாலே என்னுடைய பூர்வாபராதங்களுக்கு அஞ்சவேண்டுவதில்லை. ஆர்த்ராபராதைகளாய், வதார்ஹராயிருப்பாரையும், 160. (ந கஶ்சிந்நா஽பராத்யதி) என்று மறுதலைத்து மன்றாடி ரக்ஷிப்பித்து, அவர்கள் பயம் ஶமிக்கும்படி 107. (பவேயம் ஶரணம் ஹி வ:) என்ற. உன்னுடைய அபயப்ரதானத்தினுடைய நீர்மையை அநுஸந்தித்தால் உன்னுடைய பூர்த்திக்கு அஞ்சவேண்டுவதில்லை. || (ஆர்த்ராபராதைகளாய், வதார்ஹராயிருப்பாரையும்,) மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யத்தாலே "த்வத்கருணாநிரீக்ஷண ஸுதா" என்னும்படியான உன்னுடைய கடாக்ஷப்ரபாவத்தையும் அநுஸந்தித்தால் என்னுடைய அஜ்ஞாநாஶக்திகளுக்கு அஞ்சவேண்டுவதில்லை.

(த்வாம் ப்ரபந்நோ஽ஹம் நிர்ப்பய:) உபாயாந்தரங்களைப் பற்றினுவிறே 161. (வர்த்ததே மே மஹத்பயம்) என்னும்படி பயப்படவேண்டு

/ பெரிய திரு (7-3-4) § (பா) பூர்வவ்ருத்த :: திருவாய் (4-5-11)
|| குண்டலிதம் அதிகம்.

வதி: (த்வாம் ப்ரபந்நோऽஹம் நிர்ப்பய:) உபாயபூதனை ஈஶ்வரனைப் பற்றினேனே † "வைத்தசிந்தை வாங்குவித்து நீங்குவிக்க" என்னும்படி அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை நினைத்து அஞ்சுகைக்கு? பாபமே பச்சையாக அங்கீகரிந்து, பாரதந்த்ர்யைகவேஷையாய், பர்த்தாவான அவனையும், 104. (த்ராஹி த்ராஹீதீ) என்று கடிப்பிக்கவல்ல ஸௌலப்யத்தையுமுடைய உன்னைப் பற்றின எனக்கு உபாயவிஷயமாகக் கர்த்தவ்யாம்ஶமொன்றுமில்லாமையாலே, உபேயபூதையான உன் விஷயத்திலே 15. (அஹம் ஶ்லோகக்ருத்) என்று அனுபவபரீவாஹரூபமான ஶ்லோகரசனையைப் பண்ணித் துதிக்கிறேன் என்கிறார். (த்வாம் ப்ரபந்ந:) என்கையாலே 162. (தாம் பத்மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்யே) என்கிற ஸூக்தார்த்தத்தை அனுஷ்டித்தமை தோற்றுகிறது. இத்தை அடியொற்றியிறே பாஷ்யகாரரும் 49. (ப்ரபத்யே) என்று பற்றிற்று.

ஆக, இப்படி ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தராய்க்கொண்டு ஶ்ருதிச்சாயையாலே ஸ்தோத்ரம் பண்ணுகிறார் (லோகைகேஶ்வரி லோகநாததயிதே) என்று. இப்பதத்வயத்தாலும், 163. (அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ) என்கிற ஶ்ருத்யர்த்தம் ஸூசிதமாயிற்று. (லோகைகேச்வர:) "லோக்யத இதி லோக:" என்கிற ப்ரக்ரியையாலே ப்ரமாணஸித்தங்களான த்ரிவிதசேதனாசேதனங்களுக்கும் அத்விதீய நிர்வாஹகன். ஈச்வர ஶப்தம் ச்ருத்யாதிகளில் ப்ரதிபாதிக்கிற ஸர்வ ஶேஷித்வத்தையும் காட்டுகிறது. 164. (பதிம் விச்வஸ்ய) என்று ஸர்வஶேஷித்வத்தையும், 165. (ய: பரஸ்ஸ மஹேச்வர:) என்று, 166. (யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர:) என்னும் ஸர்வ நியந்த்ருத்வத்தையும் நாராயணானுவாகங்களிலே ப்ரதிபாதித்ததிறே. இப்படி ஸர்வநியந்தாவானவனுக்கு வேறொரு நியந்தாவில்லை என்னுமத்தை 164. (ஆத்மேச்வரம்) என்றும், § "நாதனை ஞாலம் விழுங்குமநாதனை" என்றும் ப்ரதிபாதித்ததிறே. (லோகைகேச்வர:) என்றவிடத்திலே ஏகஶப்தத்தாலே 167. (ஏகஸ் ஸ்வதந்த்ரோ ஜகதோ பபூவ), 168. (க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:) 169. (ஏகச் ஶாஸ்தா ந த்விதீயோऽஸ்தி கச்சித்) இத்யாதிப்ரமாணங்களிலே ஸர்வநியந்த்ருத்வம் இவனுக்கே ஐகாந்திகமாகச் சொல்லுகையாலே, அத்விதீயநிர்வாஹ

† திருச்ச-85. § திருவி-79.

கத்வம் சொல்லுகிறது. இப்படி அத்விதீயஸர்வநிர்வாஹகன் பத்னியாகையாலே (லோகைகேச்வரீ) என்கிறார். இத்தால் 50. (ஈசானா தேவீ புவநஸ்யாதிபத்நீ), 170. (விச்வஸ்ய பர்த்ரீ ஜகத: ப்ரதிஷ்டா) என்கிற ச்ருத்யர்த்தமும் ஸூசிதம். அதவா, லோகசப்தத்தாலே லோகவஸித்தனான லோகநாதனையும் சொல்லி தத்வத்ரயநிர்வாஹிகையென்னவுமாம். 171. (பும்ப்ரதாநேச்வரேச்வரீம்) என்னக்கடவதிறே. 51. (ஈச்வரீம் ஸர்வபூதாநாம்) என்கிறவிடத்தில் ஸர்வசப்தத்துக்கு ஸங்கோசமில்லாமையாலும், கர்மணிவ்யுத்பத்தியில் கர்த்ருஸங்கோசநாஹித்யத்தாலும் "ஈச்வரேச்வரீ" என்னத் தட்டில்லை. அவன் பரமப்ரணயியாகையாலே இவளுக்கு நியாம்யனாய் ப்ருகுடிபடனாயிறே இருப்பது. 172. (யஸ்யா வீக்ஷ்ய) 42. (ஜகந்நாதோऽபி) இத்யாதி.

இப்படி ஸர்வநிர்வாஹகனான ஸர்வேச்வரனும் நியாம்யனாகைக்கு ஹேதுவென்னென்ன, தத்தயிதாபிமதையாகையாலே என்கிறார், (லோகநாததயிதே) என்று. † "சக்ரத்தான்—தண்டுழாய்த் தார் வாழ் வரை மார்வன் தான் முயங்கும்" என்கிறபடியே ஸர்வநியந்தாவாய், ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரனும் அதிவ்யாமுக்தனாய் நியாம்யனும்படி தத்வல்லபையாயிருக்குமவளென்கை. அதவா, "லோகைகேச்வரீ" என்கிற லோகநியந்த்ருத்வத்துக்கு ஹேது,—லோகநாததயிதையாகையாலே என்னவுமாம். (லோகநாததயிதே) 173. (ராமஸ்ய தயிதா பார்யா) என்னக்கடவதிறே. ஸாபராதசேதனரை, அபராதானுகுணமாக தண்டிக்கும் நிரங்குசஸ்வதந்த்ரனான ஈச்வரனோடே கடிப்பித்து ரக்ஷிப்பிக்கும் இவளுக்கு * இதம்ப்ரதமமில்லாத ஈசேசிதவ்ய ஸம்பந்தமும், தத்பத்னீத்வ ஸம்பந்தமும் ப்ரதானமாகையாலே, "லோகைகேச்வரீ லோகநாததயிதே" என்று உபயஸம்பந்தத்தையும் அருளிச்செய்கிறார். "இவள் தாயாய்" என்று தொடங்கி, "அவனுக்குப் பத்னியாய்" என்று ஸம்பந்தத்வயத்தையும் அருளிச்செய்தாரிறே அபியுக்தாக்ரேஸரரான பிள்ளைலோகாசார்யரும்.

"ஸ்தோத்ரத்தில் ப்ரவ்ருத்தராவது, பரத்வானுஸந்தானத்தாலே நிவ்ருத்தராவது, தாஸனென்பது, ப்ரபன்னனென்பது, ஸம்பந்தத்தை முன்னிடுவது, தத்வசீகரணஸாதனமான ஸௌலப்யத்தைச் சொல்லு

† மூன்-திருவ-100.

வதாய்க் கொண்டு ஸ்தோத்ரத்திலே உத்யுக்தரானாலும், ஸ்தோத்ர விரோதியான அவித்யாதிகள் நசித்து, ஸ்தோத்ரகரணஸாதநஜ்ஞான பக்திகள் உண்டானபோதிறே ஸ்தோத்ரப்ரவ்ருத்தி ஸபலமாவது; ஆனபின்பு அவையிரண்டுமில்லையென்று நிவ்ருத்தரான நீர் இப்போது ப்ரவர்த்திக்கைக்கு ஹேதுவென்?" என்ன, "என்னுடைய அவித்யா நிவர்த்தகமாய், ஜ்ஞாநபூர்த்திப்ரதமுமான ப்ரஸாதவிசேஷத்தை என் பக்கலிலே பண்ணியருளுகையாலே உன்னுடைய தயாப்ரபாவத்தை அறிந்து பயரஹிதனாய் ஸ்தோத்ரம்பண்ணுகிறேன்" என்கிறார்: (தாந்தே தயாம் தே விதந்) என்று.

இப்படி இவ்விசேஷகடாக்ஷமில்லாதபோது கீழ் நிவ்ருத்தரான இவர் உடனே ஸ்தோத்ரத்திலே ப்ரவர்த்திக்கக்கூடாதிறே. 116. (த்வாம் ஸ்தோதுமபி நேசாநாஸ் த்வத்ப்ரஸாதலவம் விநா) என்று தத்ப்ரஸாதத்தையொழிய ஸ்தோத்ரம்பண்ண க்ஷமரன்று என்றதிறே. ஆனபின்பு இவர் ஸ்தோத்ரம் பண்ணவல்லராம்படி இவர்க்கு விசேஷ கடாக்ஷத்தைப் பண்ணினாளென்கிற இவ்விசேஷம் ஸித்திக்கைக்காக "தாந்தே மயி" என்று கூட்டிக்கொள்வது. (தாந்தே மயி) க்ருபோத்தம்பகதீநாவஸ்தாவிசிஷ்டனாய், ப்ரபன்னனான என் விஷயத்திலே. அதவா, (தாந்தே) என்று ஸம்புத்தியாகவுமாம். கருணாம்ருதஸம்வர்த்திதையான கற்பகக் கொடியே! 174. (லக்ஷ்மீ கல்பவல்லீ) 175. (லக்ஷ்மீகல்பலதா), ‡ "மலர் வைகு கொடி" || "இன்னிளவஞ்சிக்கொடி" :: "ஒரு வல்லித் தாமரையாள்" என்கிறபடியே கனக கமலத்திலுண்டான கல்பகலதைபோலே, 'லோகநாதனை * தெய்வ வண்டு துதைந்தவென் பெண்மை' என்னலாம்படி தத்ஸம்ச்லேஷத்தாலே துவண்ட வடிவை உடையவளே! (தே) மாத்ருத்வப்ரயுக்த வாத்ஸல்யவிசிஷ்டையான உன்னுடைய. (தே தயாம்) என்று பகவத் க்ருபையை வ்யாவர்த்திக்கிறார். பகவத் காருண்யத்திலும் அதிசயித்திறே * காருண்யரூபையான இவள் கருணையிருப்பது.

(தே தயாம்) * வதார்ஹ காகாஸுர விபீஷணாதிகளை * சரணோக்திகள் கைம்முதலாக ரக்ஷித்த * காகுத்ஸ்தனுடைய * கோஷ்டியையும், * ஆர்த்ராபராதைகளான ராக்ஷஸிகளைச் சித்ரவதம்பண்

‡ || :: மூன்-திருவ-16.

ணத் தேடின சொல் மிறுங்கனுன பவனுத்மஜன் பக்கல், 160. (பாபா-நாம் வா ஶுபாநாம் வா) 176. (ராஜஸம்ச்ரயவச்யாநாம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா) என்று மறுத்து மன்ருடி ரக்ஷித்த உன்னுடைய தயா வைபவத்தாலே லக்ஷீகரிக்கும்படியாயன்ரே கருணுஸகியான க்ஷாந்தியின் ப்ரபாவமிருப்பது. இப்படி பகவத்காருண்யக்ஷாந்திகளிலும் அதிஶயிதமான பிராட்டியினுடைய கருணுஸகியான ஆகஸ்மிக க்ஷாந்தியை 177. (ஸாந்த்ரமஹாகஸ:-நஸ் ஸஹகயது) என்று பட்டர் ப்ரார்த்தித்தருளினரிறே. இன்னமும் 178. (க்ருபயா பர்யபாலயத்) என்று பலிபுக்கான காகத்தை ரக்ஷித்த க்ருபைக்குமடி 104. (த்ராஹி த்ராஹீதி பர்த்தாரமுவாச தயயா விபும்) என்னும் உன் தயையிறே. (தயாம்) 179. (ஸ்வார்த்தநிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா தயா) என்கிற லக்ஷணலக்ஷிதையான க்ருபை 180. (மர்ஷயாமீஹ துர்ப்பலா) என்ற உன் பக்கலிலே அனுஷ்டானஶேஷமாயன்ரே இருப்பது.

(விதந்) இப்படி ஸமாப்யதிகரஹிதையாய், ஸர்வலோகப்ரஸித்தையாய், த்வத்தயைகதாரகனுய் தயனீயனுன என்னை விஷயீகரித்த உன் தயாப்ரபாவத்தை அறியாநின்றுகொண்டு. "தாந்தே புருஷே தே தயாம் விதந்" என்று ஸாமந்யமாக யோஜிக்கவுமாம். அப்போதும் அந்த ந்யாயம் தமக்கு ஒக்குமிறே. இப்படி ஸாமாந்யேந வரும் அந்வயத்திலும் விஶேஷான்வயத்துக்கு விஶேஷப்ரயோஜனமுண்டு. * தாந்தஶப்தம் ப்ரச்ரிதமாத்ரபரமாகவுமாம். 181. (தர்மநித்யே மஹாபுத்தௌ ப்ரஹ்மண்யே ஸத்யவாதிநி। ப்ரச்ரிதே தாநஶீலே ச ஸதைவ நிவஸாம்யஹம்) என்று ப்ரச்ரிதனிடத்திலும் தனக்குண்டான விஶேஷாபிமானத்தை ஸ்வயமேவ அருளிச்செய்தாளிறே.

[லோகைகேச்வரி லோகநாததயிதே, யஸ்யாஸ்தே நிரவதிம் ஸ்வதோ நித்யானுகூலம் மஹிமாநம்ப்ரபுஸ்த்வத்வல்லபோऽபி ஆத்மந இவ இயத்தயா மாதும் நாலம், தாம் த்வாமஹம் தாஸ இதி ப்ரபந்ந இதி ச தாந்தே மயி தே தயாம் விதந் நிர்ப்பய: ஸ்தோஷ்யாமீத்யந்வய:]

3. அவ:—ப்ரதமச்லோகத்தாலே பெரியபிராட்டியாருடைய ஸர்வோத்கர்ஷப்ரகாஶகமான பரத்வத்தை அநுஸந்தித்து, † "அம்மான் ஆழிப்பிரான் என்ருப்போலே ஸர்வோத்க்ருஷ்டவிஷயத்தை ஸர்வ

† திருவாய் (5-1-7).

3. ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷணஸுதாஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் ததலாபதஸ் த்ரிபுவநம் ஸம்ப்ரத்யநந்தோதயம் ।
ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே
கர்ஹிசித் ॥

பதவுரை:—தத் அலாபத:—அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, ப்ராக் நஷ்டம்—முன் நசித்துக்கிடந்ததான, த்ரிபுவநம்—மூவுலகமும், ஸம்ப்ரதி—இப்போது, ஈஷத்—சிறிதுபோது, த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாத்—உன்னுடைய கருணைகடாக்ஷமாகிற அம்ருத வர்ஷத்தினால், அநந்தோதயம்—அளவற்ற பெருமையையுடைத்தாகும் படி, ரக்ஷ்யதே—காப்பாற்றப்படுகிறது; ந்ருணாம்—மனிதர்களுக்கு, ஸம்ஸ்ருதி அக்ஷர வைஷ்ணவாத்வஸு—ஐச்வர்யம், கைவல்யம், பரம பதம் இவைகளில், ச்ரேய:—மேன்மையானது, அரவிந்த லோசந மந: காந்தா ப்ரஸாதாத் ருதே—தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவ ளான ஸ்ரீ தேவியின் அருளில்லாமல், ந ஹி ஸம்பாவ்யதே—ஏற்படாதன்றோ.

---

பக்ருஷ்டனான நான் ஸ்தோத்ரம் பண்ணுகையாவதென்? என்று பீதராய், "த்வாம் வயம் கதம் ப்ரூம:" என்று நிவ்ருத்தரானார். த்விதீயச்லோகத்தாலே நிவ்ருத்தரான தம்முடைய ஸ்தோத்ரச்ரவண கௌதுகத்தாலே ஸ்தோத்ரவிரோதிகள் நசித்து ஸ்தோத்ரகரணகார ணஜ்ஞாநாதிகள் உண்டாம்படி கடாக்ஷித்து தயையைப்பண்ண, அத்தையறிந்து ஸம்பந்தஜ்ஞாநபூர்வகமாக சரணம் புகுந்து, கீழ் ஸ்தோத்ராரப்பாபேக்ஷஹேதுவாகச் சொன்ன ஸ்தோதவ்யகதோத்கர் ஷத்தை முகாந்தரேண த்ருடீகரியாநின்றுகொண்டு, ததுபச்லிஷ்ட ஸௌலப்யவிசேஷத்தை அநுஸந்தித்து ஸ்தோத்ருகததயநீயதாநு ரூபஹேதுவாலே ஸ்துத்யாரம்பஸமாதாநம் பண்ணினார். இப்படி ஸ்தோத்ராரம்பாபேக்ஷபஸமாதாநவ்யாஜேந பிராட்டியினுடைய பரத்வ ஸௌலப்யங்களை அநுஸந்தித்து, ஸ்தோத்ரத்திலே உபக்ரமித்து, தத்ஸர்வஸமாச்ரயணீயத்வக்யாபநார்த்தமாக ஸகல புருஷார்த்த ப்ரதத் வத்தை உதாஹரணஸஹிதமாக உபபாதிக்கிறார் இதில் (ஈஷத்த்வத்) இத்யாதியாலே.

"'தாந்தே மயி தே தயாம் விதந் அஹம் நிர்ப்பய: ஸ்தோஷ்யாமி' என்று நாம் உம்மைக் கடாக்ஷித்தோமாகவும், அத்தாலே உம்முடைய அபிமதம் ஸித்தித்ததாகவும் சொன்னீர்; லோகத்திலே சேதனர்க்கு இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களுக்கு ஹேதுக்கள் அவ்வவருடைய புண்யபாபங்களாயன்றோ இருப்பது. ஆயிருக்க, உம்முடைய அபிமதம் நம்முடைய கடாக்ஷத்தாலே ஸித்தித்தது என்னுமிடம் நம் பக்கலிலே ஆதராதிசயத்தாலே சொன்னவித்தனையிறே" என்ன, "நான் ஒரு விஷயத்தில் பக்ஷபாதத்தாலே சொல்லுகிறேனல்லேன்; வஸ்துஸ்திதியை ஆராய்ந்து பார்த்தவிடத்தில், த்ரிக்ஷணாவஸ்தாயியாய் நசித்துப்போகிற புண்யபாபங்கள் மூர்த்தீகரித்திருந்து பலப்ரதமாகிறனவல்லவிறே. 182. (புண்யாபுண்யாவீச்வரப்ரீதிகோபௌ) என்கிறபடியே * துன்பவின்பவினைகளுக்கு நிர்வாஹகனான ஈச்வரனுடைய ப்ரியாப்ரியங்கள் அபிமதாநபிமதஸித்திகளுக்கு ஹேதுக்கள். அவனுடைய கோபப்ரஸாதங்களுக்கும் அடி உன்னுடைய கடாக்ஷததபாவங்களாகையாலே, ஸகலசேதனருடைய அநர்த்தாப்யுதயங்களுக்கு ஹேது, உன்னுடைய கருணைகடாக்ஷலாபாலாபங்களாயிருக்கும்; ஆனபின்பு, என்னுடைய அபிமதஸித்திக்கேயன்றிக்கே, ஸகலசேதநர்க்கும் ஐச்வர்யாதிகளால் ச்ரேயஸ்ஸு உன்னுடைய ப்ரஸாதத்தாலல்லது ஸம்பவியாதிறே" என்று தத்புருஷார்த்தப்ரதத்வத்தை ஸோதாஹரணமாகப்ரதிபாதிக்கிறார் (ஈக்ஷத) இத்யாதிச்லோகத்தாலே.

பிராட்டியினுடைய அனுக்ரஹைகதேசம் அநந்தாநிஷ்டநிவ்ருத்திக்கும் அநந்தாப்யுதயஸித்திக்கும் நிதானமென்கிற விசேஷத்யோதனார்த்தமாக (ஈக்ஷத்) என்கிறார். 116. (த்வத்ப்ரஸாதலவம் விநா) என்றதிறே. * த்வச்சப்தத்தாலே * ப்ரணிபாதப்ரஸந்நையாய், * க்ஷிப்ரப்ரஸாதினியாம்படியான அஸாதாரணஸ்வபாவம் ஸூசிப்பிக்கப்படுகிறது. இத்தால் நிக்ரஹாநுக்ரஹஸ்வபாவனான ஈச்வரனில் வ்யாவ்ருத்தமான அனுக்ரஹைகஸ்வபாவத்வம் சொல்லப்பட்டது. 183. (பத்மே ஸ்திதா பத்மவர்ண பத்மநாபப்ரியா சுபா। ஸதாநுக்ரஹஸம்பந்நா ஸாதேவீ மே ப்ரஸீதது ॥) என்றும், 184. (அநுக்ரஹபராம்ருத்திமநகாம் ஹரிவல்லபாம் । நமாமி கமலாம் காந்தாம் க்ஷமாம் க்ஷீரோதஸம்பவாம் ॥) என்றும் அனுக்ரஹைகஸ்வபாவத்வம் சொல்லப்பட்டதிறே.

(ஈக்ஷத் த்வத்கருணநிரீக்ஷண ஸுதாஸந்துக்ஷணாத்) உன்னுடைய அநிஷ்ட நிவர்த்தனேஷ்டப்ராபணாநுகுணமான கருணையை ஹேது

வாக உடைத்தான கடாக்ஷலேஶாம்ருதோத்ரேகத்தாலே. (கருணா நிரீக்ஷணம்) கருணாஹேதுகநிரீக்ஷணம். கருணயா விஷயீகரணம், நிரீக்ஷணஶப்தத்தாலே உபசரிக்கிறதாகவுமாம்; கருணாப்ரேரிதமாயிறே நிரீக்ஷணம் உண்டாவது. 185. (காருண்யமாருதாநீதை:) என்றதிறே. (நிரீக்ஷண ஸுதாஸந்துக்ஷணாத்) 186. (த்வதீக்ஷணஸுதாஸிந்து வீசி-விக்ஷேபஶீகரை:) என்கிறபடியே கடாக்ஷாம்ருதத்ருஷ்டிகளாலே யென்கை. ஏவம்பூதகடாக்ஷம் தான் ஸகலாத்மஸஞ்ஜீவனமாயிருக்கை யாலே ஸுதையாக நிரூபிக்கிறார். ஸுதையாலுண்டான ஸம்ய குல்லாஸத்தாலே; கடாக்ஷநிக்ஷேபத்தாலேயென்கை. (ரக்ஷ்யதே) உபத்ரவரஹிதமாக ஸ்தாபிக்கப்படுகிறது. (ப்ராக்) உன்னுடைய உபேக்ஷாகாலத்திலே. (தவலாபத:) உன்னுடைய நிரீக்ஷணலாபத் தாலல்லது, உன்னுடைய கோபத்தாலன்றிறே. 176. (க: குப்யேத் வாநரோத்தம) என்று, சொல் மினுங்கனுக்கும் உபதேஶிக்கிற உனக்குக் கோபமுண்டாக ஸம்பாவனையில்லையிறே. (நஷ்டம்) * விநஷ்டப்ராய மான. (த்ரிபுவநம்) இத்தால், த்ரைலோக்யாந்தர்வர்த்தியான ஸகல ஜனங்களையும் உபலக்ஷிக்கிறது. "மஞ்சா: க்ரோஶந்தி" இதிவத். (ஸம்ப்ரதி) உன்னுடைய * கடாக்ஷவீக்ஷாக்ஷணலக்ஷ்யமான தஶை யிலே. (அநந்தோதயம் யதா பவதி) பூர்வகாலத்திலும் அதிஶயிதாப் யுதயமாம்படி. (ரக்ஷ்யதே) ப்ராக் தவலாபதோ நஷ்டம் த்ரிபுவநம், ஸம்ப்ரதி ஈஷத் த்வத் கருணாநிரீக்ஷணாத் அநந்தோதயம் ரக்ஷ்யதே.

துர்வாஸச்ஶாபத்தாலே நிச்ஸ்ரீகமாம்படி புவனத்ரயத்தையும் பரித்யஜித்து, பயோததியிலே பிராட்டி எழுந்தருளினபோது தத்கடாக்ஷாபாவத்தாலே "அஸந்நேவ" என்னும்படி நஷ்டமான த்ரிபுவநம், பின்பு 187. (க்ஷீரோதாச்ச்ரீஸ்ஸமுத்பந்நா ச்ரூயதேऽம்ருத-மந்தநே) ‡ "செழுங்கடலமுதினில் பிறந்த அவளும்" என்னும்படி *அமுதில் வரும் பெண்ணமுதாய் அவதரித்து, 188. (திவ்யமால்யாம் பரதரா ஸ்நாதா பூஷணபூஷிதா। பச்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ:ஸ்தலம் ஹரே:॥) என்கிறபடியே ஸ்நாதையாய், மஹார்ஹ வஸநையாய், சித்ரமால்யாநுலேபயாய்க் கொண்டு * திகழ்கின்ற திருமார்பிலே சேர்ந்து † "அகலகில்லேனிறையும்" என்று திருக்கலந்து

‡பெரியதிரு (2-7-1). † திருவாய் (6-10-10).

ஸம்ச்லேஷித்தவனந்தரம், உன்னுடைய காருண்ய ஶீதல கடாக்ஷ ஸுதாவர்ஷத்தாலே வழிய வார்க்க, அனந்தரம், அத்தாலே ஸத்தை பெற்று, ஸம்ருத்தையானபடியை இச்லோகத்திலே அருளிச்செய்கிறார். 189. (த்வயா தேவி பரித்யக்தம் ஸகலம் புவநத்ரயம்। விநஷ்டப்ராயம-பவத் த்வயேதாநீம் ஸமேதிதம்॥) என்று இவ்வர்த்தம் இந்த்ரனாலே சொல்லப்பட்டதிறே. இப்படி அந்வயவ்யதிரேகங்களாலே ப்ரஹ்ம மேந்த்ரப்ரப்ருதிசேதனருடைய ஐச்வர்யம் பிராட்டியினுடைய கடாக்ஷாதீநமென்னுமிடம் தர்ஶிப்பிக்கப்பட்டது. 190. (ப்ரஹ்மாத்-யாச்ச ஸுராஸ் ஸர்வே முநயச்ச தபோதநா:। ஏதந்தே த்வத்பதச்சாயா-மாச்ரித்ய கமலேச்வரி॥) என்னக்கடவதிறே. 191. (யஸ்யா: கடாக்ஷ-ணமநுக்ஷணம்) இத்யாதி.

அதவா, (ஈஷத் த்வதித்யாதி) 192. (ப்ருதிவ்யப்ஸு லீயதே) இத்யாரப்ய, 192. (ஆப: பரே தேவ ஏகீபவதி), 94. (ந ப்ரஹ்மா நேஶாந:), 193. (ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம்। அப்ர-தர்க்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வத:) ‡ "ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று" இத்யாதிப்படியே, ஸர்வ ஸம்ஹாரகாலத்திலே உன்னுடைய கடாக்ஷாம்ருதவ்ருஷ்ட்யலாபத் தாலே "அஸந்நேவ" என்னும்படி நாமரூபவிபாகாநர்ஹமாய், நஷ்ட மான த்ரிபுவனமானது, 193. (அப ஏவ ஸஸர்ஜாதௌ) 194. (தத்-ஸ்ருஷ்ட்வா) என்று சொல்லுகிற ஸ்ருஷ்டிகாலத்திலே, 95. (நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே), 195. (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே), 196. (ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:), 197. (அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி) ‡ "நான்முகன் தன்னொடு தேவருலகொடு உயிர் படைத்தான்" § "நாராயணன் படைத்தான்" இத்யாதிப்ரமாணப்ர-காரேண அண்டங்களினுடையவும், ததந்தர்வர்த்தி தேவதிர்யங் மனுஷ்யஸ்தாவரரூப சதுர்விதபூதங்களுடையவும் ஸ்ருஷ்ட்யுன்முக னைக் கொண்டு, 198. (ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி), (தேஜ ஐக்ஷத), (ஆப ஐக்ஷந்த) என்று ஸ்ருஷ்டிக்குக் கடவனைப் பார்த்தருளினபோது, 199. (யத்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்திரசரரசநா தாரதம்யே முராரே:) 200. (ஸமஸ்தசிதசித்விதாநவ்யஸநம் ஹரே:, அங்கீ-காரிபிராலோகைஸ் ஸார்த்தயந்த்யை), 201. (உல்லாஸபல்லவிதபாலித

‡ திருவாய் (4-10-1). § நான்-திருவ-1.

ஸப்தலோகீ நிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம்) 172. (அசேஷஜக தாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீ: ஸ்வர்க்கம்) என்று தொடங்கி 172. (யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேऽகிலம்) இத்யாதி ப்ரமாணப்ரகாரேண உன்னுடைய ப்ருகுடிபடனாய், த்வதிங்கிதபரா தீனனாய்க்கொண்டு ஸமஸ்தசிதசித்விதாநம் பண்ணுகிற அவனுடைய அந்தக் கடாக்ஷானுகுணமாகக் கருணாம்ருதகடாக்ஷநிக்ஷேபங்களை நீ பண்ணுகையாலேயன்றோ நாமரூபவிபாகார்ஹமாய்க் கொண்டு ரக்ஷிக்கப்படுகிறது. (ஈஷத் த்வத்கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாத் ஸம்ப்ரத்யநந்தோதயம் யதா பவதி ததா ரக்ஷ்யதே)

(ப்ராக் ததலாபதோ நஷ்டம் த்ரிபுவநம் ஸம்ப்ரதி ஈஷத் த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாதநந்தோதயம் ரக்ஷ்யதே) † "எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்" என்கிறபடியே கடுங்கோடையிலே கமர் பிளந்து உலர்ந்துபோந்த பயிரானது நினைவற மேகமேறி வர்ஷித்தால் ஸத்தைபெற்று தரித்து பலபர்யந்த மாமாப்போலே * மழைக்கண் மடந்தையான நீ குளிரக் கடாக்ஷிக்கை யாலேயன்றோ முன்பு நஷ்டமான ஜகத்து, இப்போது மஹீமஹீதர ஜலதிரூபமாய், தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரரூபசதுர்வித தேஹப்ர வேசதுரரான ஆத்மாக்களையுடைத்தாய், போக்யபோகோபகரண போகஸ்தானரூபேண அபிவ்ருத்தமாய்த்தென்று அப்யயபூர்விகை யான ஸ்ருஷ்டியில் இவளுக்கு அந்வயம் சொல்லவுமாம். "இப்படி ஜகத்காரணத்வத்தில் இவளுக்கு அந்வயமுண்டோ?" என்று ப்ரச்நம் பண்ணின நடாதூரம்மாளைக் குறித்துப் பிள்ளான் அருளிச்செய்த வார்த்தையை இவ்விடத்திலே அநுஸந்திப்பது. அதாவது:—"இவ் வர்த்தத்தில் ஸந்தேஹமுண்டோ? 202. (ஆவாப்யாம் கர்மாணி கர்த் தவ்யானி। ப்ரஜாச்சோத்பாதயிதவ்யா: ॥) என்று ப்ரமாணம் சொல்லுகை யாலே ஸஹதர்மசாரிணியான இவளுக்கும் அந்வயம் உண்டு" என்று அருளிச்செய்தது.

உக்தார்த்த ஸமர்த்தனவ்யாஜத்தாலே ஸகலபுருஷார்த்தங்களும் தத்ப்ரஸாதாதீநமாயிருக்கும் என்கிறார் (ச்ரேய) இத்யாதியாலே. [அரவிந்தலோசநமந: காந்தாப்ரஸாதாத்ருதே ந்ருணாம் ஸம்ஸ்ருத்ய

† பெரு-திரு (5-7).

க்ஷரவைஷ்ணவாத்வஸூ ச்ரேய: கர்ஹிசித் ந ஸம்பாவ்யதே ஹி] (அரவிந்தலோசந:) 203. (தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ-மக்ஷிணீ) என்று * கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாய், * ஸம்ம்ருஷ்டநாளமாய், *ரவிகரவிகஸிதமுமான புண்டரீகதளம்போலே அமலாயதேக்ஷணனிறே அவன். ஏதத்துல்யஶீலையான * அஸிதேக்ஷணையிறே இவள். "த்வத்ப்ரஸாதாத்ருதே" என்னவமைந்திருக்க, இவ்விஶேஷணமென்னென்னில்: 204. (ஜிதம் தே), / "தாமரைக்கண்ணனை" என்று உபயவிபூதியையும் எழுத்துவாங்குகிற * அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனையும், வசீகரிக்கவல்ல வால்ப்யப்ரஸித்தி தோற்ற விஶேஷிக்கிறார். இத்தால் ஸர்வஸ்மாத்பரனாய், ஸ்வதந்த்ரனான அவனும், இவள் ப்ரஸாதபாத்ரமானார்க்கொழியக் கார்யம் செய்யானென்னுமிடமும் தோற்றுகிறது.

"அரவிந்தலோசநமந: காந்தா" என்கையாலே 205. (விஷ்ணோ: கடாக்ஷம்) 206. (யம் பச்யேந் மதுஸூதந:) என்று சொல்லுகிற அவனுடைய ஸௌஹார்த்தப்ரகாஶகமான கடாக்ஷமும் ஏததீநம் என்னுமிடம் ஸித்தமிறே. (மந: காந்தா) தததயந்தாபிமதையென்றபடி. கீழ் "காந்தஸ்தே" என்றும், இங்கு "மந: காந்தா" என்றும் சொல்லுகையாலே பரஸ்பராநுகூலதயா ஸர்வாபிமதப்ரதத்வத்திலே உபயர்க்குமுள்ள ஸௌஹ்ருதஸாமரஸ்யம் ஸ்பஷ்டமாயிற்று. 206. (அஸ்யா தேவ்யா:) இத்யாதி. (ப்ரஸாதாத்) தயாவிஶேஷத்தாலே. (காந்தாப்ரஸாதாத்) 207. (ப்ரஸாதபரமௌ) என்று சொல்லுகிற அவனுடைய ப்ரஸாதத்துக்கும் அடியான ப்ரஸாதத்தாலே. * மழைக்கண் மடந்தையாகையாலே அவனுடைய குளிர்ந்த அருளும் வெந்நீர் என்னலாம்படி அதிஶீதளமாயிறே ஶீதளஸ்வபாவையான இவள் தயையிருப்பது. (ருதே) அநுக்ரஹைகஸ்வபாவையான இவளுக்கு ஓரிடத்திலும் நிக்ரஹம் ஸம்பவியாமையாலே, தந்நிவ்ருத்திரூபப்ரஸாதாயோகத்தால் '†ஒழிய' என்கை.

(ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸூ) பாரிஶேஷ்யப்ரமாணத்தாலும், புருஷார்த்த ஸமபிவ்யாஹாரத்தாலும் * ஸம்ஸ்ருதிஶப்தம்

/ திருவாய்(2-6-3) † 'தயாவிஶேஷரூபப்ரஸாதத்தாலொழிய' என்றோ வேறுவிதமாகவோ இருக்கவேண்டும்.

ஐச்வர்யபரம். 34. (ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா) என்று விஶதீகரித்தருளினாரிறே. ஆனால், ஐஶ்வர்யத்தை *ஸம்ஸ்ருதிஶப்தத்தாலே அருளிச்செய்வானென்? என்னில்: †"கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக" என்று சொல்லுகிறபடியே ஐஶ்வர்யம் அல்லலெனத் தோற்றி எரிதீயிற்சுடும்படியான வைராக்யத்தாலே, ‡"இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்" ‡"பெற்றாலும் ஆதரியேன்", ‡"வானாளும் செல்வமும் இம்மண்ணரசும் யான் வேண்டேன்" என்று * ஐஹலௌகிகமான ஐஶ்வர்யத்தையும் * பாரலௌகிகமான ஐஶ்வர்யத்தையும் பரித்யஜித்து, 10. (மா ஸ்மபூத்) என்றிருக்கும் ஸ்வாபிப்ராயத்தாலும், 208. (அநர்த்தாக்யம்) என்னும்படி அநர்த்தாவஹமாகையாலும், அல்பாஸ்திரத்வாதிதோஷதுஷ்டமாகையாலும், 209. (தநம் ப்ராப்ய மாத்யந் உச்சைர் ந மாம் ஸ்மரேத்) என்கிறபடியே, மதஹேதுவாய், பகவத்ஸ்மரணவிரோதியாய், இவ்வாகாரங்களினாலே ஸம்ஸாரம் அவத்யகரமாயிருக்கையாலும் *ஸம்ஸ்ருதிஶப்தத்தாலே ஐஶ்வர்யத்தை அருளிச்செய்கிறார். * அக்ஷரஶப்தத்தாலே ஆத்மானுபவத்தைச் சொல்லுகிறது. * வைஷ்ணவாத்வஶப்தத்தாலே 210. (ஸோऽத்வந: பாரமாப்நோதி) என்கிற கதிவிஶேஷத்வாரா பகவத்ப்ராப்தியை லக்ஷிக்கிறது. இவற்றில், (ஶ்ரேய:) ச்ரேஷ்டதமஸுகம்; தத்ஸாதநஸுக்ருதவிஶேஷமாகவுமாம். 211. (ச்ரேயஸீ † ஸுக்ருதம் வ்ருஷ:) என்றதிறே.

(ந்ருணாம்) அகிலக்ஷேத்ரஜ்ஞர்க்கெல்லாம் என்றபடி. (ந ஸம்பாவ்யதே) 'ந ஸித்யதி' என்றபடி. § "திருமாமகள் தன்னருளாலுலகில் தேர் மன்னராய்" என்றும், || "செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமால்" என்றும், :: "திருமகளால் அருள்பெற்றுப் பொன்னுலகில் பொலிவர்தாமே" என்றும், அருளிச்செய்தபடியே ஐச்வர்யகைவல்ய பகவல்லாபரூப புருஷார்த்தங்களெல்லாம் பெரிய பிராட்டியாருடைய ப்ரஸாதத்தாலல்லது பெற அரிதாகையாலே, "ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ச்ரேய: ப்ரஸாதாத்ருதே

---

† திருவாய் (4-9-4) ‡ பெரு-திரு-4. † (பா) (1) ஸுக்ருதம் விஷய: (2) ஸுக்ருதவிஶேஷ: § பெரியதிரு (2-9-10) || திருவாய் (1.5-7) :: பெரியதிரு (11-6-10)

ந்ருணும் ந ஸம்பாவ்யதே ஹி" என்கிறூர். 212. (பத்மயோநிரிதம் ப்ராப்ய படங் ஸ்தோத்ரம் தத: பரம்। திவ்யம் சாஷ்டகுணைச்வர்யம் தத் ப்ரஸாதாச்ச லப்தவாங்), 213. (ப்ரஹ்மாதீநாம் யதாயத்தம் வைபவம் யஸ்ய ஸா ஸ்வயம்। தஸ்ய கைமுத்யநிர்த்தார்யமீச்வரத்வம் ஶ்ரிய: பதே:॥) என்று ப்ரஹ்மாத்யைச்வர்யத்தோடு, ப்ரஹ்மஜநகனை ஈச்வரனுடைய ஐச்வர்யத்தோடு வாசியற தத்ப்ரஸாதாதீநமாயிருக்கும் படியை ப்ரதிபாதித்ததிறே. 214. (ஆ சுக்ராமநியாமகாத்) என்றும், 215. (ஏகோ முக்தாதபத்ரப்ரசலமணிகளுத்காரி) என்றும், 34. (ஐச்வர்யமக்ஷரகதிம்) என்றும் பட்டரும் இவ்வர்த்தத்தை ப்ரகடீகரித்தருளினரிறே.

(ப்ரஸாதாத்ருதே ச்ரேயோ ந ஸம்பாவ்யதே) என்கையாலே அவனுடைய ஸகலபலப்ரதத்வமும் ஏததீநமென்னுமிடம் தோற்றுகிறது. 172. (அசேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீ: ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வங் ஹரி:। யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேऽகிலம்) என்று ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளும் புருஷார்த்த ஸ்ருஷ்டியும் ததிங்கிதபராதீனமானல், புருஷார்த்தப்ரதத்வம் தததீநமென்னச் சொல்லவேண்டாவிறே. * ஹிரூபதம் ஶ்ரீஸூக்தாதி ப்ரஸித்திபரம். இவளுடைய †ப்ரபாவமும் இந்த்ராதிகள் †ப்ரபாவம் போலே காலபேதபேத்யமாயிருக்குமோவென்னில்: அங்ஙனன்றிக்கே, ஏகரூபமாயிருக்குமென்கிறூர் (கர்ஹிசித்) என்று; கதாசித் இத்யர்த்த:; கர்மாதீந †ப்ரபாவமாகையாலே, காலபேதபேத்யமாயிருக்கும் அது; ஸத்யஸங்கல்பாதீந †ப்ரபாவமாகையாலே இது ஏகரூபமாயிருக்குமென்றபடி.

நநு, 216. (அம்ருதஸ்யைஷ ஸேது:), 217. (ஸ ப்ரீதோऽலம் பலாய), 218. (பலமத உபபத்தே:) 219. (மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத்) இத்யாதிப்ரமாணங்கள் மோக்ஷப்ரதத்வத்தை முகுந்தனுக்கே அஸாதாரணமாக ப்ரதிபாதியாநிற்க, இங்கே பிராட்டிக்கு மோக்ஷோபாயத்வம் சொல்லுகை, ஸ்வேதரஸமஸ்தஸஹாயாநபேக்ஷோபாயத்வத்துக்குச்சேருமோவென்னில்: "இவள் புருஷகாரமானலல்லது ஈச்வரன் கார்யம் செய்யான்" என்கிற நிச்சய நிபந்தனமாகப் பரம்பரயா மோக்ஷப்ரதத்வம் சொன்ன இத்தால், தந்நிரபேக்ஷோபாயத்வவிரோதம்

† (பா) ப்ரஸாத

ப்ரஸங்கியாதிறே. 202. (உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம்) என்று உபாயத்வம் ஸ்வதஸ்ஸித்தமானாலும், இவள் புருஷீகரியாதவிடத்தில் அது கார்யகரமாகாதிறே. அந்வயவ்யதிரேகங்களாலே தலை பெற்றாரும் தலை அறுப்புண்டாருமாயிறே இருப்பது.

அதில், புருஷகாரஸாபேக்ஷத்வம் உபாயநைரபேக்ஷ்யபஞ்ஜகமாகாதோ? என்னில்: ஸ்வீகாரதசையில் ஸ்வீகர்த்தவ்யஸாபேக்ஷமான வேளாதி புருஷகாரஸாபேக்ஷமானாலும், பலப்ரதாநதசையில் பலப்ரதத்வஹேதுவான ஜ்ஞானசக்த்யாதிகளால் பூர்ணனாகையாலே, உபயநிரபேக்ஷமாகக் கார்யம் செய்ய வல்லனாகையாலே புருஷகார-ஸாபேக்ஷத்வம் உபாயநைரபேக்ஷ்யபஞ்ஜகமாகாதிறே. இத்தால் கார்யகாலத்தில் ஸாபேக்ஷத்வம் நிரபேக்ஷத்வபஞ்ஜகமாமித்தனையல்லது வரணகாலத்தில் ஸாபேக்ஷத்வம் நிரபேக்ஷத்வபஞ்ஜகமாகாது என்றதாயிற்று. ஆகையிறே "உபாயஸ்வீகாரத்தில் புருஷஸாபேக்ஷமுமாய் புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கும்; கார்யகாலத்தில் உபய நிரபேக்ஷமாயிருக்கும்" என்று ஆசார்யாக்ரேஸரரான பிள்ளை லோகாசார்யரும் அருளிச்செய்தது. 221. (லக்ஷ்ம்யா ஸஹ ரக்ஷக:) என்கிறவிடத்தில் இவளுக்கும் உபாயாந்வயம் சொல்லிற்றிறேயென்னில்: அங்கும் அப்ரதாநார்த்தே த்ருதீயையாகையாலே, அப்ரதான ரக்ஷணமான புருஷகாரபாவம் சொல்லுகிறது. உபாய வரணப்ரதிபாதகமான பூர்வவாக்யத்திலே வாத்ஸல்யாதிவத், ஜ்ஞானசக்த்யாதிவத், விக்ரஹவத், இவளையும் உபாயவிசேஷணமாகச் சொல்லுகையாலே, இவளுக்கும் குணாதிவத் உபாயத்வம் ஸித்தமிறே என்னில்: வாத்ஸல்யாதிகள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களாயும், ஜ்ஞாநசக்த்யாதிகள் ஆச்ரிதகார்யாபாதகங்களாயும், விக்ரஹம் சுபாச்ரயமாயும் உபயோகிக்குமவையாகையாலே, இவற்றுக்குத் ததநுவிதாயித்வமாத்ரமேயிறே உள்ளது. இப்படியே இவளும் ததநுவிதாயியாயிருக்கையாலே புருஷகாரபாவமே இவளுக்கு நியதமாயிருக்கும் என்றிறே த்வயத்திலும் நிர்ணயித்தது. கிஞ்ச, குணாதிகளுக்கு உபாயத்வம் உண்டாகிலும், இவளுக்குப் புருஷகாரபாவம் நியதமாயிருக்கும் என்றிறே ஆசார்யர்கள் நிர்வஹித்தது. ஆகையால் இவளுக்குப் புருஷகாரபாவமே அங்கீகார்யம் என்றதாயிற்று.

லக்ஷ்மீகுணுதிகளுக்கு விஶேஷணத்வம் அவிஶிஷ்டமாயிருக்க, குணங்களுக்கு உபாயத்வம் அங்கீகரித்துப் பிராட்டிக்குப் புருஷகாரத்வம் அங்கீகரிக்கைக்கு ஹேதுவென்னென்னில்: குணங்கள் கார்யோபயோகிகளாகையாலேயும், இவளுக்குக் கார்யோபயோகித்வம் இல்லாமையாலும், குணங்களுக்கு உபாயத்வமும், இவளுக்குப் புருஷகாரத்வமும் அங்கீகரிக்கத் தட்டில்லை. நநு, பிராட்டிக்கு உபாயத்வம் கொள்ளில் உபாயநைரபேக்ஷ்யம் ஸித்தியாதவோபாதி, குணங்களுக்கு உபாயத்வம் கொள்ளில் தந்நைரபேக்ஷ்யஹானி வாராதோ? என்னில்: குணங்கள் ப்ருதக்புத்திப்ரவர்த்தகமல்லாமையால், குணத்வாரா குணி கார்யம் செய்கை நைரபேக்ஷ்யபஞ்ஜகமன்று. த்ரவ்யத்வேந பிராட்டிக்கு ப்ருதக்புத்திப்ரவ்ருத்தி யோக்யதை உண்டாகையாலே, தது-பாயத்வே உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாதிறே. ஆகையிறே உபாயாநுஷ்டாநப்ரகாஶகமான பூர்வவாக்யத்திலே, "சித்ரகுமாநய" என்கிறவிடத்திற்போலே பிராட்டிக்கு உபலக்ஷணத்வமும், உபேயப்ரார்த்தநாப்ரகாஶகமான உத்தரவாக்யத்தில் "தண்டிநமாநய" என்கிறவிடத்திற்போலே விஶேஷணத்வமும் நிர்ணயித்து அநுஸந்தித்ததும். இரண்டு இடத்திலும் ஶப்தம் ஒத்திருக்கையாலே, ஏகப்ரகாரமாக உபயத்ர நிர்வாஹம் பண்ண ப்ராப்தமாயிருக்க, ஏகத்ர உபலக்ஷணத்வமும், அந்யத்ர விஶேஷணத்வமும் என்று இப்படி விபஜிக்கிறதுக்கு கமனிகையென்? என்னில்: வாக்யத்வயத்திலும் விஶேஷ்யப்ரதிபாத்யஶப்தங்கள் ஸமானமாயிருக்கச் செய்தேயும், 222. (அர்த்தாத் ப்ரகரணால்லிங்காதௌசித்யாதர்த்தநிர்ணய:) என்கிற ந்யாயத்தாலே, பூர்வவாக்யம் உபாயப்ரகரணமாகையாலே வாத்ஸல்யாதிகுணவிஶிஷ்டன் உபாயமென்றும், உபேயப்ரகரணமான உத்தரவாக்யத்தில் ஸர்வஶேஷியான வஸ்துவே உபேயமென்றும் விபஜித்து அர்த்தநிர்ணயம் பண்ணினுப் போலே, விஶேஷணப்ரதிபாதக ஶப்தங்கள் உபயத்ர ஸமானமாயிருந்ததேயாகிலும், உபாயப்ரகரணத்தில் பகவதுபாயத்வநைரபேக்ஷ்யஸித்திக்காக பிராட்டிக்கு உபாயத்வாநங்கீகாரேண புருஷகாரத்வம் கொள்ளுகை உசிதமாகையாலும், உபேயப்ரகரணத்தில் மிதுநவிஷயகைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமாகையாலும், பிராட்டிக்கு விஶேஷணத்வம் கொள்ளுகை உசிதமாகையாலும், ஆகிற இவ்வர்த்தஸ்வாரஸ்யத்தைப் பற்ற இப்படி விபஜிக்கத் தட்டில்லை.

உபலக்ஷணமாவது:—உபலக்ஷ்யாத் பஹிர்ப்பூதமாப், உபலக்ஷ்ய ப்ரதீத்யுபாயமான தர்மவிஶேஷம். "ஶாகாயாம் சந்த்ர:" இத்யாதி. பிதாவுக்கு ஹிதபரத்வம் அஸாதாரணமாய், ப்ரியபரத்வம் இருவருக்கும் அவிஶிஷ்டமாயிருக்கை லோகஸித்தமிறே. மாதாவுக்கு ப்ரஜா ஹிதபரத்வம் பாரதந்த்ர்யபஞ்ஜகமிறே. கிஞ்ச, "சரணம்" என்று ஏகவசனப்ரயோகம் பண்ணினால் உபலக்ஷணமாய், விஶேஷணத்துக்கும் உபாயாந்வயம் ஸம்பவித்துவிடுமென்று தத்வ்யாவ்ருத்யர்த்தமிறே த்விவசனப்ரயோகம்பண்ணுகிறது. த்விவசனம், மற்றொன்றையும் ஸஹியாதிறே. விஶேஷ்யப்ராதாந்யத: சொன்ன த்விவசனம் பத்னீவிஶேஷணத்துக்கும் அவிஶிஷ்டமென்னில்: அப்போதும் ப்ராதாந்யம் விஶேஷ்யத்துக்கேயாய், விஶேஷணத்துக்கு அப்ராதாந்யமாகையாலே, அப்ரதாநோபாயமான புருஷகாரபாவமே ஸித்தித்துவிடுமிறே. இருவரும் ப்ரத்யேகோபாயமென்னுமது "லக்ஷ்மீவிஶிஷ்டம் உபாயம்" என்கிறத்தோடு சேராது. விஶிஷ்டம் உபாயமென்று அங்கீகரித்து இவளுக்கும் பலப்ரதத்வம் சொல்லும்போது ஈச்வரனுக்குப் பலப்ரதானஹேதுவான ஜ்ஞாநஶக்த்யாதிகளின்றியிலேயொழிய வேணும். ஜ்ஞானஶக்திகள் உண்டு என்னில்: அப்போது ஏததுபாயபாவநிரபேக்ஷமாக ஸ்வயமேவ பலப்ரதக்ஷமனிறே. பலப்ரதானஹேதுவான ஜ்ஞானஶக்த்யாதிகளை உண்டாக்குகிறாளென்னில்: குணங்கள் வந்தேறியாய், ஸ்வாபாவிகங்களின்றியிலேயொழியும். ஸ்வாதந்த்ர்யதிரோஹிதங்களான வாத்ஸல்யாதிகளை ப்ரகாஶிப்பிக்கிறாப்போலே திரோஹிதஜ்ஞானஶக்திகளை ப்ரகாஶிப்பிக்கிறாளென்னில்: அவற்றுக்கு ஸ்வாதந்த்ர்யம்போலே, இவற்றுக்கு, ஒரு திரோதாயக குணமில்லையே. உண்டென்னில், † "ஞானமஃதேகொண்டு எல்லாக் கருமங்களும் செய்" என்கிறபடியே ஜ்ஞானங்கொண்டு சோம்பாதே நிரந்தரஸ்ருஷ்டிபண்ணக் கூடாதிறே. யேந கேந ப்ரகாரேண உபாயாந்வயம் சொல்லில், 222. (ஶீதோ பவ) என்னவல்ல திவ்யஶக்தி உண்டாயிருக்க, ஸ்வபாரதந்த்ர்யஹானி வாராமல், 224. (அந்தராத்மா ச மே ஶக்த:) என்று ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தியாகிற அஶக்தி இத்தலையில் இல்லையென்றும், 224. (தஸ்மிம்ச்ச பஹவோ குணா:) என்று உபாயபூர்த்திக்கு அடியான குணபூர்த்தி அத்தலைக்கே உள்ள

† திருவாய் (3-10-8).

தென்றும் தர்ஶிப்பித்து ஸ்வப்ராப்திக்கும் 105. (தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்) என்று ஸ்வஸ்வரூபாநுரூப பாரதந்த்ர்யாநுஸந்தானமாகத் தந்நிரபேக்ஷோபாயத்வத்தைப் பார்த்திருக்கும்படியான இவள் பரிஶுத்தப்ரக்ருதிக்கு அது சேராதிறே.

நநு, ஶ்ரிய:பதியே உபாயமென்று அங்கீகரிக்கவேண்டுமாகை யாலே, நிரூப்யஸ்வரூபத்துக்குச் சொன்ன உபாயத்வம் நிரூபகஸ்வரூ பத்துக்கும் 225. (யத்யபி ஸச்சித்த:) என்கிற ந்யாயத்தாலே அநிவர்த்யமாய்க்கொண்டு தன்னடையே வாராதோ? என்னில்; ஸ்வரூப நிரூபகத்வேந நிரூப்ய நிரூபகங்களுக்கு அவர்ஜனீயஸம்பந்தம் உண்டே யாகிலும், உபாயவரணதஶையில் ஸ்வரூப நிரூபகங்களான ஜ்ஞாநாநந் தங்கள் உபயோகமில்லாமையாலே நிரூபகமாத்ரமாய் நிற்கிறாப்போலே பகவத்ஸ்வரூபநிரூபகமான லக்ஷ்மீஸ்வரூபமும், காரணத்வதஶையிற் போலே உபாயதஶையில் தன்னால் கொள்வதொரு ப்ரயோஜனமில் லாமையாலே, தத்ஸ்வரூப நிரூபகத்வமாத்ரத்திலே அந்வயித்து, தத ஸாதாரணோபாயத்வத்தில் அந்வயியாமலிருக்கையாலே, நிரூபகமான ஏதத்ஸ்வரூபத்துக்கு உபாயத்வம் வாராதிறே. கிஞ்ச, உபாயவிஶே ஷணமான குணவிக்ரஹங்களுக்கு ஸௌகர்யாபாதகத்வேநவும், கார்யாபாதகத்வேநவும், ஶுபாச்ரயத்வேநவும் கார்யபேதமுண்டாகிறாப் போலே, தத்விஶேஷணபூதையான பிராட்டிக்கும், உபாயதஶையில் உபா யத்வரஹிதமாகப் புருஷகாரத்வரூப கார்யபேதமுண்டாக்கத் தட்டில்லை, 226. (லக்ஷ்மீபர்த்துர் தாஸதாஸஸ்ய தாஸ:), † "திருமாலே! நானும் உனக்குப் பழவடியேன்" என்கிறபடியே ஸ்வரூபதஶையில் ஶேஷத்வ ஸ்வரூபத்துக்கும், 227. (ஶ்ரியா ஸார்த்தம்) ‡ "திருமாலே நின்றே ஆட்செய்ய" என்கிறபடியே ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யதஶையில் கைங்கர்யத்துக்கும் மிதுனமே ப்ரதிஸம்பந்தியாகவேண்டினவோபாதி உபயாநுரூபமான உபாயதஶையிலும் அவச்யாபேக்ஷிதமான உபாய ப்ரதிஸம்பந்தித்வத்தில், ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தஸஹாயாऽநபேக்ஷ மான உபாயத்தினுடைய 131. (மாமேகம்) என்கிற நைரபேக்ஷ்ய பஞ்ஜகமான உபாயத்வத்தில் அந்வயமற்று, ததவிரோதமாகப் புருஷ காரத்வரூபப்ரதிஸம்பந்தித்வத்திலே இவளுக்கு அந்வயமாகக்கடவது.

† திருப்பல்லா-11. ‡ திருவாய்(8-3-8)

நது, ஸ்வாயம்புவே 228. (ஸர்வகாமப்ரதாம் ரம்யாம் ஸம்ஸா-ரார்ணவதாரிணீம் । க்ஷிப்ரப்ரஸாதிநீம் தேவீம் ஶரண்யாம் சிந்தயேதிதி॥) என்றும், வைஷ்ணவே, 229. (ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபல தாயிநீ) என்றும், ப்ராஹ்மே, 230. (ஸக்ருத் விபாதா ஸர்வார்த்தி ஸமுத்ரபரிஶோஷிணீ। பவபங்காபஹரிணீ பரநிர்வாணதாயிநீ) என்றும், § இத்யாதிப்ரமாணங்கள் இவளுடைய உபாயபாவத்தைச் சொல்லிற்றேயாகிலும், அவை ஶரண்யனுடைய இச்சாநுவிதாயித்வ ஸூசகங்களாகக்கடவது. இதுக்கு நியாமகமென்னென்னில்: 231. (லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருத்தவந்த:) என்றும், 232. (லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லபா ப்ராப்தியோகிநீ। ஏதஸ்யாச்ச விஶேஷோऽயம் நிக-மாந்தேஷு ஶப்த்யதே॥) என்றும், 233. (லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா—நாந்யதா லக்ஷணம் பவேத்) என்றும், புருஷகாரத்வத்தையே லக்ஷணமாகச் சொல்லி, அந்யதா லக்ஷணம் இல்லையென்று உபாயத்வத்தை நிஷேதித்ததிறே. அந்வயத்திலும், வ்யதிரேகம் அர்த்ததார்ட்யத்துக்கு உறுப்பாகையாலே, இதுவே ப்ரபலப்ரமாண ப்ரஸித்தமாகையாலும், பகவதபிமதமாகையாலும், பிராட்டிக்கு அத்யந்தம் அபிமதமாகையாலும், ஸம்ப்ரதாயஸித்தமாகையாலும் ஏததனுகுணமாக அவற்றை யோஜிக்கத் தட்டில்லை. தததனுகுணமாக இவற்றை யோஜிக்குமிடத்தில், ப்ரபலப்ரமாணவிரோதமும், பகவதநபிமதத்வமும், லக்ஷ்ம்யநபிமதத்வமும், ஸம்ப்ரதாய விரோதமும் ஸம்பவிக்கும். ஆகையாலே, ஸகலப்ரமாணப்ரமாத்ரு பரிக்ருஹீதமான புருஷகாரபாவமே ஸாராஸாரவிவேகசதுரர்க்குப் பரிக்ராஹ்யம் என்றதாயிற்று. 234. (தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாச்ச), 235. (யத்யதாசரதி ச்ரேஷ்ட:) † "மேலையார் செய்வனகள் வேண்டுவன" என்னக் கடவதிறே.

ஆக, இச்லோகத்தாலே பெரியபிராட்டியார் ஸ்வகருணைகடாக்ஷ லேஶத்தாலே ஸ்வாச்ரிதர்க்கு ஸகலபுருஷார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளுவர்; ஸகலபுருஷார்த்த விலக்ஷணமோக்ஷத்தை, தததஸாதாரணோபாயபூதனுய், ஸ்வவஶவர்த்தியாய், ஸ்வாபாங்கேங்கிதபராதீநனை ஈச்வரனைக்கொண்டு கொடுப்பித்தருளுவர்; ஆனபின்பு, புருஷார்த்தாந்தரங்களோடு விலக்ஷணபுருஷார்த்தத்தோடு விஶேஷமற ஸகல ச்ரேயஸ்ஸும் தத்ப்ரஸாதத்தாலல்லது ஸம்பவியாது என்னுமிடத்தை

§ இங்கு சில வாக்கியங்கள் நழுவியுள்ளன. † திருப்பாவை-26.

4. ஶாந்தாநந்தமஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம் ஹரே:
மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம்।
யாந்யந்யாநி யதாஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி தாந்-
யாஹு: ஸ்வைரநுரூபரூபவிபவைர் காடோபகூடாநி தே॥

4. பதவுரை:—ஶாந்த—ஷடூர்மிகளற்றதாய், ஆநந்த—ஆநந்தமயமாய், மஹாவிபூதி—பெரிய விபூதிகளை உடைத்தாய், பரமம்—தனக்கு மேலான தற்றதாய், ப்ரஹ்ம—பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்ரஹ்மஶப்தத்தாலே சொல்லப்படுவதாயிருக்கும், ஹரே: யத் ரூபம்—ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, தத: அபி—அதைக்காட்டிலும், தத் ப்ரியதரம்—அந்த பகவானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும், மூர்த்தம்—கண்ணால் காணக்கூடியதும், ப்ரஹ்ம—ப்ரஹ்மஶப்தத்தால் சொல்லப்படுவதும், அத்யத்புதம்—மிகவும் அத்புதமானதுமான, ரூபம் யத்—யாதொரு ரூபம் உண்டோ, யதாஸுகம் விஹரத:—இஷ்டப்படி விளையாடும் எம்பெருமானுக்கு, அந்யாநி ரூபாணி யாநி—மற்றும் யாவை சில ரூபங்களுண்டோ, தாநி ஸர்வாணி—அந்த ரூபங்களெல்லாம், தே—உனக்கு, ஸ்வை: அநுரூப ரூபவிபவை:—அஸாதாரணங்களாய் தகுந்தவையாயிருக்கும் திவ்ய ரூபங்களால், காடோபகூடாநி ஆஹு:—நன்றாக ஆலிங்கனம் செய்யப்பட்டவையென்று (ப்ரமாணங்கள்) சொல்லுகின்றன.

---

ஸ்த்திரீகரித்தருளினாராய்த்து. ஸ்ரீஸாத்வதத்திலே, அவனுக்கு மோக்ஷப்ரதத்வமும், தேவிக்கு ஐச்வர்யப்ரதத்வமும் விபஜித்து ஸ்வயமேவ ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே.—(3)

4. அவதாரிகை:(ஶாந்தேத்யாதி) 236. (த்ரயாணும் பரதாதீநாம் ப்ராத்ரூணும் தேவதா ச யா। ராமஸ்ய ச மந: காந்தா ப்ராணேப்யோऽபி கரீயஸீ॥) என்கிற ப்ரமாணனுஸாரேண "காந்தஸ்தே புருஷோத்தம:" என்று கர்த்தர்யர்த்தத்தையும், "பணிபதி:" என்று தொடங்கிக் கர்மண்யர்த்தத்தையும் அநுஸந்தித்து, ஆசு, "இப்படி உபயவிபூதியிலுள்ளார்க்கும் ஆச்ரயணீயையாய், உபயவிபூதிநாதனை ஆச்ரயித்துக்கொண்டு இருக்கையாலே "ஸ்ரீ:" என்ற அஸாதாரணமான திருநாமத்தை உடையையாய், அவனுக்கும் பூஜ்யையாம்படியான குணபூர்த்தியை உடைய உன்னை ஜ்ஞானஶக்த்யாதிகுணஹீனனை நான்

ஸ்தோத்ரம் பண்ணுவது எங்ஙனே?" என்று பீதபீதராய், ஸ்தோத்ராந்நிவ்ருத்தரானார் ப்ரதமஸ்லோகத்திலே.

இப்படி நிவ்ருத்தரானபடியைக் கண்டு இவர் பண்ணுகிற ஸ்தோத்ரத்தை ஸ்ரவித்து, ஸ்ரவிப்பித்தாலன்றோ "ஸ்ருணோதீதி—ஸ்ரீ:" "ச்ராவயதீதி—ஸ்ரீ:" என்கிற நிருக்த்யனுரூபாஸாதாரணநாமம் நமக்கு நிலைநிற்பது. ஆனபின்பு இவர் யதாஸ்தோத்ரம் பண்ணவல்லராம்படி கடாக்ஷிப்போம் என்று கணிசித்து, இவர் பக்கலிலே கருணாகடாக்ஷத்தைப் பண்ண, "இதொரு தயாவிசேஷமிருந்தபடியென்?" என்று தத்ஸௌலப்யாநுஸந்தானத்தாலே ஸமாஹிதராய், ஸம்பந்தஜ்ஞானபூர்வகமாக சரணம் புகுந்து, கீழ், "ஸ்ரீயதே" "ஸ்ரயதே" என்று சொன்ன வ்யுத்பத்தித்வயார்த்தமும் 163. (அஸ்யேசாநா) இத்யாதி வேதாந்தஸித்தமென்னுமிடத்தை "லோகைகேச்வரி லோகநாததயிதே" என்று ஸூசிப்பியாநின்றுகொண்டு ஸமாஹிதராய், பயமும் சமித்து ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தரானார் த்விதீயஸ்லோகத்திலே.

இப்படி ஆக்ஷேபஸமாதாநவ்யாஜேந ப்ரவ்ருத்தமான ஸ்லோகத்வயத்தாலும், தத்பரத்வஸௌலப்யங்களை அநுஸந்தித்து, திருவடிகளை ஆச்ரயித்தார்க்குத் தத்கடாக்ஷலேசத்தாலே ஸகல புருஷார்த்தங்களும் ஸம்பவிக்கும்; அதில்லாதார்க்கு ஒரு ச்ரேயஸ்ஸும் ஸித்தியாது என்று கொண்டு பிராட்டியினுடைய ஸர்வஸமாச்ரயணீயத்வக்யாபநார்த்தமாக ஸகல புருஷார்த்தப்ரதத்வத்தை அருளிச்செய்தார் த்ருதீயச்லோகத்தாலே. ஆக, இப்படி ச்லோகத்ரயத்தாலும் ப்ரக்ருதியான ஸ்ரீசப்தார்த்தத்தை அருளிச்செய்து, அனந்தரம் ப்ரத்யயமான மதுப்பின் அர்த்தத்தை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, பகவத்ஸ்வரூபரூபகுணாதிகளில் தத்ஸஹதர்மசாரிணியான இவளுடைய ஸ்வரூபாதிகளுக்கு உண்டான அயோகவ்யவச்சேதத்தை அநுஸந்தியாநின்றுகொண்டு, 221. (லக்ஷ்ம்யா ஸஹ....ரக்ஷக:) 227. (ஸ்ரீயா ஸார்த்தம்) என்கிறபடியேஉபய விபூதிக்கும் நித்யரக்ஷகமாய், நித்யப்ராப்யமான நித்யயோகத்தை அநுபவித்து நிரஸ்தஸமஸ்தப்ரதிபந்தகராய், ப்ராப்தபரிபூர்ணமநோரதராய், † "திருமாலால் எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர்" என்கிறபடியே ஸ்ரிய:பதியினுடைய

† திருப்பாவை-30.

நிர்ஹேதுகக்ருபையாலே' நிரதிஶயானந்தத்தை ப்ராபித்து ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டுகிறார் துரீயச்லோகத்தாலே.

(ஶாந்தானந்த மஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம்) என்கிற இவ்வளவாலே திவ்யாத்மஸ்வரூபத்தை அனுபவிக்கிறார். 237. (ஶாந்தானந்தம் சிதானந்தம் யத் ப்ரஹ்ம பரமம் த்ருவம்। மஹாவிபூதிஸம்ஸ்தானம் ஸர்வதஸ் ஸமதாம் கதம்॥) என்கிற திவ்யாத்மஸ்வரூபநிர்ணயகப்ரமாணத்தை உட்கொண்டாய்த்து இவர் இப்படி அருளிச்செய்தது. (ஶாந்தேதி) ஶாந்தியாவது:—238. (அஶநாயாऽபிபாஸே ச ஶோகமோஹௌ ஜராம்ருதீ। ஷடூர்மிபிர்விஶுத்தா) என்று ச்ருதிஸித்த ஷடூர்மிரஹிதமாய், 239. (அபக்ஷயவிநாஶாப்யாம் பரிணமர்த்திஜந்மபி:। வர்ஜிதச் ஶக்யதே வக்தும் யஸ்ஸதாऽஸ்தீதி கேவலம்॥) என்று புராணரத்நோக்தப்ரகாரத்தாலே ஷட்பாவ விகாரரஹிதமுமா யிருக்கை. இத்தால் அகிலஹேயப்ரத்யநீகமாயிருக்கும் திவ்யாத்மஸ்வரூபம் என்றதாய்த்து. ஸ்வயம் ஹேயரஹிதமாயிருக்கையன்றிக்கே, ஹேய ப்ரதிபடமுமாய், ஸ்வாச்ரிதஹேயநிவர்த்தகமுமாயிறே இருப்பது. ஹேயப்ரத்யநீகத்வம் சொன்ன இப்பதத்தாலே கல்யாணைகதானத்வமும் அர்த்தத: ஸித்தமாகிறது. "ஹேயப்ரத்யநீகத்வம் புக்கவிடத்தே கல்யாணைகதானத்வமும் புகும்" என்றிறே அருளிச்செய்தது. ‡"அருகலிலாய பெருஞ்சீர்" என்கிறபடியே, 240. (அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந) என்று உபயலிங்கவிஶிஷ்டவஸ்துவை அனுபவித்தருளினாரிறே பாஷ்யகாரர். "ஈச்வரன் அகிலஹேயப்ரத்யநீகாऽநந்தஜ்ஞானாநந்தைகஸ்வரூபனாய்" என்று தத்திவ்யஸூக்தியைப் பின்சென்று அனுபவித்தருளினாரிறே பிள்ளைலோகாசார்யரும். 237. (ஶாந்தானந்தம் சிதானந்தம்) என்று முக்தகண்டமாகச் சொன்ன லக்ஷணத்வயத்தில் இங்கு ஒன்றை ஒன்று லக்ஷிக்கிறது. இத்தால் 241. (அபஹதபாப்மா விஜர:) என்று தொடங்கி (ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:) என்கிற ப்ரமாணார்த்தம் சொல்லிற்று.

* அநந்தபதத்தாலே த்ரிவிதபரிச்சேதரஹிதமாயிருக்கும் என்றபடி. அதவது:—விபுத்வாத் தேஶத: பரிச்சேதரஹிதமுமாய், நித்யத்வாத் காலத: பரிச்சேதரஹிதமுமாய், ஸமஸ்தவஸ்துப்ரகாரித்வாத் ஸ்வஸத்ருஶவஸ்து பரிச்சேதரஹிதமுமாயிருக்கும் என்றபடி. அதவா, "ஶாந்தாநந்த(ந்)" என்று பாடமாய், 242. (ஜ்ஞாநாநந்தமயம்

‡ திருவாய் (1-9-3)

யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:) என்கிறபடியே ஆநந்தமயனாயிருக்கும் என்னவுமாம். § "உணர் முழுநலம்" என்னக்கடவதிறே. முழு உணர்வும், முழுநலமுமாய், 242 *. (யதா ஸைந்தவகந:) என்னுமாப் போலே விஜ்ஞானகனமுமாய், ப்ரஜ்ஞானகனமுமாயிறே ஸ்வரூப மிருப்பது. இத்தால் ஸ்வானுபவதஶையில் ப்ரகாஶமுமாய் ஸுக ரூபமுமாய் இருக்கும் என்கை. "ஶாந்தாநந்த" என்று ஸ்வரூபநிரூப கங்களான ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளைச் சொன்ன இத்தால், நிரூபித ஸ்வரூபவிஶேஷணங்களான ஜ்ஞானஶக்த்யாத்யஸங்க்யேய கல்யாண குணகணங்களும் உக்தப்ராயங்கள். ஸ்வரூபானுபந்திகளாயிறே இவை இருப்பன. 21· (ஸஹஸ்ராக்ஷ:), 15. (ஸர்வஜ்ஞ:), 21. (ஸஹஸ்ர-ஶீர்ஷா புருஷ:), 152. (பராऽஸ்ய ஶக்தி:) இத்யாதிப்ரமாணஸித்தமிறே.

(மஹாவிபூதி) மஹத்துக்களாய், ஶுத்தாऽஶுத்தங்களான விபூதி த்வயத்தை உடைத்தாய், † "அகல்விசும்பும் நிலனும் இருளார் வினை கெட", ‡ "அங்காதும் சோராமே ஆள்கின்ற", 243. (பாதோऽஸ்ய விஶ்வா பூதாநி। த்ரிபாதஸ்யாऽம்ருதம் திவி ||) என்கிறபடியே உபய விபூதியோகமும் சொல்லுகிறது. (பரமம்) "பரோ மா யஸ்மாத் ஸ:-பரம:" என்று நிருபமமாகையாலே ஸர்வோத்க்ருஷ்டமாய். (யத்) 244. (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம), 245. (ஆநந்தோ ப்ரஹ்ம), 246. (ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்), 247. (நிஷ்களங்கோ நிரஞ்-ஜந:) 157. (ந தத் ஸமஶ்சாऽப்யதிகஶ்ச த்ருஶ்யதே), / "ஒத்தார் மிக்காரை இலையாய", 248. (ஸம்ஜ்ஞாயதே இத்யாதி) || "மனனுணர் வளவிலன்" இத்யாதிப்ரமாணஸித்தியை * யச்சப்தம் ஸூசிப்பிக் கிறது. (ப்ரஹ்ம) 249. (ப்ருஹத்த்வாத் ப்ரும்ஹணத்வாச்ச ப்ரஹ்ம இத்யபிதீயதே) என்று நிரதிஶயப்ருஹத்த்வப்ரும்ஹணத்வம் உக்த மாய், இத்தால் ஸ்வரூபவிபுத்வம் சொல்லுகிறது. (ரூபம்) ஸ்வரூபம். ஆக, அகிலஹேயப்ரத்யனீககல்யாணைகதானமாய், த்ரிவிதபரிச்சேத ரஹிதமாய், விபூதித்வயநிர்வாஹகமுமாய், நிருபமமுமாய், விபுவாய், ஸகலோபனிஷத் ப்ரஸித்தமான திவ்யாத்மஸ்வரூபத்தை அனுபவித் தாராய்த்து. (ஶாந்த) என்கையாலே 250. (அவிகாராய ஶுத்தாய)

† திருவிரு-33. ‡ நாச்-திரு (11-3). / திருவாய் (2-3-2).
|| திருவாய் (1-1-2).

என்கிற பதத்வயார்த்தமும், * அநந்தபதத்தாலே 250. (நித்யாய) என்கிற பதார்த்தமும், "பரம் ரூபம்" என்கையாலே 250. (பரமாத் மநே) என்கிற பதார்த்தமும், மேலே "ரூபம்" என்கையாலே 250. ஸதைக ரூபரூபாய) என்கிற பதார்த்தமும், "ஹரேர் ப்ரஹ்ம" என்கை யாலே 250. (விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே) என்கிற பதார்த்தமும் ஸ்பஷ்டமாயிற்று.

(ஹரே:) 251. (ஹரிர் ஹரதி பாபாநி) என்கிறபடியே ஸ்வாச்ரித ருடைய ஸ்வப்ராப்திப்ரதிபந்தக ஸகலபாபநிவர்த்தகனானவனுடைய. அதவா, (ஹரே:) 252. (தேவதேவோ ஹரி: பிதா) என்கிறபடியே ஸகலசேதனர்க்கும் ஸாக்ஷாத்பிதாவானவனுடைய என்றுமாகவுமாம். 253. (பித்ருமாத்ருஸூத) இத்யாதி. 253 *. (நாமஸஹஸ்ரவாந்) என்கிற படியே * ஆயிரம் பேருடைய பிரானுயிருக்கவும், இவ்விடத்தில் "ஹரி:" என்ற திருநாமத்தை அருளிச்செய்ததுக்குக் கருத்தென் னென்னில்: பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றின ப்ரீத் யதிசயத்தாலே :: "அவாவறச் சூழரியை" என்றாப்போலே, ஸ்வானு பவஸகலப்ரதிபந்தகநிவ்ருத்திபூர்வகமாக ஸ்வாபேக்ஷிதமான இருவரு மான சேர்த்தியை யதாமநோரதம் அபிநிவேசம் தீர அனுபவிப்பித்த படியை ஸ்பஷ்டமாக்குகைக்காக "ஹரி:" என்ற திருநாமத்தை அரு ளிச்செய்கிறார். "ஸர்வாபேக்ஷிதப்ரதனை ஸர்வேச்வரனை" என்றிறே அருளிச்செய்தது. "ஆர்த்திஹரத்வவிசிஷ்டன்" என்றிறே நிகமத் திலும் அருளிச்செய்தது.

254. (ப்ரஹ்மாணமிந்த்ரம் ருத்ரஞ்ச யமம் வருணமேவ ச । ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத்தரிரிதீர்யதே ॥) என்கிறபடியே † "நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழி வாய் நான்முகனும் நீண்ட நால் வாய் ஒற்றைக்கை வெண்பகட்டில் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும் கடலரையன் விழுங்காமல் தான்விழுங்கி" 192. (தம: பரே தேவ ஏகீபவதி) என்கிறபடியே தன் ஸங்கல்பத்தில் ஏகீபவிக்கும்படியான ஸர்வஸம்ஹர்த்ருத்வத்தையும் 255. (அசேஷாணாம் ஹி பூதாநாம் ப்ர- பவோ ஹரி:), 256. (யஸ்ய நாபிஸமுத்பூதபங்கஜாதபவஜ்ஜகத்) என்கிற படியே அப்யயபூர்வகமான ஜகத்காரணத்வத்தையும் ப்ரதிபாதிக்கிற

---

:: திருவாய் (10-10-11). † பெரியதிரு (11-6-3).

இத்திருநாமத்தை அருளிச்செய்கையாலே நாராயணஶப்தார்த்தத்தை விவக்ஷித்து அருளிச்செய்தார் என்னுமிடம் தோற்றுகிறது. 257. (நராஜ்ஜாதாநி தத்த்வாநி), 193. (ஆபோ நாரா இதி ப்ரோக்தா:) என்கிற படியே ஜகத்காரணத்வவாசகமாயிறே நாராயணஶப்தம்தான் இருப்பது. அந்த ஜகத்காரணத்வந்தான் ‡"ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று நான்முகன் தன்னொடு தேவருலகொடு உயிர் படைத்தான்" என்கிறபடியே அப்யயபூர்வகமாயிருக்குமிறே; அந்த அப்யயபூர்வகமான ஜகத்காரணத்வத்தை இத்திருநாமம் ப்ரதிபாதிக்கையாலே நாராயணபதபர்யாயமென்னுமிடம் ஸித்தமிறே. ஆகையாலேயிறே 258. (விச்வம் நாராயணம் ஹரிம்) என்றும், §"அற்புதன் நாராயணனரி" என்றும் வேதாந்தத்வயத்திலும் ஸஹபடித்தது. பட்டரும், 259. (அங்க்ரீ ஹரேராச்ரயே), 260. தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதிதம்)என்று வாக்யத்வயத்திலும் நாராயணபதத்வயபர்யாயமாக ஹரிஶப்தத்தை அருளிச்செய்தாரிறே.

அனந்தரம் கீழ் அனுபூதமாய் அமூர்த்தமுமான ஸ்வரூபத்துக்கு ஆச்ரயமாய், மூர்த்தமான திவ்யமங்களவிக்ரஹத்தை அனுபவிக்கிறார் (மூர்த்தம் ப்ரஹ்ம) என்று தொடங்கி, (யதத்யத்புதம்) என்னுமளவாக. (மூர்த்தம்) ஸ்பர்ஶரூபாதிகுணங்களோடே கூடி பரமபதபர்யங்காதிதேஶபரிச்சிந்நவிக்ரஹமாயிருக்கை. (மூர்த்தம்) 261. (ஶக்தய: பஞ்ச விக்யாதா: பஞ்சோபநிஷதாக்யயா) என்கிறபடியே, பஞ்சோபனிஷத்துக்களாவன:—262. (பரமேஷ்டீ புமாந் விச்வோ நிவ்ருத்திஸ் ஸர்வ ஏவ ஹி) என்கிறபடியே, பரமேஷ்டி புருஷ விச்வ நிவ்ருத்தி ஸர்வஸஞ்ஜ்ஞிகங்களான அப்ராக்ருதபூதபஞ்சகங்கள். ஏவம்வித பஞ்சோபனிஷத்துக்கள்தான் ஶப்தாதி பஞ்சகுணவிஶிஷ்டங்களாயிருக்கையாலே 262. (பரமேஷ்டீ ஸ்ம்ருதச்ஶப்தே ஸ்பர்ஶே து புருஷ: ஸ்ம்ருத:। விச்வாத்மா தேஜஸி ப்ரோக்தோ நிவ்ருத்யாத்மா ரஸே ஸ்ம்ருத: ஸர்வாத்மா கதிதோ கந்தே விஷயே புருஷஸ் ஸ்ம்ருத:॥) என்கிறபடியே பரமேஷ்ட்யாதிஸஞ்ஜ்ஞிகங்களான பூதபஞ்சகமும், ஶப்தஸ்பர்ஶரூப ரஸகந்தஸஞ்ஜ்ஞிகபஞ்சகுணத்வேந ப்ரமாண ப்ரஸித்தங்களாயிருக்குமே. ஆகையாலே ஏதத்ருஶபஞ்சகுணகாஶ்ரயத்யப்ராக்ருத பூதபஞ்சகமயமாய் இருக்கையாலே "மூர்த்தம்" என்கிறார்.

‡ திருவாய் (4-10-1). § திருவாய் (8-6-10).

இச்சேதனன் கர்மானுகுணமாகப் பரிக்ரஹிக்கும் தேஹமாகிலிறே || "மண்ணாய் நீரெரி கால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம்" :: "மஞ்சு சேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கி நின்ற அஞ்சு சேராக்கை" என்கிறபடியே ப்ராக்ருதபஞ்சபூதமயமாயிருப்பது. இங்ஙனன்றிக்கே 263. (பஞ்சைதாச் ஶக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந:।அஶேஷஜகதாதாரா: பதே திவ்யே வ்யவஸ்திதா: ||) என்று பகவச்சக்தித்வேந ஸமஸ்தகார்ய பதார்த்தாதாரங்களாய்க்கொண்டு பரமபதத்திலே ஏதத்விக்ரஹமாயும் ததீயவிக்ரஹங்களாயும், விமான மண்டப கோபுர ப்ராஸாதாதிரூபேணவும் பரிணமிக்கிற அப்ராக்ருத பூதபஞ்சகமயமாயிறே இருப்பது. ஆகையாலேயிறே 264. (ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதோ஽ஸ்திஸம்பவா) 265. (ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோ஽ஸ்ய பரமாத்மந:) 266. (பஞ்சஶக்திமயோ தேவ:) என்று ப்ராக்ருதத்வநிஷேதபூர்வகமாக அப்ராக்ருதத்வத்தை ப்ரதிபாதிக்கிறது. இப்படி அப்ராக்ருதமாகையாலே ஶுத்தஸத்வமயமுமாயிறே விக்ரஹம் இருப்பது. ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே ஶுத்தியோகத்தாலே கேவலஸத்வமாய் 267. (ஸத்த்வம் விஷ்ணுப்ரகாஶகம்) 268. (தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம்) என்று அதிப்ரகாஶக வஸ்துவாகையாலே ஜ்ஞாநாநந்தமயசேதந தத்குண திரோதாயக த்ரிகுணாத்மக ப்ராக்ருதஶரீரம்போலன்றிக்கே, ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஸ்வாந்தர்க்கதசாமீகரப்ரகாஶக மாணிக்யமஞ்ஜூஷை போலே ஸ்வாந்த:ஸ்தித திவ்யாத்மஸ்வரூப தத்குணகண ஸம்யக்ப்ரகாஶநசாதுர்யஸஹிதமுமாயிருக்கும்.

இப்படி அப்ராக்ருதமாய், ஶுத்தஸத்வாத்மகமாயிருந்ததேயாகிலும் 269. (ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ஶ்ரிததுரிதஹரம்) இத்யாதிப்படியே சரணகமல கரகமல நயநாரவிந்த வக்த்ராரவிந்த ப்ரமுக திவ்யா஽வயவஸங்காதாத்மகமாயிருக்கையாலே 270. (யத்ர தூமஸ் தத்ராக்நி:) இதிவத், அநித்யத்வவ்யாப்த ஸாவயவத்வ ஹேதுவாலே அநித்யத்வவ்யாப்ய ஸாவயவத்வ ப்ரயுக்த ப்ராக்ருதஶரீரவத் அநித்யத்வம் ப்ரஸங்கிக்குமே என்னில்: ந ப்ரஸங்க:; ஸர்வத்ர அநித்யத்வே ஸாவயவத்வம் ஹேதுவாகமாட்டாது. பின்னையேதென்றால்;

|| பெரியதிரு (1-9-6). :: பெரியதிரு (9-7-8).

அவயவாரப்தத்வமே அநித்யத்வே ஹேதுவாகக்கடவது. இங்ஙனன்றாகில், ஹஸ்தபாதாத்யவயவஸம்யுக்தனான சேதநனுக்கும் அநித்யத்வம் ப்ரஸங்கிக்கும். ஆகையால் திவ்யவிக்ரஹத்துக்கு அவயவாரப்தத்வே ப்ரமாணமில்லாமையாலும், 271 (ஸதா பஶ்யந்தி ஸூரய:), 272. (பஶ்யந்தி ச ஸதா தேவம் நேத்ரைர் ஜ்ஞாநேந) இத்யாத்யுபப்ரும்ஹணோபப்ரும்ஹணங்களாலே நித்யத்வேந ப்ரதீதங்களாகையாலும், விக்ரஹநித்யத்வம் ஸித்தமிறே.

இங்ஙனேயாகிலும் இதுதான் அநந்தாவதாரகந்தமாகையாலே இந்த விக்ரஹத்தினின்றும் ஸாதுபரித்ராணார்த்தமாக, 273. (பஹுதா விஜாயதே), 274. (பஹூநி), † "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்" என்னும்படி * யுகே யுகே ஸம்பவிக்கிற பஹு திவ்யஜன்மங்கள் தோறும் அஸங்க்யாதங்களான * அபிமதோருதேஹங்கள் உண்டாகையாலே உபசயாத்மகப்ராக்ருததேஹம்போலே ஸததவிகாராஸ்பதமாயிருக்குமோ? என்னில்: 275. (யஸ்ய திவ்யம் ஹி தத் ரூபம் ஹீயதே வர்த்ததே ந ச), ‡ "சுருக்குவாரையின்றியே சுருங்கினாய் சுருங்கியும், பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்" என்கிறபடியே கர்மாநுகுணவிகாரரஹிதமாகவும் 276. (ஸம்பவாம்யாத்மமாயயா) § "தேவரிரக்கவேண்டி வந்து பிறந்ததும்" 277. (தேவைரர்த்திதோ ஜஜ்ஞே) என்று * இச்சாக்ருஹீதமாகவும் சொல்லுகையாலே ஏகரூபமாயிருக்கும்; கர்மக்ருதவிகாரம் தோஷாயவும், இச்சாக்ருஹீதவிகாரம் குணாயவுமாகையாலே ஏகரூபமாயிருக்கத் தட்டில்லை. அநேகவிக்ரஹம் பரிக்ரஹிக்கச்செய்தேயும் 250. (ஸதைகரூபரூபாய) என்றதிறே.

278. (கிமாத்மிகா பகவதோ வ்யக்தி:) என்று ப்ரஶ்னம் பண்ண, 278. (யதாத்மகோ பகவாந்) என்று உத்தரம் உக்தமானவனந்தரம், 278. (கிமாத்மகோ பகவாந்) என்று ப்ரச்னம் பண்ண, 278. (ஜ்ஞாநாத்மகோ பகவாந்) என்று அஜடத்வாபிப்ராயேண ஜ்ஞாநாத்மகத்வம் உத்தரமாகச் சொல்லுகையாலே, ஜ்ஞாநாத்மகமான பகவத்ஸ்வரூபம் ஸ்வரூபாநுரூபமுமாய், 279. (வித்யுல்லேகேவ பாஸ்வரா), || "நிலவும்

---

† திருவாய் (2-9-5). ‡ திருச்ச-109.
§ திருவாய் (6-4-5). || திருவாய் (6-10-1).

சுடர் சூழொளிமூர்த்தி" :: "ஒண் சுடர்க்கற்றை" 280. (தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்) இத்யாதிப்ரமாணப்ரகாரேண நிரவதிகதேஜோரூபமுமாயிருக்கும். பகவத்விக்ரஹமும், நித்யமுக்தர் விக்ரஹங்களும் பஞ்சோபனிஷன்மயமாகையாலே, உக்தவிஶேஷணவிஶிஷ்டத்வம் அவிஶிஷ்டமாய், ஏகஜாதீயத்ரவ்யமயமாயிருந்ததேயாகிலும், ஏகஜாதீயத்ரவ்யாத்மக மணித்யுமணிமஹோமத்யே கத்யோதகாந்திவத், ஸாவதிகதேஜோரூப ததீயவிக்ரஹத்தை கத்யோதகல்பம் என்னலாம்படி நிரவதிகதேஜோரூபமாயிருக்கை—ஏதத்விஷயம். இனி அவ்வளவன்றிக்கே நிரவதிகஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யலாவண்யயௌவநாத்யநந்தகுணகண ஸமவேதமாய், 281. (ஸ்புரத்கிரீட) 282. (ஸ்வோசித விசித்ர) இத்யாத்யுக்தப்ரக்ரியயா * ஸ்புரத்கிரீடமகுடாத்யஸங்க்யேயதிவ்யபூஷணபூஷிதமாய், ஆபரணகோடியிலும் ஆயுதகோடியிலும் அந்விதங்களான ஶங்க சக்ர கதாஸிஶார்ங்காத்யஸங்க்யேய திவ்யாயுதஶோபிதமாய், 283. (ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோऽஸ்மி க்ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரதம்) என்கிறபடியே ஸகலதாபஹரமாய், // "இன்பம்....சிற்றின்ப....ஒழிந்தேன்" என்னலாம்படி ஸமஸ்த போகவைராக்யஜனகமாய், யோகித்யேயமாய், ஶுபாச்ரயமுமாயிருக்கிற விக்ரஹவைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து "மூர்த்தம் ப்ரஹ்ம" என்கிறார்.

இதில் ஸௌந்தர்யமாவது:—ஸர்வதா அநுபவியாநின்றாலும் அப்பொழுதைக்கப்பொழுது ஏகைகாவயவமே அபூர்வவத் விஸ்மயகராநேக போகபரம்பராஜனகாத்யந்தஶக்தியாலே * ஸதா பஶ்யந்தி பண்ணுகிற ஸூரிகளை நிரதிஶயகாந்திஸாகர ஸ்வதரங்கதாடன தரளசித்தவ்ருத்திகராம்படி தத்த்ருஷ்டிநிமஜ்ஜநக்ஷமமான திவ்யாவயவஸௌஷ்ம்மை. "ஸௌந்தர்யஸாகரத்திலே ஆழங்கால் பட்டுக் கரையேறமாட்டாதே, † "அரும்பினை அலரை" என்னலாம்படியான 284. (யௌவனோந்முகீபூதஸுகுமாரதநு:)" என்றதிறே.

ஸௌகந்த்யமாவது:— ‡ "தெருவெல்லாம் காவிகமழ்" என்கிறபடியே த்ரிபாத்விபூதியடைய § "வாசம் செய்" என்னுமாப்போலே

:: திருவாய் (1-7-4). // திருவாய் (4-9-10). † பெரியதிரு (7-10-1).
‡ திருவாய் (9-6-1). § திருவாய் (10-10-2).

ஸ்வதிவ்யகந்தத்தாலே வாஸிதமாப்படி ஸர்வதோதிக்கமாகப் புறப்பட்டு ப்ரவஹிக்கிற நாநாவிததிவ்யகந்தம். 285.(ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:) என்னக்கடவதிறே.

ஸௌகுமார்யமாவது:—286. (புஷ்பஹாஸ இதி நாம துஹாநம் ஸௌகுமார்யமதி வாங்மநஸம் ந:) என்கிறபடியே பேசப்பிசகும்படியாய், திவ்யமஹிஷிகள் * படிக்கோல வாள் நெடுங்கண்களாலே அடுத்தடுத்துப் பார்க்கிற பார்வையிலும் தாந்திஸீலமாய், || "மலர்மகள் பிடிக்கும் மெல்லடி" என்கிறபடியே, கூசித்தொடவேண்டும்படியான புஷ்பஹாஸாக்யமாயிருக்கிற அத்யந்தமார்த்தவம்.

லாவண்யமாவது:—287. (ஏகைகஸ்மிந் பரமவயவேऽநந்தஸௌந்தர்யமக்நம் ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதா மாமதா மந்தசக்ஷு:। த்வாம் ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் ரங்கராஜாங்ககாநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விச்வபாரீணவ்ருத்தி॥) என்கிறபடியே, ஓரோ அவயவங்களின் மேலே அநந்தஸௌந்தர்யத்திலே முழுகினதாய்க்கொண்டு ஸௌந்தர்யஸாகரத்திலே ஆழங்காற்பட்டுக் கரையேறமாட்டாதே தடுமாறுகிற நித்யமுக்தர் திருக்கண்களை † "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?" என்கிறபடியே திவ்யாவயவங்களுக்கு அந்யோந்யமுண்டான ஸௌப்ராத்ரத்தாலே தத்வ்யதிகரத்தைப் பண்ணுநின்றுகொண்டு, ஸர்வபாரீணவ்ருத்தியாய், ஸர்வாவயவங்களையும் கரைகண்டு அநுபவித்துக் கரையேற்றவற்றாய், அத்தாலே லாவண்யமாகிற மரக்கலமென்று சொல்லலாம்படியாய், ஸௌந்தர்யஸாகரநிமக்னர்க்கு நாவம்போலே தாரகமாய், ஆபாதசூடம் அவிரதமாய், ப்ரவஹிக்கிற நிரவதிககாந்திஸாகர கல்லோலமாலைபோலே விளங்குகிற ஸமுதாயஸௌஷ்டவம்.

(ஹே மந்த!) அல்ப! லாவண்யமென்றொன்று உண்டென்று அறியாத (சக்ஷு:) கண்ணே! (ஏகமேகம் ஏகைகம்; தஸ்மிந்) ஒரொன்றான அவயவத்தில் (பரம்) அதன்மேலே; (அநந்தம் ஸௌந்தர்யம் தஸ்மிந் மக்நம் ஸத்) அபரிச்சின்னமான ஸௌந்தர்யத்தில் முழுகினதாய்க்கொண்டு; (ஸர்வம்) மற்றெல்லா அவயவஸௌந்தர்யத்தையும்; (கதம்) எங்ஙனே; (த்ரக்ஷ்யே) அநுபவிக்கப்போகிறேன்;

|| திருவாய் (9-2-10). † திருவாய் (3-1-1).

(இதி) என்று; (முதா) வ்யர்த்தமாக; (மா மதா) மா மந்த:; விசாரம் மா குரு; ஶங்கியாதேகொள்; "யத:" என்று அத்யாஹாரம்; யாதொரு காரணத்தாலே; (ரங்கராஜாங்ககாநாம்) பெரியபெருமாளுடைய திவ்யாவயவங்களுக்கு; (ஸுப்ராதுர்பாவ: ஸௌப்ராத்ரம்; தஸ்ய வ்யதிகரம் கரோதீதி, தத்) ஒன்றுக்கொன்று நல்ல ப்ராதாவாயிருக்கையினுடைய—ஸௌகட்யத்தினுடைய—ஸம்பந்தத்தைப் பண்ணுநின்றுள்ள; (வ்யதிகர:) ஸாங்கத்யம்; தத் கரோதீதி தேதோக்தம் ஸௌஹார்த்தமித்யர்த்த:. (தத்) ஸர்வவிலக்ஷணமான; (லாவண்யம்) ஸமுதாய ஶோபையானது; அன்றிக்கே, "தஸ்ய லாவண்யம்" என்றாய், பெரிய பெருமாளுடைய லாவண்யமென்றபடியாகவுமாம். (த்வாம்) ஸர்வத்தையும் அனுபூஷிக்கிற உன்னை. (விச்வஸ்மிந் பாரீணவ்ருத்தி: யஸ்ய தத்) ஸர்வாவயவத்திலும் அக்கரைப்பட்ட அனுபவத்தை உடைத்தானதாக; (பரிணமயிதா) புண்ணப்போகிறது. விச்வேஷு—ஸர்வேஷ்வயவேஷு, பாரீணு—பாரங்கதா, வ்ருத்தி:—அனுபவோ யஸ்ய தத் ததோக்தம்; பரிணமயிதா-பரிணதம் கர்த்தா; ல்யுட்.

யௌவனமாவது:—288. (யுவாகுமார:) என்கிறபடியே கௌமாராவஸ்தையில் கழிவான தஶையாய், யௌவநாவஸ்தாப்ராதுர்ப்பாவமாயிருக்கை. 284. (க்வ யௌவநோந்முகீபூத ஸுகுமாரதநுர்ஹரி:) என்றதிறே. ஏதாத்ருஶஸ்திதியே நிலைநிற்கையாலே நித்யயௌவனமாயிருக்கும். ஸர்வேச்வரன் ஆச்ரிதாரக்ஷணார்த்தமாக அஸங்க்யாத திவ்யவிக்ரஹ பரிக்ரஹம்பண்ணி ஶைஶவாத்யவஸ்தாபன்னனுகிலும் இந்த யௌவனுவஸ்தை குலையாமையாலேயன்றோ † "உன்னையுமொக்கலையில் கொண்டுதமில் மருவி உன்னொடு தங்கள் கருத்தாயின செய்துவரும் கன்னியரும் மகிழ" என்று ஶைஶவாவஸ்தையிலே யௌவனம் கண்டு அனுபவித்தது.

ஆக, ஏதாத்ருஶாऽஸங்கயேய கல்யாணகுணவிஶிஷ்டதையால் உண்டான திவ்யவிக்ரஹவைலக்ஷண்யத்தை "மூர்த்தம்" என்று தொடங்கி அனுபவிக்கிறார். *ப்ரஹ்மஶப்தத்தாலே விக்ரஹத்தினுடைய அதிமஹத்த்வமும், ஸ்வாச்ரிதாऽஜ்ஞாநநிவ்ருத்திபூர்வக விஜ்ஞானவிகாஸகத்வமும் விவக்ஷிதம். இதற்கு "மூர்த்தம் ப்ரஹ்ம"

† பெரியாழ்-திரு (1-5-8).

என்றிறே திருநாமம். (ததோऽபி தத்ப்ரியதரம்) ஆனந்தமயஸ்வரூபத்திலும், ஆனந்தாவஹததஸங்க்யாதகுணங்களிலும், அதிஶயித ஸௌந்தர்யாதிகுணயோகத்தாலே நிரதிஶயானந்தாவஹமாய், அத ஏவ நிரவதிகப்ரீதிவிஷயமாயிருக்கை. 289. (இச்சாக்ருஹீதாऽபிமதோருதேஹ:) என்னக்கடவதிறே. (தத்ப்ரியதரம்) தஸ்ய ப்ரியதரம் என்னுதல்; "தத்" என்று வ்யஸ்தமாக்கி "யத் தத்" என்று யோஜிக்கவுமாம். அப்போது 290. (புருஷம் க்ருஷ்ணபிங்களம்), 291. (ஸர்வயஜ்ஞமயம் வபு:), 292. (த்யேயயஸ்ஸதா), 293. (கிரீடகுண்டலதரம்) இத்யாதி விக்ரஹவைலக்ஷண்யப்ரதிபாதகப்ரமாண ப்ரஸித்த்யதிஶயத்தை த்யோதிப்பிக்கிறது. (ரூபம்) இங்கே ரூபஶப்தம் விக்ரஹபரம். * யச்சப்தம், ஏகரூபத்வ நித்யத்வ நிரவத்யத்வ அசிந்த்யத்வ ப்ரகாஶக ப்ரமாணப்ரஸித்திபரம். (அத்பத்புதம்) ஸ்வஸங்கேஶ பூர்வோக்த ஸௌந்தர்யாத்யனந்தகுணயோகங்களாலே, அபிநவரஸ ஜனகமாய், அதிவிஸ்மயாவஹமாயிருக்கை. இவ்விடத்திலே 293. (ஸ்வாபிதாநுரூபைகரூப-விக்ரஹ) என்கிற சூர்ணிகாத்வயப்ரதிபாதித விக்ரஹவைலக்ஷண்யமெல்லாம் அனுஸந்தேயம்.

இத்தால், ஸ்வரூபதத்குணத்யந்தாபிமதமாய், ப்ரஹ்மஶப்தவாச்யமாய், அதிவிஸ்மயாவஹமாய், ஶ்ருதிஸ்ம்ருத்யாதிப்ரஸித்தமான, ஸாலம்பனயோகவிஷயாऽஸாதாரண விக்ரஹத்தை ஶுபாஶ்ரயமாக அனுபவித்தாராய்த்து. * யோகித்யேயமிறே. 294. (ஸதா த்யேயம்). மேல், இந்த விக்ரஹத்தினின்றும் ஆஶ்ரிதார்த்தமாகப் பரிக்ரஹித்த வ்யூஹவிபவாந்தர்யாமிரூபங்களை அனுபவிக்கிறார் (யாந்யந்யாநி) இத்யாதியாலே. "யதா ஸூக்ஷ்மம் விஹாரதோ ஹரே: அந்யாநி யாநி ரூபாணி ஸந்தி, தாநி ஸர்வாணி" என்று ஸம்பந்தம். (யாநி) இவ்விடத்தில் யச்சப்தம், 295. (ஜந்ம கர்ம ச மே திவ்யம்) என்கிற அவதாரரஹஸ்யப்ரகாஶகப்ரமாணப்ரஸித்தியை ஸூசிப்பிக்கிறது. "யாநி" என்கிற பஹுவசனம் 273. (அஜாயமானோ பஹுதா விஜாயதே), ‡ "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்", 274. (பஹூநி), "ரூபாணி" 275. (ஶதஶோऽத ஸஹஸ்ரஶ:) இத்யாதிகளில் சொல்லுகிற அவதாராऽஸங்க்யாதத்வத்தை ஸூசிப்பிக்கிறது. (அந்யாநி)

‡ திருவாய் (2-9-5).

பரரூபத்தினின்றும் * ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்கு பிறக்கையாலே, தத்ஸந்நிவேஶவர்ணாதிகளைப்போலே வைலக்ஷண்ய-விஶிஷ்டங்களாயிருக்கை. "அந்ய:" என்கிறாப்போலே, "அந்யாநி" என்கையாலே வ்யாவ்ருத்தியும் தோற்றுகிறது.

(யதாஸுகம்) மனுஷ்யஸஜாதீயனாய் அவதரித்த தஶையிலும், ஸ்வாபாவிகஸுகாதிநிவ்ருத்தியென்ன, து:க்கபாக்த்வமென்ன, இவை யின்றிக்கே கேவலம் ஸுகமாயிருக்குமதொரு படி. (ஸுகம் யதா பவதி ததா) க்ரியாவிஶேஷணமான அவ்யயம். (விஹாரத:) என்கிற இத்தால் அவதாரரூபங்கள் இச்சாக்ருஹீதங்கள் என்னுமிடமும் § "வீட்டைப் பண்ணி விளையாடும்", || "இன்புறுமிவ்விளையாட்டு டையான்" 296. (க்ரீடதோ பாலகஸ்யேவ) என்கிறபடியே க்ரீடார்த்தங்களாயிருக்குமென்னுமிடமும் கர்ப்பிதம். ஆகையால் இவனுடைய *ஶரீரக்ரஹணம் கர்மக்ருதமின்றிக்கே *கேவலம் தர்மத்ராணார்த்தமாயிருக்குமென்கை. 297. (நாகாரணாத்) இத்யாதி. (ஸர்வாணி தாநி) கீழ்ச்சொன்ன இத்தால் ஸ்வரூபரூபாதிகளில் அத்யல்பமாகிலும் பெரியபிராட்டியாராலே அநந்விதமாயிருப்பதில்லை என்னுமிடத்தை த்யோதிப்பிக்கைக்காக "ஸர்வாணி தாநி" என்கிறார். 23. (ஸர்வாணி ரூபாணி) என்றாப்போலே இருக்கிறதாய்த்து. (தைஸ் ஸ்வைரநுரூப ரூபவிபவை:) உன்னுடைய அஸாதாரணங்களான அனுரூபரூபவிப வங்களாலே; அனுரூபங்களான ரூபஸம்பத்துக்களாலே என்கை. அதவா, ரூபங்களாகிற விபவங்களாலே என்னவுமாம். இவ்விடத்தில் ரூபஶப்தம் * பகவந்நாராயணாபிமதாநுரூபங்களான ஸ்வரூபரூப குணவிபூதிகளைச் சொல்லுகிறது. (யதாஸுகம் விஹரதோ ஹரேஸ் ஸர்வாணி ரூபாணி தைஸ்தைரனுரூபரூபவிபவைர் காடோப கூடாநீத்யாஹு:) த்வதபிமதானுரூபங்களான தத்ஸ்வரூபரூபகுணாதிகள், ததபிமத தத்ஸ்வரூபாத்யனுரூபங்களான உன்னுடைய ரூபாதிகளாலே யதாக்ரமம் த்ருடஸம்புத்தங்களாயிருக்கு மென்று ஶ்ருதிஸ்ம்ருதிகள், வஸிஷ்டபராஶரபாராஶர்யாதிகளான பரமர்ஷிகள் சொல்லுவர்கள். அனுரூபமாயிருக்கையாவது:—ரத்ன காஞ்சனந்யாயத்தாலே ஸ்வஸம்பத்திக்கு ஶோபாதிஶயஹேதுவாயி

§ நாச்-திரு (14-9). || திருவாய் (3-10-7)

ருக்கை. (காடோபகூடாநி) வியோகாநர்ஹங்களாயிருக்குமென்கை. † "இறையும் அகலகில்லேன்" என்றிருக்க, அவன் 151. (ந ஜீவேயம் க்ஷணமபி) என்றிருக்க, இருவர் ஸ்வரூபாதிகளும் 'வியோகித்திருக்க விரகுண்டோ? (ஆஹ:) 19. (விஷ்ணோஶ் ஶ்ரீரநபாயிநீ), 298. (ஶ்ரீவத்ஸவக்ஷா நித்யஶ்ரீ:) என்றும், ‡ "திருவிருந்த மார்பன்" என்றும், § "திருமெய்யுறைகின்ற" || "தன்னொடும் பிரிவிலாத திருமகள் மருவும்" இத்யாதிப்ரமாணப்ரவர்த்தகரான தத்வதர்ஶிகள் இந்நித்யயோகத்தைச் சொன்னார்கள்.

இத்தால் ஸாபராதசேதனர் ஸ்வாபராதத்தை நினைத்து அஞ்சி அகலாமல் ருசி பிறந்தபோதே ஆஶ்ரயிக்கலாம்படி புருஷகாரபூதையான இவள் ஸந்நிதி அவஶ்யம் வேண்டுகையாலும், ப்ராப்திதஶையில் சேர்ப்பாலும் கண்டசர்க்கரையும் கலந்தாப்போலே நிரதிஶய போக்யத்வார்த்தமாகவும் 58, (வைதேஹ்யா ஸஹ) என்கிறபடியே இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறையாகையாலும் அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் சேர்த்தியிலேயாகையாலும், இப்படி உபாயதஶையோடு உபேயதஶையோடு வாசியற * இங்குமங்கும் திருமாலன்றி இன்புற விரகில்லாமையாலே * எழில் மலர் மாதரும் தானுமாய்க்கொண்டு இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருக்கிற நித்யயோகத்தை அநுஸந்தித்தருளினாராய்த்து.

* மதுபர்த்தப்ரதிபாதகமான இஶ்லோகத்தாலும், ப்ரதமஶ்லோகத்தாலும் நாராயண ஶப்தார்த்தமும் ஸங்க்ருஹீதம். எங்ஙனேயென்னில்: "ஶாந்தாநந்த" என்று தொடங்கி திவ்யர்த்மஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கையாலே, * அயநஶப்தார்த்தம் ஸங்க்ருஹீதம். குணகுணிகள் அப்ருதக்ஸித்தங்களாகையாலே குணியான ஸ்வரூபத்தைச் சொன்ன இது தந்நிரூபககுணங்களான ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளுக்கும், நிரூபிதஸ்வரூபவிஶேஷணங்களான ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்கும், ஸௌகர்யாSSபாதகங்களான வாத்ஸல்யஸௌஶீல்யாதிகளுக்கும் உபலக்ஷணம். "மூர்த்தம்—ரூபம்" என்று தொடங்கிச்சொன்ன திவ்யவிக்ரஹம், தத்குணங்களான காந்திஸௌகுமார்யாதிகளுக்கும் தத்தாதேயமான திவ்யபூஷணங்களுக்கும், ஆபரணகோடியிலே அன்வித

† திருவாய் (6-10-10). ‡ நான்-திருவ-92. § திருவாய் (10-4-2).

மான திவ்யாயுதங்களுக்கும் உபலக்ஷணம். (தே) என்று பெரிய பிராட்டியாரைச் சொன்னது, பூமிப்பிராட்டி தொடக்கமான மற்றை நாய்ச்சிமாருக்கும் உபலக்ஷணம். "பணிபதி:" என்று நித்யஸூரிகளைச் சொன்னது, சத்ரசாமராதிகள் தொடங்கி பரமாகாஶத்துக்கும் உபலக்ஷணம். "மாயா" என்று ப்ரக்ருதியைச் சொன்னது பத்தாத்மாக்களுக்கும், காலமஹதாதிவிகாரங்களுக்கும் உபலக்ஷணம். "ப்ரஹ்மேஶாதி" என்று அண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்களைச் சொன்னபோதே அண்டமும் ஸித்தமிறே. ஆக, நாரஶப்தார்த்தமும் ஸங்க்ருஹீதம். விக்ரஹத்தைச் சொன்னபோதே * சரணஶப்தார்த்தம் ஸங்க்ருஹீதம். உபாயோபேயங்களுக்கு அவிஶிஷ்டமான நித்யயோகத்தைச் சொல்லுகையாலே, உபாய ஸ்வீகாரமும் உபேயப்ரார்த்தனையும் உக்தப்ராயம். அதவா, ஶ்லோகத்ரயத்தாலே பூர்வவாக்யார்த்தத்தையும், துரீயச்லோகத்தாலே உத்தர வாக்யார்த்தத்தையும் அனுஸந்திக்கவுமாம்.

நநு, இச்லோகத்தில் இருவருடையவும் நித்யயோகம் சொல்லுகிறதாகில், 299. (பரமாத்மா பரோ யோऽஸௌ நாராயணஸமாஹ்வய:। தஸ்யாऽநபாயிநீ ஶக்திர் தேவீ தத்தர்மதர்மிணீ ॥) 19. (விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ) என்றாப்போலே திரள ஒரு பாசுரமிட்டருளிச்செய்யாமல், பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகள், லக்ஷ்மீஸ்வரூபரூபகுணவிபூதிகளோடே யதாக்ரமம் காடாச்லிஷ்டங்களாயிருக்கும் என்று இப்படி விபஜித்து அருளிச்செய்வானென்னென்னில்: த்வயத்திலே ப்ரதம பதத்தில் விஶேஷ்யபரமான நாராயணபதத்திலே பகவத்ஸ்வரூபரூப குணவிபூதிகளை ப்ரதிபாதிக்கையாலும், தத்விஶேஷணபரமான ஶ்ரீஶப்தத்திலே பிராட்டியினுடைய ஸ்வரூபரூபகுணாதிகளை ப்ரதிபாதிக்கையாலும் உபயருடையவும் ஸ்வரூபாதிகளுக்கு உண்டான அவிநாபாவஸம்பந்தத்தை மதுப்பு ப்ரதிபாதிக்கையாலும், மதுபர்த்தப்ரகாஶகமான இச்லோகத்தாலே புருஷகாரோபாயங்களுடைய ஸ்வரூபாதிகளுக்கு அந்யோந்யமுண்டான அவிநாபாவஸம்பந்தத்தை விஸ்தரேண அருளிச்செய்யக் குறையில்லை.

இப்படி, பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளோடே பிராட்டிக்கு உண்டான அவிநாபாவஸம்பந்தத்தை வேதங்களும், ருஷிகளும்,

ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பி அநுஸந்தித்தார்கள். 299. (தேவஜுஷ்டாம்) என்றும், (ஸ்ரீமந்நாராயண) [த்வயம்] என்றும், தத்ஸ்வரூபாதிகளோடே ஏததவிநாபாவஸம்பந்தத்தை வேதாந்தங்கள் விரும்பிற்றன. 300. (அஹந்தா ப்ரஹ்மணஸ் தஸ்ய ஸா஽ஹமஸ்மி ஸநாதநீ। ஆத்மா ஸ ஸர்வபூதாநாம் அஹம்பூதோ ஹரி:ஸ்ம்ருத:॥ அஹந்தயா விநா஽ஹம் ஹி நிருபாக்யோ ந ஸித்த்யதி। அஹமர்த்தம் விநா஽ஹந்தா நிராதாரா ந ஸித்த்யதி॥) இத்யாதிகளாலே பகவத்ஸ்வ-ரூபா஽விநாபாவஸம்பந்தம் ஸ்பஷ்டமாயிற்று. 301. (கா சா஽ந்யா த்வாம்ருதே தேவி! ஸர்வயஜ்ஞமயம் வபு:। அத்யாஸ்தே தேவதேவஸ்ய யோகிசிந்த்யம் கதாப்ருத:), 298. (ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ:), 302. (யயௌ வக்ஷ:ஸ்தலம் ஹரே:) இத்யாதிகளாலே விக்ரஹாந்வயம் விஶதமாய்த்து. 303. (ராஜராஜேஶ்வரிலஸ்யாஸ்ய விச்வஸ்ய பரமேச்-வர:। காந்தஸ்ய தஸ்ய தேவஸ்ய விஷ்ணோஸ் ஸத்குணஶாலிந:॥ தயிதா஽ஹம் ஸதா தேவீ ஜ்ஞாநாநந்தமயீ ஸதா। அநவத்யாऽநவத்யாங்கீ நித்யம் தத்தர்மதர்மிணீ॥) இத்யாதிகளாலே குணவிநாபவம் கோஷிக்கப்பட்டது. 304. (வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:। ஆஸ்தே) 305. (தத்ர திவ்யவபு: ஸ்ரீமாந் தேவதேவோ ஜநார்த்-தந:। ஆஸ்தே நாராயண: ஸ்ரீமாந் வாஸுதேவஸ் ஸநாதந:॥) 306. (வைகுண்டே து பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்த்தந:) இத்யாதிகளாலே விபூத்யந்வயம் விஸ்தரிக்கப்பட்டது. 307. (ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:), 308. (தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ।....ராகவத்வேऽபவத் ஸீதா) 309. (வ்யூஹேஷு சைவ ஸர்வேஷு விபவேஷு ச ஸர்வஶ:। ததா வ்யூஹீ பவத்யேஷா மம சைவாநபாயிநீ॥) இத்யாதிகளாலே வ்யூஹவிபவாऽவிநாபாவம் வ்யாக்-யாதமாயிற்று. 310. (தைஸ்தைரநுகுணைர் பாவைர் யாஹம் தேவஸ்ய ஶார்ங்கிண:। கரோமி ஸகலம் க்ருத்யம் ஸர்வபாவாநுகாமிநீ) இத்யாதிகளாலே ஐச்வர்யாந்வயம் ஆதரிக்கப்பட்டது. இப்படி ப்ரத்யேகமாக ப்ரதிபாதிக்கையன்றிக்கே, 311. (குணைர் விலாஸை ரூபைச்ச ஸ்வாத்-மநா வாऽऽத்மநீச்வரம்। நியச்சந்தீம் அகண்டாண்ட நியந்த்ரீஞ்ச ஸ்தும: ஶ்ரியம்) என்று ஸகலாவிநாபாவஸம்பந்தமும் ஸங்க்ரஹிக்கப்பட்டதிறே.

† "மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள்" ‡ "தன்னோடும் பிரிவிலாத திருமகள்" இத்யாதிகளாலே ஸ்வரூபாऽவிநாபாவஸம்பந்

† திருவாய் (1-3-1). ‡

தமும், § "என் திருமகள்சேர் மார்பனே!", || "திருமார்வினில் சேர் திருமாலே" / "அலர்மேல் மங்கையுறை மார்பா", :: "திருமகளும் கூறும் தனியுடம்பன்" என்று ரூபாऽவிநாபாவஸம்பந்தமும், / "நிகரில் புகழாய்", /: "மிகும் திருமால் சீர்க்கடலை" என்று குணாऽபிவ்ருத்த்யந்தர்ப்பாவமும், †: "திருமால் வைகுந்தம்" என்று விபூத்யந்தர்ப்பாவமும், ‡: "திருமால் கடல்", †/ "மாதவா! கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!", §: "சீமாதவன் கோவிந்தன்", /‡ "திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான்", †† "வேங்கடத்தென் திருமால்" என்று வ்யூஹவிபவாऽந்தர்யாம்யர்ச்சாவதாராऽவிநாபாவமும், ‡‡ "பூம்பாவை யாகம் புணர்வது இருவரவர் முதலும் தானே", §§ "அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்—எல்லாக்கருமங்களும் செய்" என்று ஜகத்ஸ்ருஷ்ட்யுந்முகாத்யந்தர்ப்பாவமும் ஆழ்வார்களாலும் அநுஸந்திக்கப்பட்டதிறே.

இவர்களை அடியொற்றின ஆசார்யச்ரேஷ்டரான பட்டரும் 311. (ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவதநே! த்வதாச்லேஷோத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷஸமயே। த்வமாஸீர் மாத: ஸ்ரீ: கமிதுரித மித்தந்த்வவிபவைஸ் ததந்தர்ப்பாவாத் த்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி॥) என்று ஸ்வரூபாऽவிநாபாவஸம்பந்தமும், 312. (அநுகலதநுகாண்டாலிங்காரம்ப^{ஸ}ம்பத்) என்று ரூபஸம்பந்தமும், 313. (ப்ர^{ஸ}கநபலஜ்யோதிர் ஜ்ஞாநைச்வர் விஜயப்ரதா ப்ரணதவரண ப்ரேம க்ஷேமங்கரத்வ புரஸ்ஸரா:। அபி பரிமள: காந்திர் லாவண்யமர்ச்சிரிதீந்திரே! தவ பகவதச்சைதே ஸாதாரணா குணரா^{ஸ}ய:॥), 314. (அந்யேऽபி யௌவநமுகா யுவயோஸ் ஸமாநா: ஸ்ரீரங்கமங்களவிஜ்ரும்பணவைஜயந்தி। தஸ்மிம்ஸ்தவ த்வயி ச தஸ்ய பரஸ்பரேண ஸம்ஸ்தீர்ய தர்ப்பண இவ ப்ரசுரம் ஸ்வதந்தே॥) 315. (யுத்வத்வாதௌ துல்யேऽப்யபரவ^{ஸ}தா^{ஸ}த்ரு^{ஸ}ம்ந) இத்யாதிகளாலே குணாவிநாபாவமும், 316. (தத்ர ஸ்ரக்ஸ்பர்^{ஸ} கந்தம் ஸ்புரதுபரிபணாரத்நரோசிர் விதாநம் விஸ்தீர்யாऽநந்தபோகம்) என்று

§ திருவாய் (7-2-9). || திருவாய் (9-4-1). / திருவாய் (6-10-10).
:: திருவாய் (4-8-1). /: பெரியதிருவ-69. †: திருவாய் (10-7-8).
‡: †/ திருவாய் (1-5-5). §: திருவாய் (8-2-7). /‡ திருவாய் (10-8-1).
†† நாச்-திரு (8-1). ‡‡ திருவாய் (2-8-1). §§ திருவாய் (3-10-8).

விபூத்யந்தர்ப்பாவமும், 317. (ததிமாதம் மத்நத: ச்ராந்திஶாந்த்யை—ஸ்மிதநயந ஸுதாபிஸ் ஸிஞ்சதீ சந்த்ரிகேவ) என்று வ்யூஹாந்தர்ப்பாவமும், 318. (யதி மநுஜதிரச்சாம் லீலயா துல்யவ்ருத்தேரநுஜநுரநுரூபா தேவி நாவாதரிஷ்ய: । அஸரஸமபவிஷ்யந் நர்ம நாதஸ்ய மாதர் தரதளதரவிந்தோதந்தகாந்தாயதாக்ஷி), 319. (அநுஜநுரநுரூபரூபசேஷ்டா ந யதி ஸமாகமமிந்திராऽகரிஷ்யத் । அஸரஸமதவாऽப்ரியம் பவிஷ்ணு த்ருவமகரிஷ்யத ரங்கராஜநர்ம ॥) என்று விபவாந்தர்ப்பாவமும், 320. (ஶ்ரீஸ்ஸ்தநாபரணம் தேஜ: ஶ்ரீரங்கேஶயம்) என்று அர்ச்சாவதாராந்தர்ப்பாவமும், 200. (ஶ்ரீயை ஸமஸ்தசிதசித்விதாநவ்யஸநம் ஹரே:) 320*. (யத்ப்ரூபங்கா: ப்ரமாணம்), 321. (அநுஶிகிநி ஶிகீவ க்ரீடஸி ஶ்ரீஸமக்ஷம்) என்று ஜகத்வ்யாபாராந்தர்ப்பாவமும் ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே. 322. (ஆத்மந்யாத்மா வபுஷி ச வபுர் வைபவைர் வைபவஞ்சேத்யாகாரைஸ்தைரநுகுணதயா ஸர்வபாவாநுயாதா । இச்சாரூபாண்யபி பகவதஸ் ஸ்வாதயந்த்யாத்தரூபா தூரீகுர்யாந்நஹி மதுரதாதுக்தஸிந்தோஸ்தரங்காத் ॥) என்று பிராட்டிக்கு உண்டான பகவத்ஸ்வரூபாத்யவிநாபாவஸம்பந்தத்தை அபியுக்தர்களும் அநுஸந்தித்தார்களிறே. ஆக, இப்படி ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலும், அவற்றை அடியொற்றின ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களாலும் ப்ரதிபாதிக்கிற திவ்யதம்பதிகளுடைய ஸ்வரூபாதிகளுக்கு அந்யோந்யமுண்டான அவிநாபாவஸம்பந்தத்தை இச்லோகத்தாலே அருளிச்செய்தாராய்த்து.

இப்படி இருவர்க்குமுண்டான அவிநாபாவஸம்பந்தத்தை அருளிச்செய்கிறவிடத்தில், ப்ரதமத:, விபுவான பகவத்ஸ்வரூபத்தோடே லக்ஷ்மீஸ்வரூபத்துக்கு அநுரூபஸ்வரூபஸம்பந்தம் சொல்லுமளவில், பிராட்டிக்கும் ஸ்வரூபத: விபுத்வம் அங்கீகரிக்கவேணும். ஸ்வரூபவிபுத்வம் அங்கீகரித்தாலிறே பகவத்ஸ்வரூபாநுரூபத்வமும், அதிஶயாகாரேண ஸ்துதியும் ஸித்திப்பது. 'பத்னிக்கு பதிஸ்வரூபாநுரூப்யாऽவச்யம்பாவித்வத்தை ச்ருதியும் ஸூசிப்பித்ததிறே. விஷ்ணுவுக்குப் பத்னியாம்போது வ்யாபனஶீலையாகவேணும். 49. (பகவந்நாராயணபிமதாநுரூபஸ்வரூபரூப) என்று பகவத்ஸ்வரூபாநுரூபத்வத்தை பாஷ்யகாரரும் ப்ரதமத்திலே ஸாதித்தருளினாரிறே. இப்படி ப்ரமாணஸித்தமுமாய், ப்ரமாத்ருஸித்தமுமாய், யுக்தியுக்த

மூமான விபுத்வத்தை அங்கீகரியாமல், அணுத்வத்தை அங்கீகரிக்கும் போது, பகவத் வருபைகதேஶவ்யாப்தியேயிறே ஸித்திப்பது. அது ஸகலசேதன ஸமானமாகையாலே, பிராட்டிக்கு ஓரதிஶயித ஸ்தோத்ரம் ஸித்தியாது. "அநுரூபரூபவிபவை:" என்கிற பதத்துக்கும் பகவத்ஸ்வரூபாதிகளிம் அல்பதேஶமாகிலும் இவளால் அநந்விதமாயிருப்பதொரு இடமில்லை என்னுமிடத்தை ப்ரதிபாதிக்கிற "ஸர்வாணி" என்கிற பதத்துக்கும் வையர்த்யமும் வரும். அணுவரூபையாயிருக்கவும், விகாஸகஶக்தியாலே விபுவாயிருக்குமென்னில்; அப்போது ஸமானந்யாயத்தாலே ஸகலாத்மாக்களும் ஸ்வரூபவிகாராங்கீகாரத்திலே தோஷமின்றியிலே ஒழியும். ஆத்மநிர்விகாரத்வ ப்ரதிபாதகமான ப்ரமாணங்களுக்கும் விரோதமாம். ஆகில், ஜ்ஞான வ்யாப்தியைச் சொல்லுகிறதென்னில்: 323. (வாலாக்ரஶதபாகஸ்ய) என்று தொடங்கி, 323. (ஸ சாநந்த்யாய கல்பதே) என்று முக்தாத்மாக்களுக்கும் ஜ்ஞானவ்யாப்தியுண்டாகையாலே இங்கு ஒரு அதிஶயமும் அனுரூபத்வமும் ஸித்தியாது. இவர்களைப்போலே ப்ரத்வம் ஸாபாவமாத்ரமேயின்றிக்கே ப்ராகபாவத்தைப் பற்றச் சொல்லுகையாலே அதிஶயமும் அனுரூபத்வமும் ஸித்திக்கிறதென்னில்: அது நித்யர்க்கும் உண்டாகையாலே அவை இரண்டும் ஸித்தியாது. கிஞ்ச, அநுரூபத்வோக்தியாலே அதிஶயஸ்துதி ஸித்திக்கிறதென்னில்; அந்த அனுரூபத்வமாவது:—அணுத்வத்தில் வைஷம்யமுண்டானாலும், ஸ்வதந்த்ரஶேஷியைக்குறித்து ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாலே அதிஶயாவஹத்வமென்னில்; அதுவும் ஸகல சேதநாசேதந ஸமானமாகையாலே விஶேஷம் ஸித்தியாது. கிஞ்ச, (யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம), (த்வயைதத் விஷ்ணுநா சாம்ப! ஜகத் வ்யாப்தம் சராசரம்) இத்யாதிகளிலே ஸ்வரூபதோ விபுத்வம் ப்ரஸித்தமாயிருக்க, ததநங்கீகாரேண அணுத்வாங்கீகாரமும் ப்ரமாண-விரோதமும் ப்ரஸங்கிக்கும். ஆக, அனுரூபத்வஸித்திக்காகவும், அதிஶயிதஸ்துதிஸித்திக்காகவும், ப்ரமாணவையர்த்ய நிவ்ருத்த்யர்த்தமாகவும், பிராட்டிக்கு ஸ்வரூபவிபுத்வம் அவர்ஜநீயமாகையாலே அவச்யம் அங்கீகார்யமிறே என்னில்:

மைவம். லக்ஷ்மீஸ்வரூபத்தை நிரூபிக்குமளவில், ஸ்வரூபவிபுத்வம் கூடாது. எங்ஙனேயென்னில்: 324. (போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச

மத்வா), 325. (க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:) இத்யாதி வேதாந்த ஸித்தமான அர்த்தங்கள் நம் தர்ஶனத்துக்கும் உண்டிறே. இவற்றில் "அசித் தத்வாந்தர்ப்பூதையோ? ஜீவதத்வாந்தர்ப்பூதையோ? ஈச்வர தத்வாந்தர்ப்பூதையோ? தத்வத்ரயாதிரிக்தையோ?" என்று விகல்பித்து நிரூபிக்குமளவில், அசித்து ஜ்ஞானஶூந்யமாகையாலும், இவள் ஜ்ஞாத்ருத்வவிஶிஷ்டையாகையாலும், ஜ்ஞத்வாऽஜ்ஞத்வ விரோதப்ரஸங்கத்தாலே, அசித்தத்வாந்தர்ப்பாவம் கூடாது. ஈஶ்வரத்வித்வப்ரஸங்கத்தாலும், 326. (ஈஶதே தேவ ஏக:) என்கிற ஏகத்வ ஶ்ருதியோடும், 327. (ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே) என்கிற ஸமாதிகதரித்ரத்வப்ரகாஶகஶ்ருதியோடும் விரோதம் ப்ரஸங்கிக்கையாலும், ஈஶ்வரதத்வாந்தர்ப்பாவம் கூடாது. பகவதைக்யம்சொல்லில், பத்நீத்வபரமான ஶ்ருதியோடும் பேதபரமான ச்ருதியோடும் விரோதம் பிறக்கும். ஐக்யபரங்களான ஶ்ருதிகள் அத்யந்தபாரதந்த்ர்யத்தாலே அவிநாபாவ நிபந்தனங்கள்; பேதப்ரதிபாதகங்கள் ஸ்வரூபபேதபரங்கள். கிஞ்ச, ஈஶ்வரத்வித்வத்தில் அந்யோந்யம் ஆஜ்ஞாவ்யாகாதத்தாலே அநீச்வரத்வமும் ப்ரஸங்கிக்கும். அதிரிக்ததத்வத்தில் ப்ரமாணமில்லாமையாலே தத்வத்ரயாதிரிக்தை என்னக் கூடாது. இனி, பாரிஶேஷ்யாத் ஜீவதத்வாந்தர்ப்பூதை என்னுமிடம் ஸித்தம்.

ஆனபின்பு, 328. (ஏஷோऽணுராத்மா), 329. (த்ரஸரேணுப்ரமாணாஸ்தே ரச்மிகோடிவிபூஷிதா:) என்று ஆத்மாக்களுக்கு அணுத்வத்தை லக்ஷணமாகச் சொல்லுகையாலும், ஜீவஸமஷ்டிவாசகமான மகாரத்தில் "மாங்—மானே" என்கிற தாதுவாலே, ஆத்மாக்கள் அணுபரிமாணரென்று சொல்லுகையாலும், ஜீவதத்வாந்தர்ப்பூதையான இவளுக்கும் அணுத்வம் அவர்ஜனீயமாகையாலே ஸ்வரூபவிபுத்வம் சேராது. கிஞ்ச, ஜீவதத்வாந்தர்ப்பாவத்தை அங்கீகரித்து அணுத்வாऽநங்கீகாரேண † "அணுத்வஸ்ய ஏதத்வ்யதிரிக்தஜீவவிஷயத்வேந விபுத்வம் ஏதத்விஷயம்" என்னில்: அப்போது, ஜீவத்வம் அணுத்வவ்யாப்தமாகையாலே ஜீவலக்ஷணத்துக்கு அவ்யாப்திதோஷம் ப்ரஸங்கிக்கும். "விபுத்வே ஸதி சேதநத்வம்" என்கிற ஈச்வரலக்ஷணத்துக்கு அதிவ்யாப்தியும் ப்ரஸங்கிக்கும். ஜீவாணுத்வப்ரதிபாதிகையான

† பா. அணுத்வமேதத்வ்யதிரிக்த ஜீவவிஷயம்; ஜீவத்வேऽபி விபுத்வம் ஏதத்விஷயம்

ச்ருதியோடும் விரோதிக்கும். ஆகையிறே 323. (ஸ சாநந்த்யாய கல்பதே) என்கிற விடத்திலும் முக்தருக்கும் ஸ்வரூபவிபுத்வம் சொல்லாமல் ஜ்ஞானவ்யாப்தியை ப்ரதிபாதிக்கிறது. இவ்வர்த்தம் 330. (ப்ரதீபவதாவேஶ:) இத்யாதிஸூத்ரத்திலே ப்ரதிபாதித்ததிறே.

நநு, முக்தர்க்கு ஜீவத்வஸாம்யத்தாலே அவர்ஜனீயமான அணுத்வத்துக்கு பாதகப்ரமாணமில்லாமையாலும், ததணுக்ராஹகப்ரமாண ஸத்பாவத்தாலும் அணுத்வம் அங்கீகரிக்கலாம். பிராட்டிக்கு ஜீவத்வ ஸாம்யாகாரத்தாலே ப்ராப்தமான அணுத்வத்துக்கு தத்வ்யாபக ப்ரமாணம் பாதகமாகையாலே அணுத்வம் கூடாதிறேயென்னில்; நைவம்; தத்விபுத்வப்ரமாணங்கள் ஸ்வரூபவிபுத்வபரங்களன்றிக்கே விக்ரஹவ்யாப்திப்ரதிபாதகங்களாகையாலே ததணுத்வபாதகங்களல்லவிறே என்கை. நநு, யதாப்ரமாணம் தத்விபுத்வாங்கீகாரத்தில் பாதகமில்லாமலிருக்கவும், ப்ரமாணங்களுக்கு அந்யார்த்தம் கல்பிக்கை யுக்தமல்லாமையாலே, தத்விபுத்வப்ரமாணங்கள் ததணுத்வே பாதகங்களிறேயென்னில்: விபுத்வயாऽஸம்பவமே இவ்விடத்தில் பாதகமாகையாலே அணுத்வம் அவர்ஜனீயமென்கை. நநு, காலாதிகளுக்கு விபுத்வம் உண்டாயிருக்கவும் ஈச்வரத்வித்வம் வாராதாப்போலே, லக்ஷ்மீவிபுத்வத்திலும் ஈச்வரத்வித்வம் ப்ரஸங்கியாமையாலே அது விரோதமன்றேயென்னில்: "காலாதிகளுக்கு விபுத்வமுண்டாயிருக்கவும் ஈச்வரத்வித்வம் வாராதாப்போலே" என்கிற த்ருஷ்டாந்தம் சேராது. எங்ஙனேயென்னில்: "சைதந்யாऽநாதாரத்வே ஸதி விபுத்வம்" என்கிறதிறே லக்ஷணம்; "சைதந்யாதாரத்வே ஸதி விபுத்வம்" ஈச்வரலக்ஷணமாகையாலே சைதந்யவிஶிஷ்டையான இவளுக்கு விபுத்வம் கொள்ளில் ஈச்வரத்வித்வம் ப்ரஸங்கிக்கையாலே, இவளுக்கு அணுத்வமே அஸாதாரணலக்ஷணம் என்னத் தட்டில்லை.

நநு, 166. (யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர:), (உத்தம: புருஷஸ்த்வந்ய:) என்று ஸர்வவ்யாபகத்வத்தாலும், ஸர்வநியந்த்ருத்வத்தாலும் ஈச்வரனுக்கு ஜீவாऽந்யத்வம் ஸாதித்தாப்போலே, 19. (யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம), 51. (ஈச்வரீம் ஸர்வபூதாநாம்) இத்யாதிப்ரமாணஸித்தங்களான ஸர்வவ்யாபகத்வ நியந்த்ருத்வங்களாலே பிராட்டிக்கு ஜீவஜாத்யநந்தர்ப்பாவம் ஸாதிக்

கலாமிறே. எங்ஙனேயென்னில்: “நேயமாத்மஜாத்யந்தர்ப்பூதா। குத:? ஸர்வவ்யாபகத்வாத், ஸர்வ நியந்த்ருவாத்। யதா ஈச்வர:, ததாசேயம்; தஸ்மாத் ததேதி” என்று பஞ்சாவயவமான அநுமானத்தாலே ஆத்மதத்வாऽந்யத்வம் ஸாதித்து, அத ஏவ தஜ்ஜாதீயத்வாऽऽகதாணுத்வம் நிவ்ருத்தமாகையாலும், “ஸ்ரிய: பதியே ஸர்வவ்யாபக வஸ்து” என்று அங்கீகரிக்கவேண்டுகையாலும், நிரூப்யநிரூபகாऽவிநாபாவஸம்பந்தநிபந்தனமாக நிரூப்யஸ்வரூபத்துக்கு உண்டான விபுத்வம் தந்நிரூபகஸ்வரூபத்துக்கும் அவர்ஜநீயமாய்க்கொண்டு தன்னடையே வருகையாலும், இவளுக்கும் ஸ்வரூபதோவிபுத்வம் ந்யாயத: ப்ராப்தமாகையாலே அணுத்வபக்ஷம் அயதார்த்தமிறே என்னில்:

மைவம்; இவ்விடத்தில் த்ருஷ்டாந்தயுக்ததார்ஷ்டாந்திகங்கள் ஸத்ருஶங்களன்றிறே. ஸ்வரூபவிபுத்வத்தாலும், ஸர்வநியந்த்ருத்வத்தாலுமிறே ஸர்வேச்வரனுக்கு ஜீவாந்யத்வத்தை ஸாதித்தது. தார்ஷ்டாந்திகத்தில் அந்த ஹேதுத்வயம் இல்லையிறே. எங்ஙனேயென்னில்: பிராட்டிக்கு ஆத்மஜாத்யநந்தர்ப்பாவஸாதகங்களாகச் சொன்ன ஹேதுத்வயத்தில் ப்ரதமஹேது விக்ரஹவ்யாப்தி விஷயமாகையாலே ஸ்வரூபாஸித்தம். அங்கு விக்ரஹவ்யாப்தியைச் சொல்லுகிறது என்கைக்கு த்யோதகமென்னென்னில்: 331. (க்ஷீரோதாச்சீஸ் ஸமுத்பந்நா ச்ரூயதேऽம்ருதமந்தநே। ப்ருகோ: க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யேதாஹ கதம் பவாந்॥) என்று * செழுங்கடலமுதினிற் பிறந்தாளென்றும், ப்ருகுபத்னியான க்யாதியினிடத்தில் பிறந்தாளென்றும், பராஶரபகவான் உபதேஶிக்கக்கேட்ட மைத்ரேயபகவான் நித்யையான லக்ஷ்மிக்கு உத்பத்திமத்த்வம் உண்டானல் நித்யத்வம் கூடும்படி எங்ஙனேயென்று ப்ரச்னம் பண்ண, அதற்கு உத்தரமாக, 19. (நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ। யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம॥) என்று உபதேஶித்தான். அதெங்ஙனே யென்னில்: “* நித்யாநாம் நித்யனாய், * அவ்யய: பிதாவான ஸர்வேச்வரன் ஸாதுபரித்ராணார்த்தமாக ஸர்வஜாதியிலும் அவதரித்து † “ தமருகந்ததெவ்வுருவமவ்வுருவந்தானே ”, ‡ “ உமருகந்துகந்த உருவம் நின்னுருவம்” என்கிறபடியே ஆச்ரிதருகந்த அவ்வோ திரு

---

† முத-திருவ-44. ‡ திருவாய் (8-1-4)

மேனிகளாலே ஸர்வதேஶஸர்வகாலஸர்வாऽவஸ்தைகளிலும் யாதொரு படி ஸந்நிஹிதனுகிறான், அப்படியே, நித்யையாய், ஜகன்மாதாவாய் விஷ்ணுவுக்கு ஸம்பத்ரூபையாய், அநபாயினியாயிருக்கிற இவளும் மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யத்தாலே அவதரித்து, தத்ரூபானுரூபங்களான அவ்வோ ரூபவிஶேஷங்களாலே ஸர்வத்ர ஸந்நிஹிதையாயிருக்கும். ஆகையால் உத்பத்திமத்த்வம் நித்யத்வபஞ்ஜகமன்று; கர்மக்ருதோத்பத்தியாகிலிறே தோஷாயவாவது; "அனுக்ரஹார்த்தமான அவதாரம் குணயவாமித்தனை" என்று ப்ரதிவசனம் பண்ணுகையாலே ஸர்வவ்யாபித்வவசனம் அர்த்தாந்தரவிஷயம். இவ்வளவன்றிக்கே, 332. (புநச்ச பத்மா ஸம்பூதா ஹ்யாதித்யோऽபூத் யதா ஹரி:। யதா து பார்க்கவோ ராமஸ் ததாऽऽஸீத்தரணீ த்வியம்॥ ராகவத்வேऽபவத் ஸீதா) இத்யாதிகளாலே மேலும் இந்த விக்ரஹவ்யாப்தியே ப்ரதிபாதிக்கப்பட்டதிறே. 333. (ஸௌம்யாஸௌம்யைர் ஜகத்ரூபைஸ் த்வயைதத்தேவி பூரிதம்) என்று மேலே விவரிக்கையாலே 334. (த்வயைதத் விஷ்ணுநா சாம்ப! ஜகத் வ்யாப்தம் சராசரம்) என்கிறதும் விக்ரஹவ்யாப்திவிஷயம். ஆகையாலே இவளுக்கு ஸ்வரூபவ்யாப்தி பரிஹாரேண விக்ரஹவ்யாப்தியே உள்ளதென்று நிர்ணீதமாய்த்து.

கிஞ்ச, இருவர்க்கும் ஸ்வரூபவ்யாப்தியைச் சொல்லில், 335. (தேவதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா பகவாந் ஹரி:। ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய! நாऽநயோர் வித்யதே பரம்। அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ) என்ற விபூதிவிபாகவிரோதம் ப்ரஸங்கிக்கும். த்விதீய ஹேதுவான ஸர்வநியந்த்ருத்வம் பாகஶஸித்தமாகையாலே ஸாத்ய ஸாதகஸத்தேதுவன்று. எங்ஙனேயென்னில்: ஸகலபுருஷநியந்த்ருத்வத்தையிறே அங்கு புருஷதத்வாந்யத்வ ஸாதகமாகச் சொல்லிற்று. அந்த ஸர்வநியந்த்ருத்வம் இவளுக்குக் கூடாதிறே. ஏகோநநியந்த்ருத்வமிறே இவளுக்கு உள்ளது; அதுதன்னிலும் அந்த: ப்ரவிஶ்ய நியந்த்ருத்வமில்லையிறே. தாவந்மாத்ரத்தாலே ஆத்மஜாத்யநந்தர்ப்பாவம் கொள்ளும்போது ஸர்வர்க்கும் அபும்ஸ்த்வம் ப்ரஸங்கிக்கும்; ஸ்வஶரீரமாத்ரத்துக்கும் அநீஶனாயிருப்பானொருவன் இல்லையிறே. ஆக, இப்படி ஆத்மதத்வாऽந்யத்வஸாதகங்களான ஹேதுத்வயமும் அஸித்தங்களாகையாலேயும், நிரூப்யநிரூபகங்களுக்கு அவிநாபாவம்

உண்டாகிலும், லக்ஷ்மீஸ்வரூபநிரூபிதபகவத்ஸ்வரூபத்துக்கே வ்யாப்தி சொல்லுகையாலே ஜீவதத்வாந்தர்ப் பூதையாய், தஜ்ஜாதீயத்வேந ப்ராப்தமான அணுத்வத்தை ஸ்வரூபமாக உடைய இவளுக்கு ஸ்வரூபதோ விபுவான ஈச்வரனைப்போலே ஸ்வரூபவ்யாப்தியில்லையென்று நிர்ணயிக்கப்பட்டது. ஆகில், "யத்ப்ரஹ்ம ரூபம் தத்தே அநுரூபரூபவிபவைர் காடோபகூடாநி" என்று ஸர்வவ்யாபகஸ்வரூபத்தோடே தந்நிரூபகபூதையான லக்ஷ்மீஸ்வரூபத்துக்கு அவிநாபாவஸம்பந்தம் சொல்லுகையாலே, * ஸந்நியோக விசிஷ்டந்யாயஸித்தமான ஸ்வரூபவிபுத்வம் இவ்விடத்தில் சேரும்படி எங்ஙனேயென்னில்: இப்படி அநுபபத்யமாநார்த்த தர்சனத்தாலே உபபத்யமாநார்த்தாந்தரத்தைக் கல்பிக்கையாகிற அர்த்தாபத்திப்ரமாணஸித்தமான அகடிதகடநாசக்தியாலே, அணுஸ்வரூபையாயிருக்கவும், விபுவான ஈச்வரஸ்வரூபத்தோடே பரிஸமாப்ய வ்யாபித்திருக்கையை இவ்விடத்தில் சொல்லுகையாலே விரோதமில்லை. எங்ஙனேயென்னில்: 335. (மஹதோ மஹீயாந்) என்னும்படி அதிமஹத்தத்வமான ஈச்வரன், 335. (அணோரணீயாந்) என்கிறபடியே அணீயாநாம் அணீயனைக் கொண்டு அணுவ்யக்திகள் தோறும் அஸங்குசிதமர்க நிரங்குசைச்வர்யத்தோடே தன்னுடைய அகடிதகடநாசக்தியாலே, பரிஸமாப்ய வர்த்திக்குமாப்போலே, தத்ஸ்வரூபநிரூபகபூதையான இவளும் அணுவாயிருக்கவும் நிரூப்யவஸ்து வ்யாபித்து நிற்குமிடமெங்கும், 51. (ஈச்வரீம்) என்று ச்ருதிப்ரஸித்தமான தன்னுடைய அகடிதகடநாசக்தியாலே வ்யாபித்து விபுவாயிருக்கை இவ்விடத்தில் விவக்ஷிதமாகையாலே விரோதமில்லையிறே. ஆகையாலே ஸ்வரூபதோ விபுவான ஈச்வரதத்வவ்யாவ்ருத்தியும், கேவலம் குணதோ விபுவான ஆத்மதத்வவ்யாவ்ருத்தியும், சைதந்யாSநாதாரமான அசித்தத்வவ்யாவ்ருத்தியும், பகவத்ஸ்வரூபாநுரூபத்வமும், அதிசயிதஸ்தோத்ரமும் ஸித்திக்குமிறே. ஆனுரூப்யமாவது:--325. (ஈசதே தேவ ஏக:) 336. (ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்) என்கிற தத்ஸ்வரூபத்துக்கு அநுரூபமாக, 168. (அஸ்யேசாநா), 51. (ஈச்வரீம் ஸர்வபூதாநாம்) என்னும்படியிருக்கையிறே உசிதம். அதவா, அவனுடைய ஸத்தை ஏதததீனையாய், இவளுடைய ஸத்தை தததீனையாயிருக்கை அந்யோந்யாநுரூபத்வமாகவுமாம். எல்லாப்படியாலும், § "உனக்கேற்கும்" என்னும்படி * துல்யசீலையாயிருக்கையிறே ஆனுரூப்யமாவது.

---

§ திருவாய் (10-10-6).

நநு, விபுவான ஸர்வேச்வரன், அகடிதடநாஸாமர்த்யத்தாலே அணுஸ்வரூபனுய்க்கொண்டு அணுவ்யக்திகள்தோறும் ஜாதிவத் வ்யாபித்திருக்குமாப்போலே, இவளும் அணுவாயிருக்கவும் அகடிதகடநாஶக்தியாலே விபுவாய்க்கொண்டு வ்யாபித்திருக்குமென்கிறவிடத்தில் த்ருஷ்டாந்தம் கூடாது. எங்ஙனேயென்னில்: விபுவான ஈச்வரனுக்கு உபாத்யவச்சேதமாத்ரத்தாலேயிறே அணுத்வ விபுத்வங்கள் சொல்லுகிறன. ஸ்வரூபத: அணுத்வம் சொல்லவொண்ணுதிறே. அகடிதகடநாஶக்தியாலே அணுத்வமஹத்த்வரூபவிருத்தஸமுச்சயம் கூடுமென்னில்: அப்போது ஸர்வாத்வைத பேதாபேதபக்ஷங்களும் அங்கீகார்யங்களாமிறே. ஆகையாலே ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது:—ஒரொரு உபாத்யவச்சிந்நப்ரதேஶமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஶக்தியை உடைத்தாயிருக்கை. இங்ஙனன்றிக்கே, அந்தர்வ்யாப்தியை ஸ்வரூபஸமாப்ய வ்யாப்தி என்று அங்கீகரிக்கும்போது, பஹிர்வ்யாப்தி சேராது. கிஞ்ச, நிரவயவமான ஆத்மாவுக்கு ஷட்பாவராஹித்யத்தாலே உள்ளென்றும் புறம்பென்றும் ஒரு வ்யவஹாரம் கூடாமையாலே, அந்தர்வ்யாப்தியே அநங்கீகார்யம். ஆகையாலே பகவதந்தர்வ்யாப்தித்ருஷ்டாந்தபலத்தாலே லக்ஷ்மீவிபுத்வம் அஸாத்யம்.

கிஞ்ச, ஸ்வரூபவ்யாப்தியும் விக்ரஹவ்யாப்தியுமின்றிக்கே, அகடிதகடநாஶக்தியாலே அணுஸ்வரூபையாயிருக்கவும், விபுவோடே வ்யாபித்திருக்குமென்னில்,ஸ்வரூபவிகாரித்வம் அங்கீகரித்ததாய்விடும். அப்போது ஆத்மநிர்விகாரத்வப்ரதிபாதகப்ரமாணங்களுக்கு விரோதம் ப்ரஸங்கிக்கும். ஆனபின்பு லக்ஷ்மீஸ்வரூபவிபுத்வமே அங்கீகார்யம். ஜீவத்வேऽபி விபுத்வாங்கீகாரத்திலும், "அணுத்வே ஸதி சேதநத்வம்" என்கிற ஜீவலக்ஷணத்துக்கு அவ்யாப்த்யதிவ்யாப்திதோஷபரிஹாரார்த்தமாக, அணுசேதநத்வம் ஏதத்வ்யதிரிக்தஜீவவிஷயம். பரதந்த்ரசேதனத்வம ஏதல்லக்ஷணமென்றும், ஸ்வதந்த்ரசேதனத்வம் ஈச்வரலக்ஷணமென்றும் லக்ஷணபேதம் கல்பிக்கலாமிறே. அன்றிக்கே ஜீவலக்ஷணத்தில் அணுஶப்தம் பரிச்சிந்நமாத்ரபரமாய், பகவத்பராதீனையான இவள் விஷயத்தில் ஸ்வதந்த்ரகுண பரிச்சேதேந வர்த்திக்கிறதாகவுமாம். அதாவது:—ஸ்வரூபதோ நிரதிஶயத்வேऽபி பாரதந்த்ர்யாதியோகத்தாலே குணதஸ்ஸாதிஶய யுக்தையாயிருக்குமென்றபடி. இத்தால், ஸ்வரூபத்தாலும், குணத்தாலும், ஸாதிஶய

தேனைவ யுக்த: ப்ரவணுதிவோதகம்
யதா நியுக்தோऽஸ்மி ததா வஹாமி ||

[நாராயணன் ஒருவனே நியமிப்பவன்; நியமிப்பவர் வேறில்லை; எந்த பகவான் ஹ்ருதயத்தில் எழுந்தருளியிருக்கிறானே அவனையே நான் சொல்லுகிறேன். ஜலம் பள்ளத்தை நோக்கி ஓடுவதுபோல், அவனுடன் சேர்ந்தவனாய் அவன் ஏவின வேலையைத்தாங்கிச் செல்லுகிறேன்.]

170. விச்வஸ்ய பர்த்ரீ ஜகத: ப்ரதிஷ்டா

[உலகிற்கு ஸ்வாமினியாகவும், ஆதாரமாகவும்இருப்பவள்.]

171. 146-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

172. ஸ்வஸ்தி ஶ்ரீர் திஶதாதஶேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீ:
ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வம் ச குர்வந்ஹரி: |
யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தேऽகிலம்
க்ரீடேயம் கலு நாந்யதாऽஸ்ய ரஸதா ஸ்யாதைகரஸ்யாத் தயா ||

[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்கநரக மோக்ஷங்களைக் கொடுப்பதையும் செய்யும்போது பகவான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கிதத்திற்கு வசப்பட்டவனாய் எல்லாக்காரியங்களையும் செய்கிறானோ, அந்தப் பிராட்டி (நமக்கு) மங்களத்தை அளிக்கட்டும்; பகவான் அவளுடன் ஒரே அபிப்ராயத்தை உடையவனாயிருக்கிறபடியால், அவளுடைய இங்கிதபராதீனனாகக் காரியங்களைச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.]

173. ராமஸ்ய தயிதா பார்யா நித்யம் ப்ராணஸமா ஹிதா

[ராமனுக்குப் பிரியபத்தினியாகவும் எப்போதும் அவனுடைய ப்ராணனைப்போல் நன்மையைச் செய்பவளாகவுமிருப்பவள் ஸீதை.]

174. அநுகலதநுகாண்டாலிங்கநாரம்பஶம்பத்-
ப்ரதிதிஶபுஜஶாக ஶ்ரீஸகாநோகஹார்த்தி: |
ஸ்தந நயந குளுச்ச ஸ்பாரபுஷ்பத்விரேபா
ரசயது மயி லக்ஷ்மீகல்பவல்லீ கடாக்ஷாந் ||

[க்ஷணந்தோறும், (பிராட்டியினுடைய) கொம்புபோன்ற சரீரத்தினுடைய ஆலிங்கனத்தின் ஆரம்பத்தினால், நாலுதிக்குகளிலும் விளங்கா

170. யஜு-காட (3-3). 172. ஶ்ரீஸ்தவம்-1. 173. ரா-பா (1-26). 174. ஶ்ரீகுண-3.

நிற்கிற திருக்கைகளாகிற கிளைகளையுடைய லக்ஷ்மீநாதனாகிற வ்ருக்ஷத்தின் செல்வத்தையுடையவளும், பூங்கொத்துகள் போன்ற திருமுலைத்தடங்களையும், மலர்ந்தபுஷ்பங்களிலுள்ள வண்டுகள்போன்ற திருக்கண்களையும் உடையவளுமான கற்பகக்கொடிபோன்ற லக்ஷ்மியானவள் என்னிடத்தில் கடாக்ஷங்களைப் பொழியட்டும்.]

175. லக்ஷ்மீகல்பலதோத்துங்கஸ்தநஸ்தபகசஞ்சல: ।
ஸ்ரீரங்கராஜப்ருங்கோ மே ரமதாம் மாநஸாம்புஜே ॥

[பிராட்டியாகிற கற்பக்கொடியிலுள்ள உன்னதமான திருமுலைத் தடமாகிற பூங்கொத்தில் வட்டமிடாநிற்கும் ஸ்ரீரங்கநாதனாகிற வண்டு அடியேனுடைய நெஞ்சக் கமலத்தில் விளையாடக்கடவது.]

176. ராஜஸம்ச்ரயவஸ்யாநம் குர்வந்தீநாம் பராஜ்ஞயா ।
விதேயாநாம் ச தாஸீநாம் க: குப்யேத் வாநரோத்தம ॥

[வாநரச்ரேஷ்டனே! ராஜாவுக்குப் பரதந்திரர்களும், அவனுடைய ஆஜ்ஞையினால் (எனக்குத் துன்பத்தைச்) செய்பவர்களும், அவனுக்கு வசப்பட்டவர்களுமான தாஸிகளிடத்தில் எவன் கோபிப்பான்?.]

177. மாதர் மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ்த்வயா
ரக்ஷந்த்யா பவநாத்மஜால் லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா ।
காகம் தஞ்ச விபீஷணம் ஶரணமித்யுக்திக்ஷமௌ ரக்ஷத:
ஸா நஸ் ஸாந்த்ரமஹாகஸஸ் ஸுகயது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ ॥

[தாயே மைதிலி! அப்போதே அபராதம் செய்த ராக்ஷஸிகளை ஹநுமானிடமிருந்து ரக்ஷித்த உன்னாலே, காகாஸுரனையும், விபீஷணனையும் சரணம் என்னும் வார்த்தையைச் சொன்னபிறகு ரக்ஷித்த ராமனுடைய கோஷ்டியானது சிறிதாக்கப்பட்டது. அப்படிப்பட்ட உன்னுடைய நிர்ஹேதுகக்ருபையானது பெரும்பாவிகளான எங்களையும் ஆநந்திப்பிக்கட்டும்.]

178. ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம் ।
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் ॥

[பூமியில் விழுந்தவனும், சரணமடைந்தவனுமான அந்தக் காகாஸுரனை, கொல்லத்தகுந்தவனாயிருந்தபோதிலும், சரணமடையத் தகுந்தவனான ராமபிரான் (தன்) அருளாலே ரக்ஷித்தான்.]

---

175. ர-ஸ்த (1-10). 176. ரா-யு (116-38). 177. ஸ்ரீகுண-50.
178. ரா-ஸு (38-35)

179. ஸ்வார்த்தநிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா தயா
[தன் பிரயோஜனத்தை எதிர் பாராமல் பிறர் துக்கத்தைக் கண்டு பொறுமலிருக்கை தயையாகிறது.]

180. தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்ப்பலா
[(அவர்களுடைய கண்கலங்கக் காணமாட்டாத) துர்ப்பலையான நான் ராவணனுடைய தாஸிகளாகிற இவர்களை மன்னிக்கிறேன்.]

181. தர்மநித்யே மஹாபுத்தௌ ப்ரஹ்மண்யே ஸத்யவாதிநி।
ப்ரச்ரிதே தாநசீலே ச ஸதைவ நிவஸாம்யஹம் ॥
[தர்மத்தில் எப்போதும் ஈடுபட்டிருப்பவன், மஹாபுத்திமான், ப்ரஹ்மவித், ஸத்யவாதி, வணங்கியவன், தானசீலன் ஆகிய இவர்களிடம் நான் எப்போதும் வஸிக்கிறேன்.]

182. புண்யாபுண்யாவீச்வரப்ரீதிகோபௌ
[புண்யம், பாபம் என்பது ஈச்வரனுடைய ப்ரீதிகோபங்களேயாகும்.]

183. பத்மே ஸ்திதா பத்மவர்ணா பத்மநாபப்ரியா சுபா।
ஸதாऽநுக்ரஹஸம்பந்நா ஸா தேவீ மே ப்ரஸீதது ॥
[தாமரையிலிருப்பவளாய், தாமரைநிறத்தாளாய், தாமரையுந்தியான் மனைவியாய், மங்களாகாரையாய், எப்போதும் அருள் நிரம்பியவளான அந்த தேவி என்னிடம் அருள்புரியட்டும்.]

184. அநுக்ரஹபராம் ருத்திமநகாம் ஹரிவல்லபாம்।
நமாமி கமலாம் காந்தாம் க்ஷமாம் க்ஷீரோதஸம்பவாம் ॥
[அருள் நிரம்பியவளாய், செல்வமாயிருப்பவளாய், பாபமற்றவளாய், ஹரிக்குப் பிரியையாய், கமலையாய், காந்தையாய், பொறுமையாய், பாற்கடலிலுதித்தவளான பிராட்டியை நமஸ்கரிக்கிறேன்.]

185&186. தேவராஜ தயாஸிந்தோ தேவதேவ ஜகத்பதே।
த்வதீக்ஷண ஸுதாஸிந்துவீசிவிக்ஷேப சீகரை: ॥
காருண்யமாருதாநீதை: சீதலைரபிஷிஞ்ச மாம் ॥
[தேவராஜனே! கருணைக்கடலே! தேவதேவனே! ஜகத்பதியே! (துக்கங்களில் தவிக்கும்) அடியேனை, காருண்யமாகிற காற்றினால் கொண்டு வரப்பட்டவையும், குளிர்ந்தவையுமான உன்னுடைய கடாக்ஷாம்ருத நதீப்ரவாஹத் திவலைகளினால் நனைத்தருள வேணும்.]

---

179. ஸ்ரீபாஷ்யம். 180. ராயு (116-41). 183. மங்கணஸம்ஹிதை.
184. லக்ஷ்மீ-அஷ்டோத்தரசதம்-4. 185&186. திருக்கச்சி நம்பிகள் அருளிய தேவராஜாஷ்டகம்-8.

187. க்ஷீரோதாச் ச்ரீஸ் ஸமுத்பந்நா ச்ரூயதேऽம்ருதமந்தநே।
ப்ருகோ: க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யேததாஹ கதம் பவாந்॥

[அம்ருதமதனகாலத்தில் பாற்கடலிலிருந்து ஸ்ரீ தேவி உண்டானதாகக் கேள்விப்படுகிறேன். ப்ருகுவுக்கு, கியாதிஎன்னும் பத்தினியிடம் பிராட்டியுண்டானதாகத் தாங்கள் சொல்லுவது எப்படி?]

188. திவ்யமால்யாம்பரதரா ஸ்நாதா பூஷணபூஷிதா।
பச்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ: ஸ்தலம் ஹரே:॥

[திவ்யமான மாலைகளையும், வஸ்திரங்களையும் தரித்தவளாய், ஸ்நானம் செய்தவளாய், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவளான பிராட்டி எல்லாத் தேவர்களும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே எம்பெருமானுடைய திருமார்பை அடைந்தாள்.]

189. த்வயா தேவி பரித்யக்தம் ஸகலம் புவநத்ரயம்।
விநஷ்டப்ராயமபவத் த்வயேதாநீம் ஸமேதிதம்॥

[தேவியே! உன்னால் கைவிடப்பட்ட மூவுலகு முழுவதும் நசித்துக் கிடந்தது. இப்போது உன் அருளாலே உஜ்ஜீவித்தது.]

190. ப்ரஹ்மாத்யாச்ச ஸுராஸ் ஸர்வே முநயச்ச தபோதநா:।
ஏதந்தே த்வத்பதச்சாயாமாச்ரித்ய கமலேச்வரி॥

[கமலையே! பிரமன் முதலான எல்லாத்தேவர்களும், தவத்தையே தனமாகக்கொண்ட முனிவர்களும் உன் திருவடிநிழலை அண்டி உஜ்ஜீவிக்கிறார்கள்.]

191. யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீச்வராணாம்
ஐச்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத்।
தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம்ச்ரயணாந் நிராஹு:
த்வாம் ஹி ச்ரிய: ச்ரியமுதாஹுருதாரவாச:॥

[யாவளொரு பிராட்டியின் கடாக்ஷமானது, இந்திரன் முதலிய தேவர்களுக்கும் க்ஷணந்தோறும் ஐச்வர்யஹேதுவாகிறதென்பது ஸர்வஜநஸம்மதமானதோ, அந்தப் பிராட்டியை தேவரீரிடத்தில் ஆச்ரயித்திருப்பது காரணமாகவே ஸ்ரீயென்று நிருக்தி கூறுகின்றார்கள். உதாரவாக்குகளான திருமங்கையாழ்வார், ஆளவந்தார் போல்வாரும் தேவரீரையன்றோ திருவுக்கும் திருவாகிய செல்வனென்கிறார்கள்.]

---

187. வி. பு. (1-8-16). 188. வி. பு. (1-9-105). 189. வி. பு. (1-9-123). 190. காச்யபீயம். 191. வை-ஸ்த-29.

192. ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே ஆபஸ் தேஜஸி லீயதே,
தேஜோ வாயௌ லீயதே, வாயுராகாஶே லீயதே,
ஆகாஶமிந்த்ரியேஷு, இந்த்ரியாணி தந்மாத்ரேஷு,
தந்மாத்ராணி பூதாதௌ லீயந்தே, பூதாதிர் மஹதி
லீயதே, மஹாநவ்யக்தே லீயதே, அவ்யக்தம்
அக்ஷரே லீயதே, அக்ஷரம் தமஸி லீயதே, தம:
பரே தேவ ஏகீபவதி ॥

[பூமி ஜலத்தில் லயிக்கிறது; ஜலம் தீயில் லயிக்கிறது; தீ வாயுவில் லயிக்கிறது; வாயு ஆகாசத்தில் லயிக்கிறது; ஆகாசம் இந்திரியங்களுடனும், இந்திரியங்கள் (சப்த) தன் மாத்ரையுடனும் (சேருகின்றன.) தன் மாத்ரம் பூதாதியென்னும் (தாமஸ) அஹங்காரத்தில் லயிக்கிறது; அஹங்காரம் மஹானில் லயிக்கிறது; மஹான் அவ்யக்தத்தில் லயிக்கிறது; அவ்யக்தம் தமஸ்ஸில் லயிக்கிறது; தமஸ்மேலான தேவனிடம் ஒன்றுகிறது.]

193. ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம் ।
அப்ரதர்க்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வதா ॥........
ஸோऽபித்யாய ஶரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: ।
அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு பீஜமவாஸ்ருஜத் ॥
ஸோऽபித்யாய ஶரீராத்ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: ।
அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு பீஜமவாஸ்ருஜத் ॥

[இவ்வுலகம் தமஸ்ஸில் லயித்திருப்பதாய், ப்ரத்யக்ஷமாயில்லாததாய், அநுமானத்தாலும் அறியப்படாததாய், தர்க்கத்தாலும் அறியப்படாததாய், (சப்தத்தாலும்) அறியப்படாததாய், எல்லாவிதத்திலும் காரியம் செய்யமுடியாததாய் (ஆதியில்) இருந்தது..... அந்தப்பரமாத்மா வித விதமான ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க விரும்பி ஸங்கல்பித்துத் தன் சரீரத்திலிருந்து ஜலத்தை முதலில் ஸ்ருஷ்டித்தார். அதில் (ஜீவனுகிற) விதையை விதைத்தார்.]

194. தத் ஸ்ருஷ்ட்வா । ததேவாநுப்ராவிஶத் ।

[அந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தவுடன் (அந்த ப்ரஹ்மம்) அதை வியாபித்தது.]

195. ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி ।
கலா முஹூர்த்தா: காஷ்டாஶ்ச அஹோராத்ராஶ்ச ஸர்வஶ: ॥

---

192. ஸுபால-2. 193. மநு (1--5&8) 194. தை-ஆந-6. 195. தை-நா (1-8)

[மின்னலைப்போன்ற உருவையுடைய புருஷனிடமிருந்து எல்லா நிமிஷங்களும், கலைகளும், முகூர்த்தங்களும், காஷ்டைகளும், இராப்பகல்களும் ஆகிய காலதத்வமெல்லாம் உண்டாயின.]

196. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே।
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரோ
நாமாநி க்ருத்வாऽபிவதந் யதாஸ்தே॥

[ஆதித்யவர்ணனாய், ப்ரக்ருதிக்கப்பால் எழுந்தருளியிருப்பவனாய், ஸர்வஜ்ஞனாய், எல்லா நாமரூபங்களையும் படைத்து அவற்றை உச்சரித்துக்கொண்டு எழுந்தருளியிருப்பவனான இந்த மஹாபுருஷனை நான் அறிகிறேன்.]

197. ஸேயம் தேவதைக்ஷத। ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா
அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி।

[அப்படிப்பட்ட இந்த தேவதை "நான் (நெருப்பு, நீர், பூமி) என்னும் இந்த மூன்று தேவதைகளையும், என்னுருவாயிருக்கும் ஜீவனால் வியாபித்து நாமரூபங்களைச் செய்யக்கடவேன்" என்று ஸங்கல்பித்தது.]

198. ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத் தேஜோऽஸ்ருஜத
தத்தேஜ ஐக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி
ததபோऽஸ்ருஜத।....தா ஆப ஐக்ஷந்த....

[அந்தப் பரப்ரஹ்மம் 'நானே பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டிசெய்தது. தேஜஸ்ஸை சரீரமாகக்கொண்ட அந்த ப்ரஹ்மம் 'நான் பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது. அது ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. ஜலத்தை சரீரமாகக்கொண்ட அந்த ப்ரஹ்மம் ஸங்கல்பித்தது.]

199. யத்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்திரசரரசநா தாரதம்யே முராரே:
வேதாந்தாஸ் தத்த்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி।
போகோபோத்காதகேளீ சுளகிதபகவத் வைச்வரூப்யாநுபாவா
ஸா ந: ஶ்ரீராஸ்த்ருணீதாமம்ருதலஹரி தீ லங்கநீயரபாங்கை:॥

[பகவானுடைய ஸ்தாவரஜங்கம ஸ்ருஷ்டியிலுள்ள ஏற்றத்தாழ்வுக்கு எவளுடைய புருவநெறிப்புகள் காரணமோ, உபநிஷத்துக்கள் முராரியின் திருமார்பில் எவளுடைய திருவடியடையாளங்களைக்

196. புருஷஸூக்தம் (1-16) 197. சாந்-உப (6-3-2) 198. சாந்-உப (6-2-3,4) 199. ஶ்ரீகுண-4.

கண்டு பரதத்வ விசாரத்தை முடிக்கின்றனவோ, போகத்தின் ஆரம்ப தசையிலுள்ள விளையாட்டுகளினாலேயே அல்பமாகச் செய்யப்பட்ட பகவானுடைய விச்வரூபப்ரபாவத்தையுடையவளான அந்தப் பிராட்டியானவள், அம்ருதப்ரவாஹம் என்றெண்ணத்தக்க தன் கடாக்ஷங்களாலே நம்மை முழுகச்செய்யட்டும்.]

200. ஸ்ரீயை ஸமஸ்தசிதசித் விதாநவ்யஸநம் ஹரே: ।
அங்கீகாரிபிராலோகைஸ் ஸார்த்தயந்த்யை க்ருதோஞ்ஜலி: ॥

[ஸகல சேதநாசேதநங்களையும் படைப்பதால் பகவானுக்குண்டாகும் சிரமத்தைத் தன் அங்கீகாரத்தைக் காட்டும் கடாக்ஷங்களாலே ஸபலமாகச் செய்கின்ற பிராட்டியின்பொருட்டு அஞ்ஜலியானது (அடியேனால்) செய்யப்பட்டது.]

201. உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீ-
நிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் ।
ஸ்ரீரங்கஹர்ம்யதலமங்களதீபரேகாம்
ஸ்ரீரங்கராஜமஹிஷீம் ஸ்ரியமாச்ரயாம: ॥

[ஏழுலகங்களையும் (பகவான்) படைத்தவுடன் தளிர்விடுவதாகவும், (அவனாலே) ரக்ஷிக்கப்பட்ட ஏழு உலகங்களின் நிர்வாஹத்தினால் மொட்டுவிடுவதாகவுமிருக்கிற அர்த்தகடாக்ஷலீலையை உடையவளும் திருவரங்க மாளிகைக்கு (ஒரு) மங்கள தீபக்கொழுந்துபோலிருப்பவளும், ஸ்ரீரங்கநாதனுடைய திவ்ய மஹிஷியானவளுமான ஸ்ரீதேவியை ஆச்ரயிக்கிறோம்.]

202. ஆவாப்யாம் கர்மாணி கர்த்தவ்யாநி । ப்ரஜாச்சோத்பாதயிதவ்யா: ।"

[(தம்பதிகளாகிய) நாமிருவரும் சேர்ந்து கர்மங்களைச் செய்யவேண்டும்; ப்ரஜைகளைப் பிறப்பிக்கவேண்டும்.]

203. 26-வது ப்ரமாணம் பார்க்க.

204. 27 ,, ,,

205. விஷ்ணோ: கடாக்ஷம்

[விஷ்ணுவின் கடாக்ஷம் (ஸத்வகுணத்தை யளிக்கவல்லது)]

206. ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதந: ।
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக: ॥

[பிறக்கும்போது எவனை மதுஸூதனன் காண்கிறானோ, அவன் ஸாத்விகனென்று அறியத்தக்கவன். அவனே மோபுருஷார்த்தத்தைச் சிந்திப்பவன்.]

---

200. ஸ்ரீகுண-1. 201. ஸ்ரீகுண-2. 205. பார-மோக்ஷ (?)
206. பார-சாந்தி (358-73).

206*. அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்
[தேவியின் மனம் பெருமாளிடமும், அவர் மனம் அவளிடமும் நிலைநிற்கிறது.]

207. ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹமுபாகதௌ ।
தந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந: ॥

["மேலான அருளை உடையவர்களும், ஸ்வாமியாயிருப்பவர்களுமான இந்த ராமக்ருஷ்ணர்கள் என்னுடைய வீட்டிற்கு வந்திருக்கிருர்கள்; நான் தன்யனுனேன்; (அவர்களைப்) பூஜிக்கிறேன்" என்று பூவைவிற்று வயிறுவளர்க்கும் மாலாகாரர் சொன்னுர்.]

208 & 209. அநர்த்தாக்யம் தநம் ப்ராப்ய மாத்யந்நுச்சைர் ந மாம் ஸ்மரேத்।
[அநர்த்தமென்னும் தனத்தையடைந்து மிகவும் மதமடைந்தவனுய் என்னை நினைப்பதில்லை.]

210. விஜ்ஞாநஸாரதிர் யஸ்து மந: ப்ரக்ரஹவாந் நர: ।
ஸோऽத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம் ॥

[எவனொருவன் நல்ல ஞானத்தை ஸாரதியாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் கொண்டிருக்கிருனே, அவன் ஸம்ஸாரத்திற்கு அக்கரையான விஷ்ணுவினுடைய பரமபதத்தை அடைகிருன்.]

211. புண்யச்ரேயஸீ ஸுக்ருதம் வ்ருஷ:
[புண்யம், ச்ரேயஸ், ஸுக்ருதம், வ்ருஷம் (தர்மம்) என்னும் நாலு பதங்களும் ஒரே பொருளையுடையவை.]

212. பத்மயோநிரிதம் ப்ராப்ய படந் ஸ்தோத்ரம் தத: பரம் ।
திவ்யம் சாஷ்டகுணைச்வர்யம் தத்ப்ரஸாதாச்ச லப்தவாந் ॥

[நாபிக்கமலத்திலிருந்து உண்டான நான்முகன் இந்த ஸ்தோத்ரத்தையடைந்து படித்து அதன்பின் திவ்யமான எட்டுவிதச் செல்வத்தையும் அப்பிராட்டியின் அருளாலே அடைந்தான்.]

213. ப்ரஹ்மாதீநாம் யதாயத்தம் வைபவம் யஸ்ய ஸா ஸ்வயம் ।
தஸ்ய கைமுத்யநிர்த்தார்யமீச்வரத்வம் ஸ்ரிய: பதே: ॥

[ப்ரஹ்மாதிகளுடைய வைபவம் எவளாலேயோ, அந்தப் பிராட்டி எவனுக்கு சேஷபூதையோ, அந்த ஸ்ரிய:பதியின் ஈச்வரத்வம் கிம்புநர்ந்யாயஸித்தம்.]

---

206*. ரா-ஸு (15-52) 207. வி. பு. (5-19-21) 210. கட (1-3-9)
212. ப்ராஹ்மபுராணம். 213. ப்ராஹ்மபுராணம் (?)

214. ஆருக்ராமநியாமகாதபி விபோரா ஸர்வநிர்வாஹகாத்
ஐச்வர்யம் யதிஹோத்தரோத்தரகுணம் ஸ்ரீரங்கபர்த்து: ப்ரியே।
துங்கம் மங்களமுஜ்ஜ்வலம் கரிமவத் புண்யம் புந: பாவநம்
தந்யம் யத் தததஞ்ச வீக்ஷணபுவஸ் தே பஞ்சஷா விப்ருஷ:॥

[ஸ்ரீரங்கநாதப்ரியே! அல்பக்ராமாதிகாரி முதல், ஸர்வலோகநிர்வாஹகனன பரமாத்மாவரையில் மேன்மேலும் உயர்ந்த யாதொரு ஐச்வர்யமுண்டோ அதுவும், யாதொன்று உயர்ந்ததாகவும், மங்களமாகவும், ஒளியுடையதாகவும், கனமுள்ளதாகவும், புண்யமாகவும், பாவனமாகவும், பாக்யபலபூதமாகவும் விளங்குகின்றதோ அந்தப் பொருள்களும் உம்முடைய கடாக்ஷத்திலுண்டான ஐந்தாறு திவலைகளாம்.]

115. ஏகோ முக்தாதபத்ரப்ரசலமணிகணுத்காரிமௌளிர் மநுஷ்யோ
த்ருப்யத் தந்தாவளஸ்தோ ந கணயதி நதாந் யத் க்ஷணம் க்ஷோணிபாலாந்।
யத் தஸ்மை திஷ்டதேऽந்ய: க்ருபணமஶரணோ தர்ஶயந் தந்தபங்க்திம்
தத் தே ஸ்ரீரங்கராஜப்ரணயிநி நயநோதஞ்சிதந்யஞ்சிதாப்யாம்॥

[ரங்கநாததேவியே! ஒரு மனிதன் கர்வங்கொண்ட யானையின்மேலிருந்துகொண்டும், முத்தும்யமான குடையில் அசைகின்ற மணிகளால் சப்திக்கிற கிரீடத்தையுடையவனுய்க் கொண்டும், தன்னை வணங்கின அரசர்களைக் கணப்போதும் கணிசிப்பதில்லை. மற்றெருவன், புகலற்றவனுய், தன் தீனத்தன்மை தெரியும்படி (அவனுக்குப்) பற்களைக் காட்டிக்கொண்டு நிற்கிறுன். இத்தாரதம்யம் முறையே உன்னுடைய திருக்கண்கள் (சிறிது) திறப்பதாலும் மூடுவதாலும் உண்டாகிறது.]

216. அம்ருதஸ்யைஷ ஸேது:

[(ஸம்ஸாரக்கடலின் அக்கரையான) மோக்ஷத்தை அடைய இந்த பகவானே அணை (உபாயம்) ஆவான்.]

217. ஸ ப்ரீதோऽலம் பலாய

[ப்ரீதியடைந்த பகவானே பலனைக் கொடுக்க சக்தன்.]

218. பலமத உபபத்தே:

[இந்தப் பரமபுருஷனிடமிருந்தே மோக்ஷபலம் உண்டாகிறது; (அதுவே) பொருந்தியதாகையால்.]

---

214. ஸ்ரீகுண-15. 215. ஸ்ரீகுண-16. 216. முண்ட (2-2-5)
217. த்ரமிடபாஷ்யம். 218. ப்ர-ஸூ (3-2-37)

**219.** ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் தநமிச்சேத் ஹுதாஶநாத் ।
ஈச்வராத் ஜ்ஞாநமந்விச்சேத் மோக்ஷமிச்சேத் ஜநார்த்தநாத் ॥

[*ஸூர்யனிடமிருந்து ஆரோக்யத்தை விரும்பக்கடவன்; அக்னியிடமிருந்து பொருளை விரும்பவேண்டும். ஈச்வரனிடமிருந்து ஞானத்தை விரும்பக்கடவன்; ஜநார்த்தனனிடமிருந்து மோக்ஷத்தை விரும்பக்கடவன்.*]

**220.** உபாதத்தே ஸத்தாஸ்திதிநியமநாத்யைஶ் சிதசிதௌ
ஸ்வமுத்திஶ்ய ஸ்ரீமாநிதி வததி வாகௌபநிஷதீ ।
உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம் ந து குணௌ
அதஸ் த்வாம் ஸ்ரீரங்கேஶய ஶரணமவ்யாஜமபஜம் ॥

[*ஹே ஸ்ரீரங்கநாதனே! 'ஸ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி, ஸ்திதி நியமனம் முதலிய காரியங்களால் சேதநாசேதனங்களைத் தனக்காக ஸ்வீகரிக்கிறான்' என்று உபனிஷத் வாக்யமானது சொல்லுகிறது. ஆகையால், இங்கு உபாயத்வமும், உபேயத்வமும் உனக்கு ஸ்வரூபம்; குணங்களல்ல. ஆகையால் உம்மை நிர்வ்யாஜமான உபாயமாக அடைந்தேன்.*]

**221.** லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ தேவ்யா காருண்யரூபயா ।
ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேஷு ச கீயதே ॥

[*காருண்யமே வடிவெடுத்த பிராட்டியுடன் கூடியே பகவான் ரக்ஷகனாகிறானென்று எல்லா ஸித்தாந்தங்களிலும், வேதாந்தங்களிலும் புகழப்படுகிறான்.*]

**222.** அர்த்தாத் ப்ரகரணால் லிங்காதௌசித்யாதர்த்தநிர்ணய:

[*அர்த்தத்திலிருந்தும், ப்ரகரணத்திலிருந்தும், அடையாளங்களிலிருந்தும், ஔசித்யத்திலிருந்தும் பொருளை நிர்ணயிக்கவேண்டும்.*]

**223.** 106-வது ப்ரமாணம் காண்க.

**224.** ஆஶம்ஸேயம் ஹரிச்ரேஷ்ட க்ஷிப்ரம் மாம் ப்ராப்ஸ்யதே பதி: ॥
அந்தராத்மா ச மே ஶுத்தஸ் தஸ்மிம்ஶ்ச பஹவோ குணா: ॥

[*வானரத்தலைவனே! என் கணவன் விரைவிலேயே என்னை அடைந்துவிடுவாரென்று எதிர்பார்க்கிறேன். என் மனம் (தன்னை ரக்ஷிக்கத் தான் முயற்சிசெய்வதாகிற) அசுத்தியற்றிருக்கிறது. அவனிடமும் குணங்கள் பலவுள்ளன.*]

---

**219.** *மாத்ஸ்யபுராணம்* (67-41) **220.** *ர-ஸ்த* (2-88) **221.** *லக்ஷ்மீ தந்த்ரம்* (28-14) **224.** *ரா-ஸு* (37-14)

225. யத்யபி ஸச்சித்தோ ந நிர்ப்புக்ணதைவதம் குணகணம்
மநஸாऽநுதாவேத், ததாப்யந்த்ர்க்குணமேவ தேவதாம் பஜதே,
தத்ராபி ஸகுணைவ தேவதா ப்ராப்யதே

[ஸத்தாகிற ப்ரஹ்மத்தை தியானிப்பவன் தேவனாகிற அந்த ப்ரஹ்மத்தை விட்ட குணஸமூஹத்தை மனஸ்ஸினாலே தியானிக்க முடியாவிடினும், குணங்களுடன் கூடிய தேவதையையே உபாஸிக்கிறான்; அதிலும் குணத்துடன் கூடிய தேவதையையே அடைகிறான்.]

226. ..........புவநபவந ஸ்தித்யபாயைகஹேதோ:
லக்ஷ்மீபர்த்துர் நரஹரிதநோர் தாஸதாஸஸ்ய தாஸ:॥

[உலகங்களைப் படைத்தளித்து அழிக்கும் ஒரே காரணபுருஷனாயிருக்கும் ஸ்ரிய: பதியான நரஸிம்ஹனுக்கு தாஸனுக்கும் தாஸனுக்கும் தாஸனாயிருக்கிறேன்.]

227. வைகுண்டே து பரே லோகே ஸ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:।
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ॥

[மேலான உலகமான வைகுண்டத்தில், ஜகத்பதியும், நினைக்கவொண்ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, பக்தர்களுடனும், பாகவதர்களுடனும் கூடியவராய் ஸ்ரீதேவியுடன் கூட எழுந்தருளியிருக்கிறார்.]

228. ஸர்வகாமப்ரதாம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம்।
க்ஷிப்ரப்ரஸாதிநீம் தேவீம் ஶரண்யாம் சிந்தயேதிதி॥

[எல்லா இஷ்டங்களையும் தருமவளும், அழகியவளும், ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டுவிப்பவளும், விரைவில் அருள் செய்யுமவளுமான பிராட்டியை சரணமடையத்தகுந்தவளாக நினைக்கக் கடவன்.]

229. ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயிநீ

[தேவியே! நீயே ஆத்மஜ்ஞானத்தைக் கொடுப்பவளாயும், முக்திபலத்தைக் கொடுப்பதையே இயற்கையாக உடையவளாயுமிருக்கிறாய்.]

230. ஸக்ருத் விபாதா ஸர்வார்த்தி ஸமுத்ரபரிஶோஷிணீ
பவபங்காபஹாரிணீ பரநிர்வாணதாயிநீ

[உடனே பிரகாசிப்பவள்; ஸமஸ்ததுக்கங்களாகிற ஸமுத்ரத்தையும் வற்றச்செய்பவள்; ஸம்ஸாரமாகிற தாழ்மையைப் போக்கடிப்பவள்;

---

225.த்ரமிடபாஷ்யம 226.பாகவதம்(?) 227.சைவபுராணம். 228.ஸ்வாயம்புவம். 229.வி.பு.(1-9-20). 230. ஸ்ரீஸஹஸ்ரநாமம்(87,122,23)

மேலான மோக்ஷத்தை அளிப்பவள் (என்பவை பிராட்டியின் ஆயிரம் திருநாமங்களிற் சில.]

231. ஆகிஞ்சந்யைகஶரணா: கேசித் பாக்யாதிகா: புந:
மத்பதாம்போருஹத்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீதமாநஸா: ॥
லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந ।
மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவ மாம் ॥
லப்த்வா க்ருதார்த்தா: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்யமாநஸா: ॥

[அழகிய முகத்தையுடைய சேநாபதியே! ஒரு கைம்முதலும் அற்றிருக்கையையே பற்றுசாகக் கொண்ட சில பாக்யசாலிகளோவென்னில், என் திருவடித்தாமரையிணையை அன்புடன் கூடிய மனத்தராய்ச் சரணடைந்து, லக்ஷ்மீதேவியைப் புருஷகாரமாகப் பற்றி, என் பொறுமைக்கு இலக்காகி, என்னையே ப்ராப்யப்ராபகங்களாக அடைந்து க்ருதார்த்தர்களாய், வேறொன்றிலும் நெஞ்சு செல்லப் பெறுதவர்களாய் என்னையே அடைவார்கள்.]

232. அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால் லக்ஷ்மீபதி: ஸ்வயம்।
லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லபா ப்ராப்தியோகிநீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிகமாந்தேஷு ஶப்த்யதே ॥

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன். என் பிரியையான லக்ஷ்மியானவள் புருஷகாரத்தினுல் என்னை அடைய உதவிபுரிகிறுள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதாந்தங்களில் சொல்லப்படுகிறது.]

233. மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத:।
லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி: ॥
மமாபி ச மதம் ஹ்யேதந் நாந்யதா லக்ஷணம் பவேத் ॥

[ஸம்ஸாரத்தில் கீழே விழுகின்ற ஜந்துக்களுக்கு என்னை அடையும் விஷயத்தில் லக்ஷ்மீதேவியானவள் பரமரிஷிகளாலே புருஷகாரத்வத்தில் நியமிக்கப்பட்டிருக்கிறுள், எனக்கும் இதுவே இஷ்டம். வேறுன (உபாயத்வமாகிற) ஆகாரம் இல்லை.]

234. தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாஶ்ச

[தர்மத்தையறிந்தவர்களுடைய ஆசாரம் (முக்கியமான) ப்ரமாணம். வேதங்களும் ப்ரமாணம்.]

---

231. விஷ்வக்ஸேநஸம்ஹிதை. 232. பாஞ்சராத்ரம். 233. பாஞ்சராத்ரம். 234. ஆபஸ்தம்பஸூத்ரம்.

235. யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜந:।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தததுவர்த்ததே ॥

[ஞானியானவன் எந்தெந்தக் கர்மங்களை அனுஷ்டிக்கிறானோ, அந்தந்தக் கர்மங்களையே (ஞானமற்ற) மற்ற மனிதனும் அனுஷ்டிக்கிறான். அந்த ஞானி கர்மங்களை எவ்வளவாக அனுஷ்டிக்கிறானோ, அவ்வளவையே லோகமும் அநுஷ்டிக்கிறது.]

236. த்ரயாணாம் பரதாதீநாம் ப்ராத்ரூணாம் தேவதா ச யா ।
ராமஸ்ய ச மந: காந்தா ப்ராணேப்யோऽபி கரீயஸீ

[பரதன் முதலான மூன்று ஸஹோதரர்க்கும் எந்தப் பிராட்டியானவள் தேவதையாயிருக்கிறாளோ, ராமனுக்கும் மநோவல்லபையாய், ப்ராணனைக்காட்டிலும் ப்ரியையாயிருக்கிறாளோ....]

237. சாந்தாநந்தம் சிதாநந்தம் யத் ப்ரஹ்ம பரமம் த்ருவம் ।
மஹாவிபூதி ஸம்ஸ்த்தாநம் ஸர்வதஸ் ஸமதாம் கதம் ॥

[ஆறு ஊர்மிகளுமற்றதாய், அளவற்றதாய், ஜ்ஞானாநந்தமயமாய், உயர்ந்ததாய், நிலையானதாய், பெரிய விபூதிகளையும், திருமேனியையும் உடையதாய், எங்கும் ஸமநிலையைப் பெற்றதானயாதொரு ப்ரஹ்மஸ்வரூபம் உண்டோ....]

238. அசநாயாऽபிபாஸே ச சோகமோஹௌ ஜராம்ருதீ ।
ஷடூர்மிபிர் விசுத்தா............॥

[பசி, தாகம், சோகம், மோகம், கிழத்தனம், மரணம் என்னும் ஆறு ஊர்மிகளற்றது.]

239. அபக்ஷய விநாசாப்யாம் பரிணாமர்த்திஜந்மபி:।
வர்ஜித: சக்யதே வக்தும் யஸ்ஸதாऽஸ்தீதி கேவலம் ॥

[குறைவுபடுதல், நாசமடைதல், மாறுபாடடைதல், வளருதல், பிறத்தல், இவைகளற்றவனாகவும், எப்போதும் 'இருக்கிறான்' என்றே சொல்லப்படுபவனாகவுமிருப்பவன் பகவான்.]

240. அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந....ஸ்வரூப
[தாழ்வு அனைத்துக்கும் எதிர்த்தட்டாகவும், மங்களங்களுக்கு ஒரே இருப்பிடமாகவுமிருக்கும் ஸ்வரூபத்தையுடையவன்.]

---

235. கீதை (3-21) 236. ரா-ஸு (55-26) 237. ல-த (17-5)
238. ச்ருதி. 239. வி. பு. (1-2-11) 240. ச-கத்யம் (5)

241. ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்பஸ் ஸோऽந்வேஷ்டவ்ய:

[எந்த ஆத்மாவானவன் பாபமற்றவனாகவும், கிழத்தனமற்றவனாகவும், ம்ருத்யுவற்றவனாகவும், ஶோகமற்றவனாகவும், பசியற்றவனாகவும், வீண் போகாத இஷ்டத்தையும் ஸங்கல்பத்தையுமுடையவனாகவும் இருக்கிறானோ அவன் தேடத்தக்கவன்.]

242. ஜ்ஞாநாநந்தமயம் யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:

[எந்தப் பரமாத்மாவின் ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தமயமாயுள்ளதோ....]

242*. யதா ஸைந்தவகநோऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்நோ ரஸகந ஏவ ஏவம் வா அரேऽயமாத்மாऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்ந: ப்ரஜ்ஞாநகந ஏவ

[எப்படி உப்புக்கட்டியானது வெளியிலும் உள்ளேயும் முழுவதும் ரஸம் நிறைந்துள்ளதோ, அப்படியே இந்த ஆத்மா வெளியேயும் உள்ளேயும் முழுவதும் ஞானமயமாகவேயுள்ளது.]

243. ஏதாவாநஸ்ய மஹிமா அதோ ஜ்யாயாம்ஶ்ச பூருஷ:। பாதோऽஸ்ய விச்வாபூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி ॥

[இவனுடைய மஹிமை இப்படிப்பட்டது. பரமபுருஷன் இதைக் காட்டிலும் மேலானவன். எல்லா உலகங்களும் இவனுடைய (விபூதியில்) கால் பாகம். பரமபதத்தில் இவனுடைய (விபூதியில்) அழிவற்ற முக்கால்பாகமுள்ளது.]

244. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம। யோ வேத நிஹிதம் குஹாயாம்। ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதேதி

[(விகாரமற்றிருப்பதால்) ஸத்யமாயும், ஞானமயமாயும், (அளவற்றதாயிருப்பதால்) அநந்தனுயுமுள்ள ப்ரஹ்மத்தை ஹ்ருதய குஹையிலிருப்பதாக எவனறிகிறானோ, அவன் ஸர்வஜ்ஞனான ப்ரஹ்மத்துடன் கூட எல்லாக் கல்யாணகுணங்களையும் அநுபவிக்கிறான்.]

245. ஆநந்த ஆத்மா ப்ரஹ்ம

[ஆநந்தமயனான ஆத்மாவே ப்ரஹ்மம்.]

---

241. சாந் (8-7-1) 242*. ப்ருஹ (6-5-3) 243. பு-ஸூ-3.
244. தை-ஆந (1-2) 245. தை-ஆந (5)

246. ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்
[ஆநந்தம் ப்ரஹ்மமென்றறிந்தார்.]

247. நிஷ்களங்கோ நிரஞ்ஜநோ நிர்விகல்போ
நிராக்யாதஶ் ஶுத்தோ தேவ ஏகோ நாராயண:।

[களங்கமற்றவனாய், தோஷமற்றவனாய், ப்ராக்ருதமான பேதநாமங்களற்றவனாய், சுத்தனாயிருக்கும் தேவன் நாராயணன் ஒருவனே.]

248. ஸம்ஜ்ஞாயதே யேந ததஸ்ததோஷம்
ஶுத்தம் பரம் நிர்மலமேகரூபம்।
ஸந்த்ருச்யதே வாப்யதிகம்யதே வா
தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம்॥

[எந்த அறிவினால், தோஷமற்றதும், சுத்தமானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப்பரவஸ்து அறியப்படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடையப்படுகிறதோ, அதுவே ஜ்ஞாநம்; அதைக் காட்டிலும் வேறானது அஜ்ஞானம்.]

249. ப்ருஹத்த்வாத் ப்ரும்ஹணத்வாச்ச தத் ப்ரஹ்மேத்யபிதீயதே
[பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது அது.]

250. அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே।
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே॥

[விகாரமற்றவனாய், சுத்தனாய், நித்யனாய், பரமாத்மாவாய், எப்போதும் ஒருபடிப்பட்ட ரூபத்தை உடையவனாய், எல்லாரையும் ஜயிப்பவனான விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.]

251. ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:।
அநிச்சயாऽபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக:॥

[கெட்ட மனத்தரால் (விருப்பமில்லாமல்) நினைக்கப்பட்டபோதிலும் ஹரியானவன் பாபங்களைப் போக்கடிக்கிறான். விருப்பமில்லாமல் தொடப்பட்டபோதிலும் நெருப்பு சுட்டேதீருமன்றோ.]

252. த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா।
த்வயைதத் விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம்॥

---

246. தை-ப்ருகு (6) 247. நாராயணோபநிஷத்-2. 250. வி. பு. (1-2-1)
251. ஹர்யஷ்டகம். 252. வி. பு. (1-9-126)

[தாயே! எல்லாவுலகங்கட்கும் நீ அன்னை; தேவனாகிய ஹரி தந்தை. உன்னாலும் விஷ்ணுவாலும் இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது.]

253. பித்ருமாத்ரு ஸுத ப்ராத்ரு தார மித்ராதயோऽபி வா।
ஏகைகபலலாபாய ஸர்வலாபாய கேசவ: ॥

[தந்தை, தாய், மகன் ஸஹோதரன், மனைவி, நண்பன் முதலானோர், ஒவ்வொரு பலனை அடைவதின்பொருட்டாவர்கள். கேசவன் எல்லாப் பலன்களையும் அடைவதற்காக ஏற்பட்டவன்.]

253*. 101-வது ப்ரமாணம் காண்க.

254. ப்ரஹ்மாணமிந்த்ரம் ருத்ரஞ்ச யமம் வருணமேவ ச।
ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத் ஹரிரிதீர்யதே॥

[பிரமனையும், இந்திரனையும், உருத்திரனையும், யமனையும், வருணனையும் பலாத்கரித்து ஸம்ஹரிக்கிறானாகையால் ஹரி யெனப்படுகிறான்.]

255&256. ரக்ஷது த்வாமசேஷாணாம் பூதாநாம் ப்ரபவோ ஹரி:।
யஸ்ய நாபிஸமுத்பூதபங்கஜாதபவஜ் ஜகத்॥

[எவனுடைய நாபிக்கமலத்திலிருந்து உலகம் உண்டாயிற்றோ, ஸர்வ பூதகாரணனான அந்த ஹரி உன்னை ரக்ஷிக்கட்டும்.]

257. நராஜ்ஜாதாநி தத்த்வாநி நாராணீதி ததோ விது:।
தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ॥

[நரனாகிற பகவானிடமிருந்து உண்டானவை தத்துவங்களெல்லாம். ஆகையால் அவற்றை நாரங்களென்று அறிகின்றனர். அவையே அவனுக்கு இருப்பிடமாயின. ஆகையால் அவன் நாராயணன் என்று எண்ணப்படுகிறான்.]

193. ஆபோ நாரா இதி ப்ரரோக்தா ஆபோ வை நரஸூநவ:।
தா யதஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:॥

[ஜலம் நாரமெனப்படுகிறது. நரனாகிற பகவானிடமிருந்து உண்டானதன்றோ அது. அந்த ஜலம் அவனுக்கு முதலில் இருப்பிடமாயிற்று. ஆகையால் அவன் நாராயணனென்று எண்ணப்படுகிறான்.]

258. விச்வம் நாராயணம் ஹரிம்

[உலகிற்கெல்லாம் அந்தர்யாமியாயும், ஸம்ஹாரகனாகவுமிருப்பவன் நாராயணனே.]

---

254. ஹர்யஷ்டகம். 255&256. வி. பு. (5-5-14) 257. பார-ஆது (186-7) 193. மநு (1-10) 258. தை-நா (11)

259. ஈஶாநாம் ஜகதாமதீஶதயிதாம் நித்யாநபாயாம் ஶ்ரியம்
ஸம்ஶ்ரித்யாஶ்ரயணோசிதாகிலகுணஸ்யாங்க்ரீ ஹரேராஶ்ரயே।
இஷ்டோபாயதயா ஶ்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
கர்த்தும் தாஸ்யமஶேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:॥

[உலகிற்கு ஈச்வரியாய், ஸர்வேச்வரனுக்குப் பத்னியாய், என்றும் அகலகில்லாதவளான பிராட்டியை (புருஷகாரமாக) ஆச்ரயித்து, (உபாயமாக) ஆச்ரயிக்கத்தகுந்த எல்லா குணங்களையுமுடைய ஹரியினுடைய திருவடியிணைகளை இஷ்டோபாயமாகப் பற்றுகிறேன். பிராட்டியுடன் கூடிய ஆத்மேச்வரனை பகவானிடம், தடையற்றதாய் ஒழிவில்காலமெல்லாம் வழுவிலா அடிமை செய்யவேண்டுமென்று மமகாரமற்றவனாய்ப் பிரார்த்திக்கிறேன்.]

260. மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸ: ஸ்வரூபம் கதி:
கம்யம் ஶிக்ஷிதமீக்ஷிதேந புரத: பஶ்சாதபி ஸ்தாநத:।
ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதா வ்ருத்திஶ்ச நாந்யோசிதா
தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதிதம் ஸ்வஸ்யாபி நார்ஹம் தத:॥

[மந்த்ரராஜமான திருமந்திரத்தில் நடுவிலுள்ள 'நம:' என்னும் சொல்லை முன்னும் பின்னும் கூட்டியும், இருந்தபடியும் பார்க்கும்போது ஜீவனுடைய ஸ்வரூபம், உபாயம், பலம் என்னும் மூன்றும் சிக்ஷிக்கப்படுகிறது. ஸ்வாதந்த்ர்யம், தன்னை ரக்ஷித்தல், ஸ்வரூபாநுரூபமான கைங்கரியம் ஆகிய இவை வேறொருவருக்கும் பொருந்தமாட்டா, அந்த ஹரிக்கே பொருந்தும் என்று பிரித்துச் சொல்லப்படுகிறது. ஆகையால் இவை தனக்கும் பொருந்தமாட்டா.]

261. ஶக்தய: பஞ்ச விக்யாதா: பஞ்சோபநிஷதாக்யயா

[பஞ்சோபநிஷத்துக்களென்று பெயர்பெற்ற ஐந்து சக்திகள் ப்ரஸித்திபெற்றவை.]

262- பரமேஷ்டீ புமாந் விச்வோ நிவ்ருத்திஸ் ஸர்வ ஏவ ஹி।
பரமேஷ்டீ ஸ்ம்ருத: ஶப்தே ஸ்பர்ஶே து புருஷ: ஸ்ம்ருத:॥
விச்வாத்மா தேஜஸி ப்ரோக்தோ நிவ்ருத்த்யாத்மா ரஸே ஸ்ம்ருத:।
ஸர்வாத்மா கதிதோ கந்தே விஷயே புருஷஸ் ஸ்ம்ருத:॥

[பரமேஷ்டி, புமாந், விச்வன், நிவ்ருத்தி, ஸர்வன் என்னும் ஐந்தும் பஞ்சோபனிஷத்துக்களாம். பரமேஷ்டி சப்தத்தையும், புமான் ஸ்பர்சத்தையும், விச்வன் ரூபத்தையும், நிவ்ருத்தி ரஸத்தையும்,

---

259. அஷ்டச்லோகி-6. 260. அட்டச்லோகி-2. 261to63. பாஞ்சராத்ரம்

ஸர்வன் கந்தத்தையும், புருஷன் விஷயத்தையும் உடையனவாகச் சொல்லப்படுகிறது.]

263. பஞ்சைதா: ஶக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந: ।
அஶேஷஜகதாதாரா: பதே திவ்யே வ்யவஸ்திதா: ॥

[(இவைகளைக்காட்டிலும்) மேலானவனான பரமாத்மாவுக்கு சக்திகளாகச் சொல்லப்படும் இவ்வைந்தும் பரமபதத்திலிருந்துகொண்டு எல்லா உலகையும் தாங்குகின்றன.]

264. ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதோऽஸ்திஸம்பவா
[அவனுக்கு மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு ஆகிய இவற்றாலுண்டான ப்ரக்ருதிஸம்பந்தமுள்ள உடம்பு இல்லை.]

265. ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோऽஸ்ய பரமாத்மந:
[இந்தப் பரமாத்மாவின் திருமேனி பஞ்சபூதங்களுடைய சேர்க்கையால் உண்டானதன்று.]

266. பஞ்சஶக்திமயோ தேவ:
[ஐந்து சக்திகளை உருவாகக்கொண்ட தேவன்.]

267. ஸத்த்வம் விஷ்ணுப்ரகாஶகம்
[ஸத்வகுணமானது விஷ்ணுவைப் பிரகாசிப்பிப்பது.]

268. தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம்
[அந்த முக்குணங்களில் ஸத்வகுணமானது நிர்மலமாயிருக்கையால் (வஸ்துக்களின் உண்மையை) அறிவிப்பது. ஆரோக்யத்தை அளிப்பது.]

269. ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ஶ்ரிததுரிதஹரம் தக்ஷிணம் குஞ்சயித்வா
ஜாநுந்யாதாய ஸவ்யேதரமிதரபுஜம் நாகபோகே நிதாய ।
பஶ்சாத் பாஹுத்வயேந ப்ரதிபடஶமநே தாரயந் ஶங்கசக்ரே
தேவீபூஷாதிஜுஷ்டோ ஜநயது ஜகதாம் ஶர்ம வைகுண்டநாத: ॥

[அடியார் துன்பத்தைப்போக்கும் இடது திருவடியை நீட்டி, வலது திருவடியை மடக்கி, வலது கையை (வலது) முழங்காலில் பொருத்தி, இடது கையை ஆதிசேஷன் மேல் வைத்து, பின்னுள்ள இரண்டு கைகளால் விரோதிகளை நிரஸிக்கும் சங்கசக்கரங்களை தரித்து, தேவிமார், (கௌஸ்துபம் முதலான) ஆபரணங்கள் முதலியவற்றால்

264. வராஹபுராணம் (34-40) 265. பார-சாந்தி (206-60) 266. பாஞ்சராத்ரம். 268. கீதை (14-6) 269. அஷ்டாக்ஷரத்யாகச்லோகம்.

ஸேவிக்கப்பெற்றவனாய் விளங்கும் வைகுண்டநாதன் உலகிற்கு ஸுகத்தை அளிப்பானாக.]

270. யத்ர தூமஸ் தத்ராக்நி:

[எங்கு புகையுள்ளதோ அங்கு நெருப்பிருக்கும்.]

271. தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:

[விஷ்ணுவினுடையதான அந்தப் பரமபதத்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கின்றனர்.]

272. பச்யந்தி ச ஸதா தேவம் நேத்ரைர் ஜ்ஞாநே

[அறிவாகிற கண்களாலே தேவனை எப்போதும் காண்கின்றனர்.]

273. அஜாயமாநோ பஹுதா விஜாயதே

[பிறப்பற்றவனாயினும் பலபடியாகப் பிறக்கிறான் பரமபுருஷன்.]

274. பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந

[அர்ஜுநா! எனக்கும் உனக்கும் பல ஜன்மங்கள் கழிந்தன.]

275. யஸ்ய திவ்யம் ஹி தத் ரூபம் ஹீயதே வர்த்ததே ந ச

[எவனுடைய அந்த திவ்யரூபமானது குறைவதும் வளர்வதுமில்லையோ.....]

276. அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥

[பிறப்பற்றவனாயும், அழிவற்றவனாயும், ஸர்வேச்வரனாயுமிருந்தபோதிலும், என்னுடைய ஸங்கல்பத்தால் என் ஸ்வபாவத்துடன் கூடியே அவதரிக்கிறேன்.]

277. ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: ।
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸநாதந: ॥

[கொழுத்தவனான ராவணனுடைய வதத்தை விரும்பும் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டவரும் பழமையானவருமான விஷ்ணு மனுஷ்ய லோகத்தில் ராமனாகப் பிறந்தார்.]

278. கிமாத்மிகா பகவதோ வ்யக்தி: ? । யதாத்மகோ பகவாந் । கிமாத்மகோ பகவாந் ? । ஜ்ஞாநாத்மகோ பகவாந் ॥

---

270. தார்க்கிகவாக்யம். 271. ஸாமவேதம் (3-18-2-4) 273. பு. ஸூ (2-4)
274. கீதை (4-5) 276. கீதை (4-6) 277. ரா-அ (1-7) 278. பாஞ்சராத்ரம்

[பகவானுடைய திருமேனி எத்தாலானது? பகவான் எவ்வுருவாயிருக்கிறானோ அத்தாலானது. பகவான் எவ்வுருவாயிருக்கிறான்? ஞானமயனாயிருக்கிறான் பகவான்.]

279. நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா
[நீலமேகங்கொண்ட மின்னல்போல் ஒளிவிடுவது (திருமேனி).]

280. தம் த்ருஷ்ட்வா தே ததா தேவா: ஶங்கசக்ரகதாதரம்।
அபூர்வ ரூபஸம்ஸ்தானம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்॥
[சங்கசக்ரகதாதரனாய், அபூர்வமான திருமேனி அமைப்பையுடையவனாய், உறுதியானவனாய், தேஜோராசியான அந்த பகவானைக் கண்ட தேவர்கள் (துதிக்கத் தொடங்கினர்.)]

281. ஸ்தோ-ர-36.

282. ஸ்வோசித விவித விசித்ராநந்தாச்சர்ய நித்ய நிரவத்ய
நிரதிஶயஸுகந்த நிரதிஶய ஸுகஸ்பர்ஶ நிரதிஶயௌஜ்
ஜ்வல்ய கிரீட மகுட சூடாவதம்ஸ மகரகுண்டல
க்ரைவேயக ஹார கேயூர கடக ஶ்ரீவத்ஸ கௌஸ்துப
முக்தாதாமோதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண
நூபுராத்யபரிமித திவ்யபூஷண
[தனக்குத் தகுந்ததாய் விதவிதமானதாய், விசித்ரமானதாய், அளவற்ற ஆச்சரியத்தை அளிப்பதாய், நித்யமாய், தோஷமற்றதாய், ஒப்பற்ற நறுமணத்தையும், நல்ல ஸ்பர்சத்தையும், ஒளியையுமுடையதான கிரீடம், மகுடம், சூடாவதம்ஸம், மகரகுண்டலங்கள், கழுத்தணி, ஹாரம், தோள்வளை, கடகம், ஶ்ரீவத்ஸம், கௌஸ்துபம், முத்து வடம், உதரபந்தனம், பீதாம்பரம், அரைநாண், சிலம்பு முதலிய கணக்கற்ற திவ்யாபரணங்களையுடையவனே.]

283. ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோ஽ஸ்மி க்ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரதம்
ஶாம்யாமி பரிநிர்வாமி ஸுகம் மாமேதி கேவலம்
[கோடையில் குளிர்ந்த குளத்தில் குடைந்தாடுவதுபோல், இந்த ப்ரஹ்மத்தினுள் குடைந்தாடுகிறேன். அதனால் சாந்தனாகிறேன்; தாபம் ஆறினவனாகிறேன்; ஸுகத்தையே அடைகிறேன்.]

284. க்வ யௌவனோந்முகீபூத ஸுகுமாரதநுர் ஹரி:।
க்வ வஜ்ரகடிநாபோக ஶரீரோ஽யம் மஹாஸுர:॥

---

279. தை-நா (11) 280. வி. பு. (1-9-67) 282. ஶரணாகதிகத்யம்
284. வி. பு. (5-20-60) 283. பார-மோக்ஷ (4-50)

[யௌவனத்தை நோக்கிநிற்கும் ஸௌகுமார்யத்துடன்கூடிய தேஹத்தையுடைய கண்ணனெங்கே? வஜ்ரம்போல் கடினமான சரீரத்தையுடைய இவ்வஸுரனெங்கே?]

285. ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:

[(பரமாத்மா) எல்லா கந்தங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.]

286. ரங்கபர்த்துரபி லோசநசர்ச்சாம்
ஸாஹஸாவலிஷு லேகயமாநம் ।
புஷ்பஹாஸ இதி நாம துஹாநம்
ஸௌகுமார்ய மதிவாங்மநஸம் ந: ॥

[(தன்மேல்) கண்கள் படுவதையும் ஸாஹஸ காரியங்களின் வரிசைகளிலே எழுதும்படி செய்வதும், 'புஷ்பஹாஸ:' என்கிற திருநாமத்தை விளைவிப்பதுமான பெரியபெருமாளுடைய ஸௌகுமார்யமானது நம்முடைய வாக்குக்கும், மனஸ்ஸுக்கும் விஷயமன்று.]

287. ச்லோகமும் பொருளும் மூலத்திலேயே காண்க.

288. யுவாகுமார:

[யௌவனத்தையுடையவனாகவும், சிறிது பாலனாகவும் இருப்பவன். (யுவா அகுமார: என்று பதச்சேதம். 'அகுமார:' என்றவிடத்திலுள்ள 'நஞ்' ஈஷத் (சிறிது) என்னுமர்த்தத்தில் பிரயோகிக்கப்பட்டுள்ளது.)]

289. ஸமஸ்தகல்யாணகுணாத்மகோऽஸௌ
ஸ்வசக்திலேசோத்த்ருதபூதஸர்க்க: ।
இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஸ்
ஸம்ஸாதிதாऽசேஷஜகத்திதோऽஸௌ ॥

[இந்த பகவான் ஸகலகல்யாணகுணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய சக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே தரிக்கப்பட்ட பூதங்களை உடையவன்; இச்சையினாலேயே எடுக்கப்பட்டவையும், இஷ்டமானவையுமான பல தேஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜகத்துக்கும் நன்மையைச் செய்பவன்.]

290. புருஷம் க்ருஷ்ணபிங்களம்

[கறுப்பும், மஞ்சளும் கலந்த உருவையுடைய புருஷன்.]

---

285. சாந் (3-14-2) 286. ர-ஸ்த (1-88) 287. ர-ஸ்த (1-89)
288. ருக்வே-ஆ (2-8-25) 289. வி. பு. (6-5-84) 290. தை-நா (12)

291. கா த்வந்யா த்வாம் ருதே தேவி ஸர்வயஜ்ஞமயம் வபு:।
அத்யாஸ்தே தேவதேவஸ்ய யோகிசிந்த்யம் கதாப்ருத:॥

[ஹே தேவி! கதையை தரித்தவனும், தேவதேவனுமான எம்பெருமானுடைய யோகிகளால் நினைக்கத்தக்கதும், ஸர்வயஜ்ஞமயமுமான சரீரத்தில் உன்னைத் தவிர வேறு எவள் இருக்கிறாள்?.]

292. த்யேஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:।
கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதஶங்கசக்ர:।

[ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவனும், கமலாஸனத்தில் வீற்றிருப்பவனும், தோள்வளை, மகரகுண்டலம், கிரீடம், ஹாரம், இவைகளை உடையவனும், ஸுவர்ணமயமான சரீரத்தை உடையவனும், சங்கசக்ரங்களை தரித்தவனுமான நாராயணன் எப்போதும் தியானிக்கத்தக்கவன்.]

293. கிரீடகுண்டலதரம் மித்ராணுமபயப்ரதம்
[கிரீடகுண்டலங்களை தரித்திருப்பவனும், நண்பர்களுக்கு அபயமளிப்பவனுமான (பகவான்).]

294. ஸதா த்யேயம்
[எப்போதும் நினைக்கத்தக்கது.]

295. ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந॥

[அர்ஜுனா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும் சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தேஹத்தை விட்டு மறு ஜன்மம் அடையான்; என்னை அடைகிறான்.]

295*. பஶ்ய மே பார்த்த ரூபாணி ஶதஶோऽத ஸஹஸ்ரஶ:॥
[அர்ஜுனா! என்னுடைய நூறாயிரக்கணக்கான உருவங்களைக் காண்பாயாக.]

296 க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிஶாமய

291. வி. பு. (1-9-122). 292. நாரஸிம்ஹபுராணம். 295. கீதை (4-9). 295*. கீதை (11-5). 296. வி. பு. (1-2-18).

[சிறுவனைப் போலே விளையாடும் அந்த பகவானுடைய (ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளாகிற) செயல்களைக் கேட்பாயாக.]

297. நாகாரணாத் காரணாத் வா காரணாகாரணாந் ந ச।
ஶரீரக்ரஹணம் வ்யாபிந் தர்மத்ராணாய கேவலம்॥

[ஸர்வவ்யாபியே! நீ சரீரத்துடன் பிறப்பது ஸுகத்தின் பொருட்டாவது, துக்கத்தின் பொருட்டாவது, ஸுகதுக்கச் சேர்க்கையின் பொருட்டாவது ஆவதில்லை. தர்மரக்ஷணத்திற்காகவே உன்பிறப்பு ஏற்பட்டிருக்கிறது.]

298. 20-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

299. பரமாத்மா பரோ யோऽஸௌ நாராயணஸமாஹ்வய:।
தஸ்யாநபாயிநீ ஶக்திர் தேவீ தத்தர்மதர்மிணீ॥

[நாராயணன் என்னும் பெயரையுடையவனாய், மேலானவனாயுள்ள எந்தப் பரமாத்மா ஒருவனிருக்கிறானோ, அவனைவிட்டுப் பிரியாத சக்தியாகவும், அவனுடைய குணங்களையே தன்னிடம் உடையவளாகவுமிருப்பவள் லக்ஷ்மீ தேவி.]

299*. 126-வது ப்ரமாணம் காண்க.

300. அஹந்தா ப்ரஹ்மணஸ் தஸ்ய ஸாऽஹமஸ்மி ஸநாதநீ।
ஆத்மா ஸ ஸர்வபூதாநாமஹம்பூதோ ஹரி: ஸ்ம்ருத:॥
அஹந்தயா விநாऽஹம் ஹி நிருபாக்யோ ந ஸித்த்யதி।
அஹமர்த்தம் விநாऽஹந்தா நிராதாரா ந ஸித்த்யதி॥

[பழமையானவளான நான் ப்ரஹ்மமாகிற அந்த பகவானுக்கு அஹந்தை (நானென்னும் தன்மை) யாயிருக்கிறேன். ஸர்வபூதங்கட்கும் ஆத்மாவான ஹரியானவர் அஹம்பூதராயிருக்கின்றார். அஹந்தையை விட்டு அஹமர்த்தமானது பெயரற்றதாய் ஸித்திக்காது. அஹமர்த்தத்தை விட்டு அஹந்தையானது ஆதாரமற்றதாய் ஸித்திக்காது.]

301. 291-வது ப்ரமாணம் காண்க.

302. 188-வது ப்ரமாணம் காண்க.

303. ராஜராஜோऽகிலஸ்யாஸ்ய விச்வஸ்ய பரமேச்வர:।
காந்தஸ்ய தஸ்ய தேவஸ்ய விஷ்ணோஸ் ஸத்குணஶாலிந:॥

297. வி.பு.(5-1-50) 299. பாஞ்சராத்ரம். 300. லக்ஷ்மீதந்த்ரம் (2-12 & 18) 303. லக்ஷ்மீதந்த்ரம் (17-30 & 31)

தயிதாऽஹம் ஸதா தேவீ ஜ்ஞாநாநந்தமயீ ஸதா ।
அநவத்யாऽநவத்யாங்கீ நித்யம் தத்தர்மதர்மிணீ ॥

[ராஜராஜனுய், இவ்வுலகிற்கெல்லாம் பரமேச்வரனுயிருப்பவன் பகவான். காந்தனுய், நற்குணங்கள் பொருந்தியவனுய், தேவனுன அந்த விஷ்ணுவிற்கு நான் தேவியாய், எப்போதும் பிரியையாய், ஞானநந்தமயியாய், எப்போதும் குற்றமற்ற குணங்களேயும், தேஹத்தையுமுடையவளாய், எப்போதும் அவனுடைய தர்மங்களேயே தர்மமாக உடையவளாயிருப்பவள்.]

304. 227-வது ப்ரமாணம் காண்க.

305. தத்ர திவ்யவபு: ஸ்ரீமாந் தேவதேவோ ஜநார்த்தந: ।
ஆஸ்தே நாராயண: ஸ்ரீமாந் வாஸுதேவஸ் ஸநாதந: ॥

[அங்கு தேவதேவனுய், ஜநார்த்தனன், வாஸுதேவன் என்னும் பெயர்களே உடையவனுய், திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனுய், பிராட்டியுடன் கூடியவனுன ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கிருன்.]

306. 81-வது ப்ரமாணம் காண்க.

307. ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் ॥

[பாற்கடலில் பள்ளிகொண்டவனுன இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப்பாயைவிட்டு மதுராபுரிக்கு வந்திருக்கிருன்.]

308. 60-வது ப்ரமாணம் பார்க்க.

309. வ்யூஹேஷு சைவ ஸர்வேஷு விபவேஷு ச ஸர்வஶ: ।
ததா வ்யூஹீபவத்யேஷா மம சைவாநபாயிநீ ॥

[எல்லா வியூஹங்களிலும், எல்லா விபவங்களிலும், என்னைவிட்டுப் பிரியாதவளாய், இப்பிராட்டியும் அவதாரமெடுக்கிருள்.]

310. தைஸ்தைரநுகுணைர் பாவைர் யாஹம் தேவஸ்ய ஶார்ங்கிண: ।
கரோமி ஸகலம் க்ருத்யம் ஸர்வபாவாநுகாமிநீ ॥

[அந்தந்தத் தன்மைகளோடு கூடி நான் சார்ங்கமென்னும் வில்லாண்ட தேவனை எல்லாத் தன்மைகளிலும் பின் தொடர்ந்தவளாய் எல்லாக் காரியங்களேயும் செய்கிறேன்.]

---

307. ஹரிவம்ஶம் (113-62) 309. பாஞ்சராத்ரம். 310. லக்ஷ்மீ தந்த்ரம் (17-4).

311. குணைர் விலாஸை ரூபைஶ்ச ஸ்வாத்மநா வாऽऽத்மநீச்வரம் ।
நியச்சந்தீம் அகண்டாண்ட நியந்த்ரீஞ்ச ஸ்தும: ஶ்ரியம் ।

[குணங்களாலும், செயல்களாலும், ரூபங்களாலும், தன்னுடைய ஸ்வரூபத்தாலும், தன்னிடத்தில் ஈச்வரனை அடக்கிக்கொண்டிருப்பவளாய் எல்லா அண்டங்களையும் நியமிப்பவளான ஸ்ரீதேவியைத் துதிக்கிறோம்]

311*. ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவதநே ।
த்வதாஶ்லேஷோத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷஸமயே ।
த்வமாஸீர் மாத: ஶ்ரீ: கமிதுரிதமித்தந்த்வவிபவஸ்
ததந்தர்ப்பாவாத் த்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி ॥

[சந்த்ரன்போன்ற திருமுகத்தையுடைய தாயே மஹாலக்ஷ்மி! பரதத்வநிர்ணய காலத்தில் பகவானுடைய இந்த ஸ்வரூபமும் ஸ்வாதந்த்ர்யமும் உம்முடைய ஆலிங்கனப்பெருமையால் உண்டாவதன்றோ. உன் கணவனுடைய ஸ்வரூபத்தையும், ஸ்வபாவத்தையும் விளக்கும் அந்தரங்க விசேஷணமாக ஆகிறாய் நீ. வேதமும் (அவனுடைய ஸ்வரூபநிரூபகபூதையாக) அவனுடன் நீ ஒன்றிநிற்கையால் உன்னைத் தனித்துப் படிப்பதில்லை.]

312. 174-வது ப்ரமாணம் காண்க.

313. ப்ரஶகநபலஜ்யோதிர் ஜ்ஞாநைச்வரீவிஜயப்ரதா-
ப்ரணதவரண ப்ரேமக்ஷேமங்கரத்வபுரஸ்ஸரா: ।
அபி பரிமள: காந்திர் லாவண்யமர்ச்சிரிதீந்திரே
தவ பகவதஶ்சைதே ஸாதாரணா குணராஶய: ॥

[பிராட்டியே! சக்தி, பலம், தேஜஸ், ஞானம், ஐச்வர்யம், விஜயகீர்த்தி ஆச்ரிதர்களை வசீகரித்தல், (அவர்களிடம்) அன்பு, (அவர்கட்கு) நன்மைசெய்தல் முதலான ஆத்மகுணங்களும், நறுமணம், அழகு, லாவண்யம் (ஸமுதாயஶோபை), ஒளி என்னும் தேஹகுணங்களுமாகிய இந்த குணஸமூஹங்கள் உனக்கும், பகவானுக்கும் பொதுவாயுள்ளவை.]

314. அந்யேऽபி யௌவநமுகா யுவயோஸ் ஸமாநா:
ஶ்ரீரங்கமங்களவிஜ்ரும்பணவைஜயந்தி ।
தஸ்மிம்ஸ்தவ த்வயி ச தஸ்ய பரஸ்பரேண
விஸ்தீர்ய தர்ப்பண இவ ப்ரசுரம் ஸ்வதந்தே ॥

---

311. பாஞ்சராத்ரம். 311*. ஸ்ரீகுண-28. 313. ஸ்ரீகுண-32.
314. ஸ்ரீகுண-33.

[திருவரங்கத்தின் மங்களங்களைக் காட்டும் கொடிபோன்ற பிராட்டியே! யௌவனம் முதலிய மற்றும் சில குணங்களும் உங்களிருவர்க்கும் பொதுவாயுள்ளன. உம்முடைய குணங்கள் அவரிடமும், அவருடையவை உம்மிடமும் கண்ணாடியிற்போல் பரஸ்பரம் பிரதிபலித்து மிகவும் ரஸிக்கத்தக்கவைகளாகின்றன.]

315. யுவத்வாதௌ துல்யேऽப்யபரவஶதா ஶத்ருஶமந-
ஸ்திரத்வாதீந் க்ருத்வா பகவதி குணாந் பும்ஸ்த்வஸுலபாந்।
த்வயி ஸ்த்ரீத்வைகாந்தாந் ம்ரதிம பதிபாரார்த்யகருணா
க்ஷமாதீந் வா போக்தும் பவதி யுவயோராத்மநி பிதா॥

[யௌவனம் முதலிய குணங்கள் ஸமானமாயிருந்தபோதிலும், ஸ்வாதந்த்ர்யம், சத்ருநிக்ரஹம், நிலைகுலையாமை முதலான புருஷனுக்குத் தகுந்த குணங்களை பகவானிடமும், தயை, பொறுமை முதலானவைகளை உன்னிடத்திலும் வைத்து அனுபவிப்பதற்கு, உங்களுடைய ஸ்வரூபரூபங்களில் பேதமும் ஸித்திக்கிறது.]

316. தத்ர ஸ்ரக்ஸ்பர்ஶகந்தம் ஸ்புரதுபரிபணாரத்நரோசிர்விதாநம்
விஸ்தீர்யாநந்தபோகம் ததுபரி நயதா விச்வமேகாதிபத்யம்।
தைஸ்தை: காந்தேந ஶாந்தோதிதகுணவிபவைரர்ஹதா த்வாமஸங்க்யை:।
அந்யோந்யாத்வைத நிஷ்டாகநரஸகஹநாந் தேவி பத்நாஸிபோகாந்॥

[தேவியே! அந்தத் திருமாமணி மண்டபத்தில் புஷ்பமாலையினுடையதுபோன்ற ஸ்பர்ச கந்தங்களையுடையதாய், பிரகாசியாநிற்கும் மேலுள்ள படங்களிலுள்ள ரத்னங்களின் காந்திகளாகிற மேற்கட்டியையுடையதாயிருக்கும் ஆதிஶேஷனது உடலாகிற பாயை விரித்து, அதன்மேல் எழுந்தருளியிருந்து உபயவிபூதியையும் ஏகசக்ராதிபத்யம் செய்பவரும், எண்ணிறந்த அந்தந்த சாந்தோதிதாவஸ்தையின் குணாதிசயங்களினால் உமக்குத் தகுந்தவராயிருப்பவருமான உம்முடைய வல்லபனுடன்கூடி, பரஸ்பரம் ஒற்றுமை நிலையினால் மிகுந்த ரஸம் நிறைந்திருக்கும் அநுபவங்களை அனுபவிப்பிக்கிறீர்.]

317. ஸ்கலித கடகமால்யைர் தோர்ப்பிரப்திம் முராரே:
பகவதி ததிமாதம் மத்நத: ஶ்ராந்திஶாந்த்யை।
ப்ரமதம்ருததரங்காவர்த்தத: ப்ராதுராஸீ:
ஸ்மிதநயந ஸுதாபிஸ் ஸிஞ்சதீ சந்த்ரிகேவ॥

315. ஸ்ரீகுண-34. 316. ஸ்ரீகுண-25. 317. ஸ்ரீகுண-49.

[பிராட்டியே! அலையாநின்ற தோள்வளைகளையும் மாலைகளையுமுடைய கைகளாலே பாற்கடலைத் தயிர் கடைவதுபோல் கடைகின்ற முராரியி னுடைய சிரமம் நீங்குவதற்காக, புன்சிரிப்பு, கடாக்ஷங்கள், இவைக ளாகிற அம்ருதங்களாலே நனைத்துக்கொண்டு, சந்திரனுடைய நிலவு போல், சுழன்று வருகிற அமுத அலைச்சுழல்களிலிருந்து நீர் தோன்றினீர்.]

318. யதி மநுஜதிரச்சாம் லீலயா துல்யவ்ருத்தே-
ரநுஜநுரநுரூபா தேவி நாவாதரிஷ்ய: ।
அஸரஸமபவிஷ்யந் நர்ம நாதஸ்ய மாதர்
தரதளதரவிந்தோதந்த காந்தாயதாக்ஷி ॥

[சிறிது மலர்ந்த செந்தாமரையின் உள்ளிதழ்போல் அழகிய திருக் கண்களையுடைய பிராட்டியே! லீலையின் பொருட்டு (தேவ) மனுஷ்ய திர்யக் (ஸ்தாவரங்) களுடன் ஒருபடிப்பட்டவனாய் அவதரிக்கும் ஸ்ரீரங்கநாதனுடைய அவதாரம்தோறும் அநுரூபையாக நீர் அவதரி யாமலிருப்பீராகில், அந்த நாதனுடைய விளையாட்டானது சுவை யற்றுவிடும்.]

319. அநுஜநுரநுரூபரூப சேஷ்டா
ந யதி ஸமாகமமிந்திராऽகரிஷ்யத் ।
அஸரஸமதவாऽப்ரியம்பவிஷ்ணு
த்ருவமகரிஷ்யத ரங்கராஜநர்ம ॥

[ரங்கநாதரே! பிராட்டியானவள் (தேவரீருடைய) அவதாரம்தோறும் தேவரீர்க்கு ஒத்த உருவத்தையும் லீலைகளையும் உடையவளாய்க் கொண்டு சேர்ந்து அவதாரம் செய்யாதிருந்தாளாகில் உம்முடைய (அவதாரமாகிற) விளையாட்டை சுவையற்றதாகவோ அல்லது வெறுக்கத்தக்கதாகவோ செய்திருப்பாள்; இது நிச்சயம்.]

320. 64-வது ப்ரமாணம் காண்க.

320*. 199-வது ப்ரமாணம் காண்க.

321. ப்ரளயஸமயஸுப்தம் ஸ்வம் ஶரீரைகதேஶம்
வரத சிதசிதாக்யம் ஸ்வேச்சயா விஸ்த்ருணந: ।
கசிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூங்வந்
அநுஶிகிநி ஶிகீவ க்ரீடஸி ஸ்ரீஸமக்ஷம் ॥

[வரந்தரும் பெருமாளே! பிரளயகாலத்தில் ஒடுங்கிக்கிடக்கும் தன் திருமேனியின் ஒரு பகுதியை தன் ஸங்கல்பத்தினால் ஜகத்ரூபமாகப்

318. ஸ்ரீகுண-48. 319. ர-ஸ்த (2-49) 321. ர-ஸ்த (2-44)

பரப்பாநின்றுகொண்டு மயிற்பேடையின் எதிரே பல வர்ணங்களை யுடைய தோகையை ஆகாசத்தை அளாவியதுபோல் விரித்து உதறு கின்ற ஆண்மயில்போலப் பிராட்டியின் முன்னிலையில் தேவரீர் விளையாடாநின்றீர்.]

322. ஆத்மந்யாத்மா வபுஷி ச வபுர் வைபவைர் வைபவஞ்சே-
த்யாகாரைஸ்தைரநுகுணதயா ஸர்வபாவாநுயாதா ।
இச்சாரூபாண்யபி பகவதஸ் ஸ்வாதயந்த்யாத்தரூபா
ஹரீர்குர்யாந்நஹி மதுரதாதுக்தஸிந்தோஸ் தரங்காத் ॥

[பகவத்ஸ்வரூபத்தில் தன் ஸ்வரூபமும், (அவனுடைய) தேஹத்தில் (தன்) தேஹமும், (அவனுடைய) விபூதிகளில் தன் வைபவமும் அடங்கும்படி இப்படிப்பட்ட ஆகாரங்களாலே அவனுக்குத் தகுந்த வளாய், அவனுடைய எல்லா நிலைகளையும் பின் தொடருமவளாய், பகவானுடைய இச்சையினால் எடுக்கப்பட்ட அவதாரரூபங்களையும், (அவற்றுக்குப் பொருந்திய) உருவங்களையெடுப்பதன் மூலம் இனிக்கச் செய்பவளான பிராட்டி இனிமையே வடிவாயிருக்கும் (பகவதநுபவ மாகிற) பாற்கடலின் அலைகளிலிருந்து நம்மை விலக்கமாட்டா ளன்றோ.]

323. வாலாக்ர ஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச ।
பாகோ ஜீவஸ்ஸ விஜ்ஞேயஸ் ஸ சாநந்த்யாய கல்பதே ॥

[கோதுமை நுனியின் நூற்றிலொரு பங்கை நூறு கூறிட்டதில் ஒரு பகுதியே ஜீவனென்று அறியத்தக்கவன். அவன் (முக்தியடையும் போது) (ஞானத்தின் மூலம்) அளவற்றவனாகிறான்.]

324. ஏதத் ஜ்ஞேயம் நித்யமேவாத்மஸம்ஸ்த்தம்
நாத: பரம் வேதிதவ்யம் ஹி கிஞ்சித் ।
போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா
ஸர்வம் ப்ரோக்தம் த்ரிவிதம் ப்ரஹ்மமேதத் ॥

[ஆத்மாவினுள் அந்தர்யாமியாயிருக்கும் இந்தப் பரப்ரஹ்மமானது என்றும் அறியத்தகுந்தது. இதைக்காட்டிலும் அறியவேண்டியது வேறொன்றில்லை. அனுபவிப்பவனான ஜீவனுக்கு அந்தர்யாமியாகவும், அனுபவிக்கப்படும் அசித்துக்கு அந்தர்யாமியாகவும், நியமிப்பவனான தன்னுடைய ஸ்வரூபத்தோடு கூடியவனாகவும் ஆகஇப்படி ப்ரஹ்மம் மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது.]

323. ச்வே (5-9) 324. ச்வே (1-12)

325&326. க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:
க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:

[க்ஷரம் எனப்படுவது மூலப்ரக்ருதியாகும்; அழிவற்றவனுயிருக்கையால் அக்ஷரனெனப்படுமவன் போக்தாவான ஜீவனுவன். அசித்தையும் ஜீவனையும் ஒரு தேவன் நியமிக்கிறுன்.]

327. ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்யதே
ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே
பராஸ்ய ஶக்திர் விவிதைவ ச்ரூயதே
ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச ॥

[அவனுக்கு (ப்ராக்ருதமான) சரீரமும் இந்திரியங்களுமில்லை; அவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் காணப்படுவதில்லை. இவனுடைய மேலான சக்தியும், இயற்கையான ஜ்ஞானபலக்ரியைகளும் விதவிதமாகச் சொல்லப்படுகின்றன.]

328. ஏஷோऽணுராத்மா சேதஸா வேதிதவ்ய:
[அணுவாகிற இந்த ஜீவாத்மா மனத்தாலே அறியத் தகுந்தவன்.]

329. த்ரஸரேணுப்ரமாணஸ்தே ரச்மிகோடிவிபூஷிதா:
[(ஞானமயமான) கோடிக்கணக்கான கிரணங்களையுடைய அந்த ஜீவர்கள் த்ரஸரேணுவைப்போல் அளவுள்ளவர்கள்.]

330. ப்ரதீபவதாவேஶஸ் ததா ஹி தர்ஶயதி
[விளக்கைப்போல் (தேசாந்தரத்திலும்) வியாபித்திருத்தல் ஜீவனுக்கும் (அறிவினுல்) முடியும். ('வாலாக்ர' என்று தொடங்கும் சுருதியும்) அப்படியே காண்பிக்கிறதன்றே.]

331. க்ஷீரோதாச் ச்ரீஸ் ஸமுத்பந்நா ச்ரூயதேऽம்ருதமந்தநே ।
ப்ருகோ: க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யேததாஹ கதம் பவாந் ॥

[அம்ருதங்கடைந்தகாலத்தில் பாற்கடலிலிருந்து ஸ்ரீதேவியுண்டானதாகச் சொல்லப்படுகிறது. ப்ருகுவிற்கு க்யாதி என்னும் மனைவியிடம் உண்டானதாகத் தாங்கள் எப்படிச் சொல்லுகிறீர்கள்?.]

332. 60-வது ப்ரமாணம் காண்க.

333. ஸௌம்யாஸௌம்யைர் ஜகத்ரூபைஸ் த்வயைதத் தேவி பூரிதம்

---

325. ச்வே (1-10) 327. ச்வே (6-8) 328. முண்ட (3-1-9)
330. ப்ர-ஸூ (4-4-15) 331. வி. பு. (1-8-16) 333. வி. பு. (1-9-121)

[தேவியே! அழகியதும், க்ரூரமானதுமான உருவங்களால் இவ்வுலக மானது உன்னால் வியாபிக்கப்பட்டுள்ளது.]

334. 252-வது ப்ரமாணம் காண்க.

335. தேவதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா பகவாந் ஹரி: ।
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்யதே பரம் ॥

[மைத்ரேயரே! தேவர், திர்யக் (ஊர்வன), மனுஷ்யர்கள், ஆகிய ஜீவ ராசிகளுள் ஆணாயிருப்பது பகவான் ஹரியின் அம்சம் பெற்றது. பெண்ணாயிருப்பது லக்ஷ்மியின் அம்சம் பெற்றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலானதில்லை.]

335*. 139-வது ப்ரமாணம் காண்க.

336. ஈசாநஸ் ஸர்வவித்யாநாம் ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்

[எல்லா வித்யைகளுக்கும் ஈசன்; எல்லா பூதங்களுக்கும் ஈச்வரன்.]

337. 100-வது ப்ரமாணம் காண்க.

338. அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா

[ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.]

339. ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தரோ யமாத்மா ந
வேத யஸ்யாத்மா சரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி
ஏஷ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத:

[எவனொருவன் ஆத்மாவில் நின்றுகொண்டும், ஆத்மாவினுள்ளிருந்தும் விளங்குகிறானோ, எவனை ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள்நுழைந்து நியமிக்கிறானோ, அந்தப் பரமாத்மாவே, அம்ருதமயனாய், உனக்கும் அந்தர்யாமியாய் விளங்குமவன்.]

340. ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்.

[குழந்தாய்! ஆதியில் ஸத்தாகிற ப்ரஹ்மமாகவே இவ்வுலகம் இருந்தது. ஒன்றாகவே விளங்கிற்று. இரண்டற்றதாய் விளங்கிற்று. (நிமித்த உபாதான ஸஹகாரி காரணங்களாக ப்ரஹ்மமே இருந்தது என்றபடி.)]

341. ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்

---

336. தை-நா (44) 338. யஜு-ஆர (3-11-21) 339. ப்ருஹ (5-7-22)
340. சாந்-உப (6-2-1) 341. ப்ர-ஸூ (1-4-23)

[(ப்ரஹ்மம்) உபாதான காரணமாகவுமாகிறது; (அப்படியிருந்தாலேயே) ஒன்றையறிந்தால் எல்லாமறிந்ததாகும் என்னும் ப்ரதிஜ்ஞையும், ம்ருத்பிண்டகடாதி த்ருஷ்டாந்தமும் ஒட்டுமாகையால்.]

342. ஏஷ ம ஆத்மாऽந்தர்ஹ்ருதயே ஜ்யாயாந் ப்ருதிவ்யா
ஜ்யாயாநந்தரிக்ஷாத் ஜ்யாயாந் திவோ ஜ்யாயாநேப்யோ-
லோகேப்ய:

[ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் இந்த என்னுடைய ஆத்மாவானவன் பூமியைக் காட்டிலும், அந்தரிக்ஷத்தைக் காட்டிலும், தேவலோகத்தைக் காட்டிலும் இவ்வுலகங்களெல்லாவற்றைக் காட்டிலும் பெரியவன்.]

343. யதோ வா இமானி பூதானி ஜாயந்தே। யேந ஜாதானி
ஜீவந்தி। யத் ப்ரயந்த்யபிஸம்விஶந்தி। தத் விஜிஜ்ஞாஸஸ்வ
தத் ப்ரஹ்மேதி॥

[எதனிடமிருந்து இந்த பூதங்கள் பிறக்கின்றனவோ, உண்டானவை எதனால் உயிர் வாழ்கின்றனவோ, ப்ரளயகாலத்தில் எதனிடம் லயிக்கின்றனவோ அதுவே ப்ரஹ்மமென்று அதை அறிவாயாக.]

344. ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத

[அந்த ப்ரஹ்மத்தினிடமிருந்தே பிறக்கையாலும், அதிலேயே லயிக்கையாலும், அதனாலேயே உயிர்வாழ்வதாலும் இவையெல்லாம் ப்ரஹ்மமன்றோ என்று சாந்தனாய் உபாஸிக்கக்கடவன்.]

345. காரணந்து த்யேய:

[காரணவஸ்துவே தியானிக்கத் தக்கது.]

346. அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா

[(கர்மவிசாரத்தின்) பிறகு, அக்காரணத்தாலேயே ப்ரஹ்மத்தை அறிவதில் இச்சை (உண்டாகிறது).]

347. ஜந்மாத்யஸ்ய யத:

[இவ்வுலகின் பிறப்பு முதலியவை எதனிடமிருந்தோ (அதுவே ப்ரஹ்மம்).]

348. ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந:।
இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயண: ஸதா॥

---

342. சாந்-உப (3-14-3) 343. தை-ப்ருகு (1) 344. சாந்-உப (3-14-1)
345. அதர்வசிகை. 346. ப்ர-ஸூ (1-1-1) 347. ப்ர-ஸூ (1-1-2)
348. பார-ஆநு.

[எல்லா சாஸ்திரங்களேயும் ஆராய்ந்து மறுபடியும் மறுபடியும் விசாரித்தாலும், 'நாராயணன் எப்போதும் தியானிக்கத்தக்கவன்' என்னும் பொருளே நன்கு தேறிநிற்கும்.]

349. 292-வது ப்ரமாணம் காண்க.

350. ப்ரயதபாணி: ஶரணமஹம் ப்ரபத்யே।

[கை கூப்பியவனய் நான் சரணமடைகிறேன்.]

351. ஸ்வஸ்திஸம்பாதேஷ்வபயம் நோ அஸ்து

[மங்களங்களுக்கு இடையூறு ஏற்படும்போது எங்களுக்கு பயமின்மை உண்டாகட்டும்.]

352. 258-வது ப்ரமாணம் காண்க.

353. வாஸுதேவம் ஜகத்யோநிம் நௌமி நாராயணம் ஹரிம்

[வாஸுதேவஹரி சப்தவாச்யனய், ஜகத்காரணனை ஹரியை நமஸ்கரிக்கிறேன்.]

354. ரக்ஷிஷ்யதி ஹரி: ஸ்ரீமாநாஶ்ரிதாநிதி நிஶ்சயாத்

[ஸ்ரீமானை ஹரி அடியார்களேக் காத்தருள்வான் என்னும் நிச்சயத்தினுல்........]

355. நாராயணாய நாதாய ஹரயே ஸ்ரீமதே நம:

[ஹரிஶப்தவாச்யனை ஸ்ரீமந்நாராயணனுகிற ஸ்வாமிக்கு நமஸ்காரம்.]

356. அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா
ஸ்வபக்தேர் பூம்நா வா ஜகதி கதிமந்யாமவிதுஷாம்।
கதிர் கம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வய மநோ:
ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ கலு பகவாந் ஶௌநகமுநி:॥

[பகவத்விஷயத்தில் அறியாமையினுலாவது, நன்முக அறிந்திருப்பதனுலேயாவது, தன் பக்தியின் ஆதிக்யத்தினுலேயாவது உலகில் வேறு உபாயத்தை அறியாதவர்களுக்கு 'உபாயமும் உபேயமும் இந்த ஹரியே' என்று 'ஜிதந்தே' என்று பெயரையுடைய மந்த்ரத்தின் ரஹஸ்யத்தை பகவான் சௌனகமுனி வெளிப்படுத்தினுன்ரே.]

357, 358&359. 162-வது ப்ரமாணம் காண்க.

360. ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம்।
ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ரஸ் தம் வந்தே யாமுநாஹ்வயம்॥

---

356. பட்டர் முக்தகம். 360. ஆளவந்தார் தனியன்.

[அறியவரிதான வேதாந்தார்த்தத்தை அனைவர்க்கும் ரஸிக்கச் செய்துகொண்டு ஸ்தோத்ரம் செய்தருளிய யாமுனமுனிவரைத் துதிக்கிறேன்.]

[*பின்வரும் இரண்டு ப்ரமாணங்களும் விடப்பட்டுவிட்டன. அவ்விடத்தில் குறித்துக்கொள்வது.]

76. ஹேலாயாமகிலம் சராசரமிதம் போகேவிபூதி: பரா
தந்யாஸ்தே பரிசாரகர்மணி ஸதா பஶ்யந்தி யே ஸூரய:।
ஸ்ரீரங்கேச்வரதேவி கேவலக்ருபாநிர்வாஹ்யவர்க்கே வயம்
கோஷ்டீவே பரம: புமாந் பரிகரா ஹ்யேதே தவ ஸ்பாரணே॥

[ஸ்ரீரங்கநாயகியே! அசைவதும் அசையாததுமடங்கிய இவ்வுலகெல்லாம் உன் விளையாட்டின்பொருட்டாகிறது. மேலான நித்யவிபூதி உன் போகத்திற்காக இருக்கிறது. பாக்யசாலிகளாய், எப்போதும் உங்களைக் கண்டுகொண்டிருக்கும் நித்யஸூரிகள் உனக்குக் கைங்கரியம் செய்வதற்காக ஏற்பட்டவர்கள். உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினலே ரக்ஷிக்கப்படுமவர்களின் கோஷ்டியிலே நாங்களும் நிற்கிறோம். பரமபுருஷன் உனக்கு ஸ்வாமியாயிருக்கிறான். இவையெல்லாம் உன் பெருமையை வெளிப்படுத்தும் பரிகரங்களாயுள்ளன.]

77. 63-வது ப்ரமாணம் காண்க.

சது:ச்லோகீ வ்யாக்யான ப்ரமாணத்திரட்டு முற்றிற்று.
நாயனாராச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

76. ஸ்ரீகுண-22.

## சது:ச்லோகீ வ்யாக்யான ப்ரமாணத்திரட்டு அட்டவணை.

# பிழை திருத்தம்.

## முகவுரை

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 24 | ததீனைச்வர்யத்வமும் | ததீனைச்வர்யத்வமுக்தம் |
| 5 | 7 | ஸ்வரூபை | ஸ்வபாவை |
| 6 | 30 | அவனுக்கு | தனக்கு |

## வ்யாக்யானம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 13 | தத்விஶேஷமாக | விஶேஷமாக |
| 3 | 14 | விஷயத்திலே | தத்விஷயத்திலே |
| 4 | 22 | ஶேஷத்வத்தையும் | ஶேஷித்வத்தையும் |
| 15 | 11 | பரிசாரகை | பரிசாரிகை |
| 15 | 12 | மாஶிஂரய | மாஶிஂரிய |
| 19 | 23 | 94 | 95 |
| 19 | 25 | 95 | 94 |
| 23 | 25 | 103 | 102 |
| 24 | 10 | என்ற | என்று |
| 24 | 29 | 100 | 109 |
| 24 | 30 | வீர்யஶக்தி | வீர்யதேஜ: |
| 25 | 29 | வாசே | வாசோ |
| 30 | 17 | 134 | 135 |
| 38 | 6 | ரேச்வரீம் | ரேச்வரீ |
| 44 | 13 | ஆப: | தம: |
| 49 | 1 | 202 | 220 |
| 51 | 27 | 222 | 223 |
| 58 | 28 | அஶேஷாணும் ஹரி | அஶேஷாணும் |
| 65 | 29 | 275 | 295* |
| 70 | 18 | விபவைஸ் | விபவஸ் |
| 70 | 26 | யுத்வத் | யுவத் |
| 79 | 7 | பரிமாப்ய | பரிஸமாப்ய |
| 79 | 30 | 348 | 340 |
| 134 | 16 | 226 | 262 |

